# விடுதலை

விடுதலைக்காய் ஏந்திய துப்பாக்கிகளே
தமிழ் தலைவர்களை படுகொலைகள் புரிந்தன
ஆயுதமோதல்களால் விடுதலை இயங்கங்களே
தம்முள் போரிட்டு அழிந்தன



உலகெங்கும் அகதிகளாய் தமிழன் நிலை
நாதியற்ற தமிழனுக்காய் குரல் கொடுக்க
யாருமற்ற நிலை? தர்மம், நீதி கேள்வியான நிலை,
தாய்க்குலமோ கண்ணீர்த் தவத்தில் நிலைத்த நிலை

தாய்களின் விழிகளில் கண்ணீர் மாலை
ஊரோ மயானமான சோக நிலை
அமைதிக்காய் ஏங்கும் நல் இதயங்கள்
துப்பாக்கியால் விடியும் துர்ப்பாக்கிய பொழுதுகள்

சொந்தங்களை சொந்தங்களே அழித்த கொடுமை
பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினால் தணியுங்கள்
பெருமான்கள் புத்தர், இயேசுவின் போதனைகள்

இழவில்லாத வீடில்லை, மரணத்திற்கு
இனபேதங்களில்லை, என்றுமுள்ள
தர்மம் மாறாத நிலை-அராஜகமோ
அசுர நிலை, அன்போ தெய்வ நிலை

கண்ணீரும், குருதியும் நிறம் மாறவில்லை
சிங்கள தமிழ் குருதியில் பேதங்களில்லை
இருவர் DNA க்களும் ஒன்றான நிலை
பின் ஏனிந்த அவல நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-15-01-2024

# அச்சமில்லை அச்சமில்லை

---

வெஞ்சினம் பூண்டெழுந்த அஞ்சாத் தமிழினம்
அடிமையாய், பேடியாய் அஞ்சி வாழ்வதோ?-இல்லை
நெஞ்சினில் விடுதலை நெருப்பேந்தி
அஞ்சாது தமிழ் ஈழ விடுதலைக்காய் போராடி வீழ்வதோ?

அடிமை விலங்கறுத்து எம் இறைமையை நாம் பெறும்வரை
எமக்கோர் சுதந்திர தாயகம் அமையும்வரை
அணையாது எரியட்டும் விடுதலை வேள்வியின் ஹோமத்-தீ
தணியாது ஒலிக்கட்டும் சுதந்திரயாகத்தின் மந்திர ஒலி

அஞ்சிவாழும் அலிகளுக்கும் பேடிகளுக்கும் வாழ்வில்  சாவு பலமுறை
அச்சமறியா வீரர் மாள்வதோ வாழ்வில் ஒருமுறை-தமிழா
தமிழ் ஈழ விடுதலைக்காய் துஞ்சிடல் பெரும்பேறே-சிங்களத்தை
தொழுது பேடிகளாய் அஞ்சி வாழ்ந்திடல் வெட்கக்கேடே

அறிவாய்  தமிழா பாராண்ட பேராண்மைத் தமிழா
கரும்புலியாய் எழுந்து எரிமலையாய்க் குமுறு-
எரி நரகே நீ விளையாடும் பூமி
விடம் சூடி ஆடும் ருத்திர தாண்டவமே
உன்தன் ஓயாத விடுதலை வேள்வி

***ஆண்ட பரம்பரை  மீண்டுமொருமுறை***
***தம் ஆளுமுரிமை பெறும்வரை-நெஞ்சினில்***
***மூண்ட சுதந்திர நெருப்புத்தான் அணையுமோ?***
***உயிர் பூண்ட பெருந்தவமும்தான் கலையுமோ?***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29.3.2023*

# அச்சம்

அதிரடிப்படையின் வருகை சொல்ல
தெரு நாய்கள் குரைக்கும்-
நடுநிசியில் நடுங்கி பேய்கள் கனைக்கும்-
காரிருளில் கண்மூடி
சாலை விளக்குகள் உயிரிழக்கும்

நாளை பேறுடையாள் யாரென்று
பேதைகளின் கண்ணீர் சொல்லும்,
ஊளையிட்டு நாய்கள் சொந்தம் சொல்லும்

கதிரவன் வருமுன் கரையும் காகங்கள் சொல்லும்
கருகிய உடலும், கரியாய் கிடக்கும் டயர்களும்
எம் துயரம் சொல்லும்

தமிழ் ஈழத்தில் எங்கள் தேசத்தில்
காலைப்பொழுது அழுது விடியும்
வீசும் தென்றல் கருகி மணக்கும்
வெண்மேகமும்
தூறல் மழையாய் கண்ணீர் பொழிந்தே
எம் துயரம் பகிரும்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# ஆடை

தேசமெங்கும் ஆடைத்தொழிற்சாலைகள்
அகதிமுகாம்களிலோ மாற்றுத்துணியின்றி
அழுக்கு கந்தையோடு நாளும்
அல்லாடும் தமிழ் அகதிகள்.

## விடிவு?

விடிவுக்காய் ஏந்திய துப்பாக்கி வெளிச்சத்தில்
விட்டில்களும் விளையாடி மடிந்த துயரமுமிங்கே
அடிமை மோகத்தின் சரசசல்லாபத்தால்
கண்ணகிகளும் கணிகை மாதவிகளான அவலமுமிங்கே

குண்டு துளைத்த உடலங்களும்-குற்றுயிரோடு
சித்திரவதையால் நொந்த காயங்களும்-தீ
உண்ணத் தெருக்களில் காட்சியானதே?
கைதும், கப்பமும் தொடர் கதையானதே

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# அன்னையர் தவம்

கங்கைகளும், காட்டாறுகளும் பொங்கிப் பாயும் ஈழத்தே,
அன்னையர், விதவைத் தங்கையரின் அழுகைச் சத்தங்கள்
கண்ணீர் பிரவாகங்கள், கணவனையும்-காணாமற்போன
பிள்ளைகளையும்- தேடி கண்ணீர்த் தவமிருக்கும்
தாய்குலத்தின் துயரங்கள், கல்மனதையும்
கரையவைக்கும் நிகழ்கால நிஜங்கள்

வீடு வாசல்களும் வாழ்வாதாரமும் இழந்து
நாதியற்ற அகதிகளாய் வறுமையில் வாடி-நாளும்
கண்ணீரில் எரியும் கற்புரதீபங்கள்

இறைவனும் மௌனித்திருக்க-இதயமோ
சோகச் சுனாமியால் இடிந்து கிடக்க
யார் தருவார்-இந்தப் பேதைகளுக்கு அமைதி.?

முறிந்த பனைகளும்- அடர்ந்த காடும் வாழிடத்தை
மூடி மறைக்க-இராணுவத்தின்-முட்கம்பி வேலியோ-
உரிமையை முற்றாய் மறுத்துரைக்க, அறுந்த தாலியும்-
கலைந்த குங்குமம் அமங்கலத்தை சுட்டி நிற்க
பசி வாட்டிட – அழும் குழந்தைகளுக்காய்
பிடியரிசி கேட்டு யாரிடம் போவாள் பேதை.

மின்னும் கோபுர கலசங்களும் ஒளிரும் சிலுவைகளும்
எட்டாத உயரத்தில் நிற்க ஒளிரும் வண்ண
விளக்குகளோடும், அதிரும் வாண வேடிக்கைகளோடும்
கோயில் திருவிழாக்கள்

புண்பட்ட இதயங்களோடும் பசிவாட்டிடும்
வயிறுகளோடும் ஏழைகள்-இன்றும் இலாசர்களாய்
செல்வர் வீட்டு வாயில்களல் இரந்துநிற்க
சத்துணவால் கொழுத்த செல்லப் பிராணிகளோ
ஏழைகளை குரைத்து விரட்டிட தேவாலயங்களில்-ஏழை
இலாசரின் கதைகேட்டும் இரங்காத மதவாதச் செல்வர்கள்

காற்றில் சிலுவைகள் வரைந்து கண்ணீர்த்
தவமிருக்கும் ஏழைகளுக்கு ஆசிவழங்கும் அருட் தந்தையரும்
-தம்ம உபதேசமாய் கீசகோசமியின் கதை சொல்லும்
பிக்குகளும் மலிந்த தேசத்தில் ஆலயமணிகளும்,
பிரித் ஓலிகளும் ஆண்டவனை அழைத்து களைத்திட-
“இறைவனும்” காணமற்போன அவலமிங்கு
நல் இதயங்களும் நம்பிக்கையிழந்த துயரமிங்கு.

கண்ணகி இருந்திருந்தால்
காற்சிலம்பை உடைத்து நியாயம் கேட்டு
ஈழத்தை எரித்திருப்பாள்

சீதை இருந்திருந்தால்-ஸ்ரீராமனும்
படை திரட்டி, போர் தொடுத்து
கண்ணீர் துடைத்திருப்பார்.

ஈழம் எரிகின்றது-யுத்தம் தொடர்கின்றது.
கண்ணீரில் தவமியற்றும்
கண்ணகியும் இங்கே- சீதையும் இங்கே

காவியம் போற்றிப் பாடாத ஏழைகள் தம் பிள்ளைகளுக்காய்-
நெஞ்சில் பாரச்சிலுவை சுமக்கும் அன்னை மரியாள்கள்
இன்றும்-ஞானத் தேடலாய், ஒரு பிடி
கடுகுக்காய் கதவைத் தட்டும் கீசகோசமிகள்

**இது காவியப் பெண்களின் கதையல்ல**
**கண்ணீரில் வாழும் தேவமாதர்களின்**
**உண்மைக் கவிதை**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra

# ஆண்ட பரம்பரை

---

ஆண்ட பரம்பரை மீண்டும் தம்
ஆளுமுரிமை பெறும்வரை-நெஞ்சில்
மூண்ட சுதந்திர நெருப்பு அவியுமோ?
கண்டம் பூண்ட விட மாலையின்
விடுதலைச் சுவையும் குறையுமோ?

அண்டம் நடுங்க ஆடிடும்-கரும் புலிகளின்
-உருத்திர தாண்டவமும் ஓயுமோ?
கடலும், மண்ணும் தீப்பிடிக்க, நெய் வார்த்த தீயில்
நீராடும் நிலைதான் மாறுமோ?
சொல் தமிழா சொல்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-27.2.2023*

# ஆண்டவன் கட்டளை

---

**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**

ஈழத் தமிழினத்திற்கு ஒன்றே இயக்கம்-மாவீரன்
பிரபாகரன் ஒருவனே என்றும் தலைவன்.
தலைவரையும், இயக்கத்தையும் போற்றிப் புகழ்ந்து பணிவீராக

பொருள் கொடுத்தும், வீட்டுக்கொரு பிள்ளை கொடுத்தும்
எம் இயக்கத்தை காப்பது உம் தலையாய கடனாகும்

அஞ்சி பணிதல் உம்மை வாழ்விக்கும்,
அடங்காமை இன்னுயிரைப் பறித்துவிடும்

எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் இயக்கம்
உரைப்பதே மெய்பொருளாகும்.-மற்றவை
எதிரிகளின் பொய்ப் பிரச்சாரமாகும்.

பேச்சு சுதந்திரம். எழுத்துச் சுதந்திரம், மாற்றுக் கொள்கை
என்று ஏதுமில்லை.நாமே உம் சுதந்திரம்-
புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம்
இதுவே தாரக மந்திரம்.

நாமே சட்டம், நாமே நீதி. நாமே உம் சிந்தனை
நாமே வேதம்-மற்றவை சாத்தானின் கீதம்

கட்டாய இராணுவப் பயிற்சி உயிர் காக்கும்
கப்பமாய் பொன்னும், பொருளும் கொடுத்தல்
உம் வாழ்வாதாரத்தை மீட்கும்.
இயற்றலும், ஈட்டலும், கப்பம் பெறலும் நம் கடனே

தலைவரை இகழ்தல், இயக்கத்தைப் பழித்தல்,
காட்டிக்கொடுத்தல் தலையாய குற்றங்கள்-
மரணமே தண்டனை
கொலையிற் கொடியாரை வேரறுத்து
தலைமை காப்பது நம் தலையாய கடனாகும்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-02-05-2023*

# அந்த அமாவாசை இரவு

---

அந்த அமாவாசை இரவு தீடிரெனத் தீப்பற்றிட
அழகிய மௌனத்தை வல்லாங்கு செய்த துப்பாக்கிகள்,
அழகிழந்து அம்மணமாகிக் கூனிக் குறுகிய இரவு
கண்ணீரில் மூழ்கிய பல நூறு உறவு

கொடிய வன்புணர்ச்சியால் இருளின் வனப்பும் புண்பட
கொடூரச் சப்தங்களால் குரைக்கும் நாய்களும் வாலை ஒடுக்கி
சிறு நீர் ஒழுக மறைவிடம் தேடி ஓடிட, தீயில் விழுந்த மெழுகாய்
உணர்வுகள் உருகிக் கரைய அணையும் உயிர்ச் சுடர்கள்

ஓசைகள் அடங்கி-மௌனம் நிலைக்க தீயும்
ஒடுங்கிப் புகையாய் அலைய
சோகம் சொல்லி கண்ணீர் தூவும் மழை,
இன்றும் சுனாமியாய் தாக்கும் சோக அலை

குருதியும், மழையும் புழுதியில் சங்கமிக்க, அழுகையும்,
கண்ணீரும் மௌனத்தில நிலைக்க, மண்ணில் கிடந்த சடலங்கள்
மண் சிவந்து யுத்தத்தின் கோரம் சொல்ல, மகனே என் மகனே
கதறும் தாய்களின் அழுகை, கண்ணீராய் வைகை.

ஊரும், தெருவும் வெறிச்சோடிக் கிடக்க, உலாப்போகும்
புள்ளினங்கள்-அஞ்சி கூடுகளில் முடங்கிக்கிடக்க
பூக்களும் கண்விழிக்க மறுக்க, நீர் வடியும் விழிகள்
நிலைக்குத்தி வானை வெறிக்க, தீப்பற்றிய இரவு

ஆழிப்பேரலையாய் சோகம் ஆவியை நொருக்க
சொல்லியழ வார்த்தையின்றி நெஞ்சம் தவிக்க
அழவும் முடியாமல், அழவும் தெரியமல் கண்ணீர் கட்டி நிற்க
சொந்தம் சொல்லி தெருவில் குந்திக்கிடந்த மூதாட்டி

நீண்ட நெடுஞ்சாலையோரம் கொசுக்கள் மொய்க்க,
குருதி உறைய, உள்ளடையோடு, ஒரு துண்டோடு, சாரத்தோடு
கைகள் கட்டப்பட்டு-கபாலம் துளைக்கப்பட்டடு
கட்டைகளாய் வீழ்ந்து கிடந்த உறவுகள்

விழிகளுக்குள் மறையாத அச்சம் -இமைகளுக்குள்
உறைந்த கண்ணீர், மெல்ல நடக்கையில் கால்களும் தடுமாற-
கண்ட காட்சியில் இதயம் நொருங்கிச் சுக்கு நூறாக
சத்திய தரிசனம் தேடி, விழி நீர் கசிய நடக்கின்றேன்

கொண்டாடிப் பிறந்த உறவுகள், கோலாகாலமான நினைவுகள்
கனவாய்க் கழிந்து, கோர நிகழ்வாய் முடிந்திட, விறைத்துக் கிடந்த
போராளிகள், கலைந்து போன தமிழ் ஈழக் கனவு
பிணவாடை சுவாசத்தை நெரிக்க யுத்தம் மாயை என்ற உணர்வு

கொன்றழிக்க கொடிய விலங்குகளாய், சுட்டழிக்க எதிரிகளாய்,
உறவுகளின் நினைவுகளில் மாலையிட்ட படங்களாய்
மறக்கமுடியாத கொடிய நினைவுகளாய், மனிதப்படுகொலைகள்
ஈழ வரலாற்றின் குருதிக் கறைபடிந்த பக்கங்கள், புரட்டிப் பார்க்கவும
திரும்பிப் படிக்கவும் மறக்கடிக்கப்பட்ட நிகழ்வுகள்

நடந்தபாதையின் இரு மருங்கிலும் நாறிக் கிடந்த பிணங்கள்
இயக்க மோதல்களின் தீராத பழி சொல்ல
நம்மை நாமழித்த உணர்வுகள் நெஞ்சில் தீயாயப் பற்றி எரிய
அலை அலையாய் வந்து மோதும் அழியாத சோகங்கள்.

அலையும் கடலும் தரையில் தலை மோதி அழ,
வானில் கழுகுகள் வட்டமிட, காகங்கள் கூடிக் கரைய,
மூதாட்டியின் விழிகளில் வெறுமையின் குடியிருப்பு-இதயத்தில்
ஆறாத சோகத்தின் ஓயாத படையெடுப்பு

குண்டு மழையில் நீராடி, நெருப்பாற்றில் தினம் நீந்தி
வெல்வோம் இல்லை வீழ்வோம் எனப் போராடும் வேங்கை,
விடம் தரித்த நெஞ்சில் வீறாப்பு, எட்டப்பர் கூட்டத்தை கொல்வதில்
பாவமில்லை, அமாவாசை இரவில் அரங்கேறிய கொடிய நிகழ்வு

சரணடைந்த போராளிகளுக்கும் மரணம்,
நற்கதி என்றோ சரணம், அனுபல்லவி, பல்லவி இன்றி
கலம்பகமாய் ஒலித்த துப்பாக்கிச் சத்தம்-அறம்பாடி
மறவர் வாழ்வை அழித்திட ஒழுகிடும் இரத்தம்

உறவுகள் கண்ணீர் மழையில் நீராடப், போரடிக்
குருதிப் புனலில் நீராடி-விழுந்த வித்துடல்கள்தான்
எத்தனை? ஈழ மண்ணின் விடுதலைக்காய்
நடத்திய வீரவிதைப்போ சத்திய சோதனை?

வீழ்ந்தாலும் வித்துடலாகி மீண்டும் முளைப்போம்
எரிந்தாலும் காற்றில் கலந்து சுவாசத்தில் நிறைந்து
வாழ்வோம் என்றவர் வாழ்வும் வீணானதோ?
தமிழன் ஒற்றுமையும் இன்றும் வெறும் கனவானதோ?

பிள்ளைச் செல்வங்களை, யுத்தம் கொள்ளையிட
வெள்ளைப் புறாவைப் பருந்து பறித்துச் செல்ல
கலைந்த ஈழக் கனவு, கண்ணீராய்க் கரைந்து
மாலையிட்ட படமாய் சுவரில் தொங்கும் உறவு

உரிமைப்போராட்டம் அறம் பிறழ-அதிகாரச்
சூதாட்டத்தில் தம்மைத் தொலைத்த வீர மறவர்
முறிந்த பனையும், தென்னையும் சாட்சியாய் நின்றிட
உலகெங்கும் அகதிகளாய்ப் புலம் பெயர்ந்த ஈழவர்

விடுதலைப் போராட்டத்தின் காயங்கள் ஆறவில்லை
கண்ணீரும், குருதியும் காயவில்லை, மறைக்கப்பட்ட
புதைகுழிகளில் மறக்கடிக்கப்படட உறவுகள் மறைந்திட
எரியும் டயர்களில் தகனப்பலியான வண்ணக் கனவுகள்

அவசர அழைப்பாய் சோகம் சொந்தம் சொல்ல,
அகால மரணங்கள், அணையுடைத்து
அன்னையர் கண்ணீர் ஓடிட, ஓயாத அழுகை ஒப்பாரி
உறவுகளின் நெஞ்சுக்குள் இன்றும் அணையாத் தீ

பகை கொண்ட நெஞ்சம் துயரத்தின் இல்லம்
அன்பு வாழும் உள்ளம்-என்றும்
அமைதி வாழும் இல்லம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-7-2023*

# ஆறாத காயம்

---

ஈழ யுத்தம் முடிந்தும் எம் மனக்காயங்கள் ஆறவில்லை
ஆயுதங்களின் சத்தங்கள் ஓய்ந்தும் நீதி கிடைக்கவில்லை
உறவுகளின் அழுகையும், கண்ணீரும் இன்றும் ஓயவில்லை

நீறணிந்த நெற்றி-நடந்த கொடு நிகழ்வை நினைந்து விம்மிட
மார்பிலணிந்த சிலுவை-பெற்றோர் மனச்சுமைகளை
எண்ணித் துடித்திட, ஐவேளை தொழுதும்- ஆறாத சோகம்

மழித்த சிரசும், சீவர ஆடையும், இனவாதம் மறக்கவில்லை
காலவெள்ளம் அள்ளிச் சென்ற ஈழக்கனவுகளில்-
எதிர்நீச்சல்போட்டு கரையேறியவர் யாருமில்லை

யுத்தம் கற்றுத் தந்த பாடங்கள் ஈழத்தமிழனுக்கு
ஒற்றுமையைக் கற்றுத் தரவில்லை, இழிந்த, இனவாத
அரசியல்வாதிகளுக்கு தன்னலம் தடையான நிலை
ஈழத்தமிழினத்திற்கு விடிவோ வான் நிலவான அவல நிலை

கார்கால் மேகங்களாய் எம் வானில் சோகம் குவிந்திட
விழி பொழியும் கண்ணீர் மழை, மறைக்கப்பட்ட புதைகுழிகள்
விழித்தெழ, காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்கு நீதி
கிட்டுமோ? உண்மையை உலகறியுமா கேள்விக் கணை?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-21-7-2023*

# ஆறாத மனம்

---

மண்ணும் தணலாற, விண்ணும் புகையாறத்
தீயணைத்து நீலக்கடலும் இளைப்பாற
அனல் தணித்து தென்றலும் உறவாட
அணையாத அன்னையர் அடிவயிற்று நெருப்பு
கண்ணீரிலோ அறுந்த தாலிகளின் மிதப்பு

கடல் கடந்து புகலிடம் தேடும் அகதிகளாய்
ஈழத்தமிழினம் திண்டாட-என் தேசம்
இனவாத தீயில் வெந்து நெருப்பாக
ஆறாத மனமும் ஆறிட, யார் தருவார் நிம்மதி?

ஆறாத காயமும், தீராத சோகமும்
ஈழத்தமிழ் நெஞ்சங்களில் உறவாட
மடிந்தாலும் விதையாய் முளைத்தெழுவோம்
உயிர் துறந்தாலும் மனங்களில்
புரட்சி எரிமலையாய் விழித்தெழுவோம்.
நம்பிக்கையாக- நாளை நமதே மந்திரமாக
நாமும் வாழ்வோம்- வாழவைப்போம்.

ஆறாத கோபத்தின் அனலும் ஆறும் வரை
மாறாத சோகத்தின் வடுவும் மறையும் வரை
தீராத நெஞ்சத்து சுதந்திர தாகமும் தணியும் வரை
ஓயுமோ? எம்தன் உரிமைப் போராட்டம்-

ஓயாது ஒருநாளும் எம்தன் உரிமைக்குரலும்
ஊமையாகி மௌனிக்காது.
தமிழே என் உயிர் மண்ணே-உன்னை
என் உயிர் நெஞ்சம் ஒருபோதும் மறவாது

மடிந்து மண்ணாகிப்போனாலும்
மரமாய், புழுவாய் உயிர்ப்போம்
மறத்தமிழன் யாத்த விடுதலை யாகத்தை
மறுபடியும் தொடர-
அகிம்சையின் கீதை இசைப்போம்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-23-5-2023

# அறுந்த கொடிகள்

---

தொப்பிள் கொடியறுத்திட
சொந்தமும், சுற்றமும் மகிழ்ந்து வாழ்த்திட
அழுது குரல் எழுப்பி வாழ வந்தவர்கள்
அடங்காத் தமிழர்களாய் ஆயுதம் ஏந்தி
இடியெனச் சுதந்திர கீதம் இசைத்தார்

விட மாலை சூடி சிவனாய் மாறி-ருத்திரதாண்டவமாடி
பகையறுத்து வீழ்ந்த போதிலும், விடமாலை அறுத்து
விடம் சுவைத்து, வீரனுக்கு மரணமில்லை
இனவாத சிங்களத்திற்கு அடிமையில்லை என்றே
எரியும் டயர்களில் ஆகதியாகி வரலாறு படைத்தார்.

மணமாலை சூடியவரும், மனைவியின்
மாங்கல்யம் அறுந்திட களப்பலியானார்
தமிழ் தாயின்-அடிமை விலங்குடைக்க
தம்பிகள் புரிந்த தியாகத்தை யார் மறந்தார்?

ஈரவிழிகள் சிவந்திருக்க-இளமுல்லையும்
கொழுகொம்பின்றி விதவையாய் இளைத்திருக்க-
நிழலாய் விடமாலை சூடிய வீரபுருஷர்கள்
நிஜமாய் மணமாலை இழந்த இளம் விதவைகள்!

அமாவாசை இருளில் வாழ்வும் அலைக்கழிய
வாழ்வாதாரமின்றி கைமை தவிக்க
விழிகளில் ஏந்திய கண்ணீர் கொடி
தமிழ் ஈழ வீடுதலைக்காய் அறுத்த தாலிக்கொடி

வறுமை -சிங்களத்திலும் கொடிதாய் வாட்டிட
தமிழ் தலைமையோ பேசியே காலம் கழித்திட
எங்கும் பறக்கும் சிங்கக்கொடி-இளம்
விதவைகளின் விழிகள் ஏற்றிய கண்ணீர் கொடி
வீழ்ந்த ஈழ விடுதலையின் வெற்றிக் கொடி?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-23-5-2023*

# அச்சம் என்பது மடமையடா

---

போராடி மடிவோம்-எதிரியின்
குருதிப்புனலில் நீராடி மகிழ்வோம்-
கொதித்தெழுந்த ஈழத்தின் இளைய தலைமுறை
ஆயுதமேந்திப் போராடி மடிந்தார்
இனவாத சிங்களத்திற்கு அடிபணியாது
வீழ்ந்தே வீர சொர்க்கம் புகுந்தார்.

கங்கையாய் பாய்ந்ததோ மாவீரர் குருதி
தமிழ் நெஞ்சங்களில் கனலாய் எரிந்ததோ
அடிமையல்ல உரிமைத் தமிழ் மகன்
என்ற உயர் நீதி

உரமாகிப்போன வித்துடல்கள்
உருமாறி ஒரு நாள் முளைக்கும்
நமக்காய் ஒருநாள் தமிழ் ஈழம் பிறக்கும்
எமக்காய்ச் சுதந்திரச் சூரியனும் உதிக்கும்

வெற்றி இல்லையேல் வீரமரணம் என்றே
வீழ்ந்தும் வாழ்கின்றார் வீரபுத்திரர்

துஞ்சுவது ஒரு முறைதான்
அஞ்சுவோர்க்கு வாழ்வில் ஆயிரம் மரணம்
அஞ்சா நெஞ்சத்து ஆடவர்க்கு ஏது மரணம்?

மானமே பெரிதென்ற மறத்தமிழருக்கு
மரணம் இனிதாய் ஆனது
இறப்பும் புதுப்பிறப்பாய் ஆனது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-23-5-2023*

# அடையாளம்

---

வாதைகள் செய்த-பாதகர்
முட்டியில் சுட்டு -எரியும் டயர்களில்
சுட்டெரித்த உன் மகன் பிறப்பானம்மா
ஈழவிடுதலைக்காய் மீண்டும் ஒரு முறை
யுத்தம் புரிவானம்மா

என்னை அடையாளம் காண
சுட்டெரித்த பகைவர் என் முட்டியில்
இட்ட சூடு போதாதம்மா-தாய்பாலோடு
தமிழ்பால் ஊட்டிய தெய்வமே
நெற்றியில் பகைவர் நெருப்பினால் இட்ட பொட்டு
நெற்றிக்கண்ணணாய் என்னை உனக்கு
அடையாளம் காட்டும் அம்மா

உன் மகன் மீண்டும் பிறந்தானென்றே
அகமகிழ்வாய் அம்மா?
நாளை பிறக்கும் ஈழத்தில்
நாமும் ஒன்றாய் வாழ்வோம் அம்மா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30.03.2023

# 157-அகதிகளின் படகு

---

எண்ணெய்யும் எரிபொருளுமின்றி ஆழ்கடலில் அல்லாடும்
அகதிகளின் படகு-வாழிடமும் வாழ்வாதாரமும் இன்றி
புகலிடம் தேடி சோககடலில் தவித்திடும்
தமிழ் அகதிகளின் மனது.

நெருப்பாற்றில் நீந்திப் பிழைத்தவர்கள்
அலைகடல் ஓடிப் புகலிடம் தேடிட
அவுஸ்திரேலிய ஆழ்கடலில் மூழ்கிடும் நிலையில்
ஈழத் தமிழ் அகதிகளை ஏற்றிய படகு

காரிருளும் கடல் நீரும் அச்சம் சொல்ல
காயும் வயிறும் கண்ணீரும் சோகம் சொல்ல
கரைகாணாத அவலத்தில் கயிறறுந்த காற்றாடியாய்
பழுதடைந்து அல்லாடும் தமிழ் அகதிகள் படகு

கொல்லும் வெயிலும் கொட்டும் மழையும்
கொந்தளிக்கும் கடலும், குளிர்காற்றும், அச்சமூட்ட
ஒட்டிக்கிடந்த வயிற்றில் உறங்கிக்கிடந்த பசியும், பயமும்
ஒன்றாய் விழித்தெழ -நன்றாய் வாழ்ந்த நாட்கள்
கனவாய்க் கழிந்த பழங்கால நிகழ்வுகள்

இன்றோ புகலிடம் தேடிடும் அகதிகள் ஆழ்கடலில்
அநாதைகளாய் வாடித் தவிக்க, விடிவு வரும் திசையினில்
விலங்கிடப்பட்டு கைதிகளாகும் அவல நிகழ்வு
விம்மியழுதார்-வேதனை பெருகிட மானிடராய் பிறந்த
இழிநிலைக்காய் விதியை நொந்தழுதார் அகதிகள்

அகதி அமைப்புகளின் அபயக்குரல்கள்
செவிடன் காதில் விழுந்த சங்கொலியாயக
நியாயமும் தர்மமும் நெஞ்சுக்கெட்டாத நீதியாக
இரும்பான அரசின் மனதில்-இரக்கம் கானல் நீரானது

அவுஸ்திரேலிய அரசு ஆழ்கடலில் தத்தளித்த
அகதிகளை, சிறைவைத்தே மௌனம் காத்திட
ஏழ்கடலும் குமறியழுதது மானிடமும் வெட்கி
மனச்சாட்சி முன் மௌனம் காத்தது

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.3.2023*

# அக்கினி ஆறு

---

அக்கினி ஆற்றில் தினம் நீராடும்- கரும்புலிக்கு
கத்தும் கடழேலும் முழங்காலலவே
கடும்புயலும் தென்றல் காற்றே

செந்தணலாழியில் மூழ்கி செம்முத்தாய்
தமிழீழத் தாயகத்தை மீட்டெடுப்போம்
எத்திசையும் ஒலிக்க -சுதந்திரம்
ஈழத் தமிழன் பிறப்புரிமையென்றே
சத்தமாய் முழங்கிடுவோம்

நாம் பிறந்தபோது ஆடிடத்தொட்டிலில்லை
எம் ஆவி அடங்கும்போது -உறங்கிடப்
பாடையோ-சவப்பெட்டியோ இல்லை
குண்டுகள் எம்முடலைக் கொத்தி  வீழத்திட-
கொட்டிய குருதியை வண்டுகள் குடித்து
சுதந்திர கீதம் பாடின.

தீயாடும் டயர்களுக்கு பெருந்தீனியானோம்-இனவாத
பேய்கள்அஞ்சி நடுங்கிடப் போராளியானோம்
நோயுற்று எம்முடல் நொந்ததில்லை-உறவுகள்
அகாலமாய் மாண்டதை எண்ணும்போது
நெஞ்சம் கலங்கி, விழிகளும் அழுததுண்டு

அமைதிவேண்டும் -ஆயுதக் கலாச்சாரம் அகல வேண்டும்,
நீதியும், சமாதானமும் நம்மை ஆளவேண்டும்
உயிரனைத்தும் நம் உறவென்னும் இன்பம் வேண்டும
சாந்தி வேண்டும், சகோதரர் நாமெனும் ஞானம் வேண்டும்
சிங்களமும், செந்தமிழும் ஒன்றுபட்டு வாழவேண்டும்.

ஆயதங்களுக்குச் சமாதி கட்டிப் பிரிவினையை
சமநீதியால் குணமாக்குவோம்
அடக்குமுறைகளுக்கு  சாவுமணியடித்தே
மனித உரிமைகளை நிலை நிறுத்துவோம்.

***ஒன்றே குலம் அன்பே தெய்வம்-ஒன்றே சாதி ஒன்றே நீதி***
***உலகப் போராளிகளே ஒன்று படுங்கள்***
***வன்முறையில் நீதி இல்லை- அன்பு என்றும் தோற்றதில்லை***

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# அக்கினி பூமி

---





**இறைவன் படைத்த இன்ப உலகில்**
**இறையாண்மையோடு வாழ உரிமை பெற்ற**
**இறை குடிமக்கள் நாம் -நம்மில்**
**ஆண்டான், அடிமை -வெள்ளையன் , கறுப்பன்**
**சிங்களவன், தமிழன் எனும் பேதஙகளும்,**
**மத, இன, நிற, மொழி வேற்றுமைகளும் ஏனோ?**

இங்கிருந்துதான்- உலகெங்கும்
அழகுகள் பிறந்தன என்பதற்குச் சான்றாய்
வளத்தில் நிறைவுற்று, நானிலமும் அழகுற
மண் பெற்ற வளத்தினை விண் காண-வானுயர்ந்த
பனையும், தென்னையும் தோரணமாய்க் குலையீன,
குதூகலத்தால் புள்ளினங்கள் இசைபாட
பூவினங்கள் பூ மழை தூவி தென்றலில் அசைந்தாட
ஆவினங்கள் பால் பொழிந்திட-
இரத்தினங்கள் ஒளி வீசிட
வாசனைத் திரவியங்கள் சுகந்தம் வீசிட
காற்றாடும் நெல்லும், கூட்டமாய்
கூத்தாடும் வேழமும் நிறைந்த ஈழமெனும்
எமைப் பெற்றெடுத்த அன்னையவள்,
மங்கல ஒலி முழங்கிட
இந்துவின் வெண்ணீல அலை தாலாட்டி
சிப்பியும், வண்ணக் கிளிஞல்களும்
பொன்மண்ணில் கோலமிட்டு சீராட்டும் அழகுமகள்
ஆழியில் ஆடிடும் ஏதேன் வனமோ என
மாந்தர் வியப்புறும் பேரழகு மகள்
பேரினவாதத்தால், பிரிவினையால் வாட
கரைமோதும் அலையிலும் ஆழியின் கண்ணீர்
வான் எழும் புகையிலும் செந்தமிழன் செந்நீர்



## நாம் பிறந்த மண்

---

பாடல் பெற்ற திருத்தலங்களும்
பௌத்த விகாரைகளும் நிறைந்ததெங்கள்-
திருநாட்டில், ஆரியரும், திராவிடரும்
சகோதரராய் நூற்றாண்டு காலம்
ஒற்றுமையாய் வாழ்ந்து வந்தோம்








ஆரியரென்றும், திராவிடரென்றும்
இனப்பேதங்கள் இல்லை
ஆட்சிபுரிந்தோம் ஆண்டுகள் பல,
சிங்களவரென்றும், தமிழரென்றும்
இனத்துவேஷங்கள் இல்லை

## கி.பி 1505

காலங்கள் கழிந்தன
பருவங்கள் வந்து போயின கடலிலும்
நதியிலும் புது வெள்ளங்கள் கலந்தன
கானகங்களில் புதுப்பண்கள் பிறந்தன
எம் உறவு முறையில் பேதங்களில்லை

சரித்திரமும் எம் வாழ்வை மறக்கவில்லை
சத்தியமும் எம் வாழ்வில் பொய்த்ததில்லை
தமிழரும் சிங்களவரும் தமக்கென
இப்புண்ணிய பூமியில் நாடு கொண்டு
தம்மைத் தாமாண்ட பொற்காலமது

புண்ணிய பூமியில்
கண்ணியமாய் வாழ்ந்த எம் முன்னோர்
தம் வளநிலத்தில்- கண்ணயர்ந்த நேரத்தில்
புயலால் கரை ஒதுங்கிய பறங்கியன்
வாசனைத் திரவிய வணிகனாய் மாறி
கண்ணின் மணி போன்ற எம் மண்ணில்
கோட்டையும், பண்டக சாலையுமமைத்து
தண்ணளி- மாந்தர், எம் முன்னோரை
தனக்கடிமையாக்கிக் கொண்டான்.
அன்னை பூமியில் அந்நியன் உரிமை கொண்ட
துன்பமிகு சரித்திரத்தின் தொடக்கம் அன்று

காலங்கள் கழிந்திட-எம் வாழ்வில்
காரிருள் சூழ்ந்திட-சுதந்திர வேட்கையுற்ற
எம் புண்ணிய பூமியின் சுந்திரப் புதல்வர்
உரிமைக்காய் போராடத் தொடங்கினார்

துப்பாக்கிகளும் பீரங்கிகளும்
குண்டு மழை பொழிந்திட
துர்ப்பாக்கிய ஈழமக்கள் யாம்
விற்கள், வாட்கள்,
ஈட்டிகளோடும், வீறு கொண்ட நெஞ்சோடும்

கண்மணி போன்ற எம் மண்ணின்
விடுதலைக்காய் போராட எழுந்தோம்
நவீன போர்க்கருவிகளின் முன்-எங்கள்
வாட்களும், விற்களும் நலிவுற்ற நேரமது



கங்கையாய் குருதி பெருக்கெடுக்க
காற்றிலே சொந்தங்களின் அழுகையொலி
கடவுளை கூவியழைக்க,
காட்டிலும், மேட்டிலும் போராடி வீழ்ந்தவர்
கழுகுக்கும், காக்கைக்கும் உணவான போதும்
சுதந்திர வேட்கை தணியவில்லை
உரிமைப் போர் ஓயவில்லை

மஞ்சளும், குங்குமமும் மலர்ச்சரங்களும்
உயிராய்ப் போற்றிய மாங்கல்யமும்
தாயாய், காதலியாய் வாழ்ந்திட்ட
எம் முன்னறிந்த தெய்வங்கள் நின்று
அழிந்து, உதிர்ந்து, கழன்று கண்ணீரோடு
கங்கைதனில் கலந்த காலமிது.

பாடல் பெற்ற திருத்தலங்களும்
பௌத்த விகாரைகளும் இடிந்திட-அந்நியர்
ஆதிக்கவெறி எம்மை அடிமை கொண்ட
இருண்ட காலமிது –
ஆயினும் எம் முன்னோரின்
உரிமை முழக்கங்கள் ஓயவில்லை
உதிர வெள்ளமும் வற்றவில்லை-
போராடினார்கள்
தம்மைத் தாமாள போராடினார்கள்.



போர்த்துக்கேயரும், டச்சுக்காரரும் .
சூரியன் அஸ்தமிக்கா இராச்சியம் கொண்ட
பிரித்தானியரும் களைக்கும் வரை
விழுப்புண் தரிக்க இடமின்றி
பொய் சொல்லா மெய்யோடும்-
சுதந்திரம் வேண்டி-
அறை கொள் அருவியாய்,
ஆர்ப்பரிக்கும் உள்ளமோடும்
அந்நிய ஏகாதிபத்தியத்திற்கெதிராய்
1504 முதல் 1948 வரை போராடினார்கள்
எந்நாளும் இந்நாட்டு மன்னரென
வாழ்ந்த எம் முன்னோர்கள்

பறங்கியனை விரட்டிட, டச்சுக்காரனை அழைத்து
பிரித்தாளும் பிரித்தானியனுக்கு அடிமையான
துயரமிகு வரலாறு தொடர்கதையாக,
நான்கு நூற்றாண்டுகளும்
நாற்பத்து மூன்று வருடங்களும்
இறைமை இழந்த ஈழ மண்ணின்
உரிமைப் புதல்வர்கள் -அந்நியனுக்கு
அடிமையான இருண்ட காலமது



காலம் கடந்தது, எம் வாழ்வு மலரவில்லை
மலரும் வாழ்விற்காய்-புலரும் காலம் பார்த்து
புண்ணிய பூமியின் புதல்வர்யாம்
நாளைய நம்பிக்கையோடு காத்திருந்தோம்

சிங்களவரும் தமிழரும்
தத்தம் இறைமைகளுக்காய்
போராடிப் பெற்ற விழுப்புண்களோடும்
புத்துணர்வோடும், மீண்டும் போராடிட
மகிழ்வோடெழுந்த காலமது

வெள்ளையனின் ஏகாதிபத்திய வெறிக்கெதிராய்
சுதந்திர வேட்கையுற்ற புண்ணிய பூமியின்
பிள்ளைகள் போராட்டத்தைத் தொடர்ந்தார்
எம் முன்னோரின் கனவுகள் நனவாகி
இருவினத்தின் இறைமைகளை மீள்றெடுக்க
ஒன்றுபட்டு நாம் போராடினோம்
அருமையாய் நாம் போற்றிய இறைமைகளுக்காய்
ஆரியரும் திராவிடரும் அணிதிரண்டு போராடினோம்



## 1948-மாசி-04

வெள்ளையன் வெளியேறி ஆட்சி கைமாறிட
ஆனந்த சுதந்திரம் மலர்ந்ததென
உரிமைக் குடிமக்கள் நாம் ஆர்ப்பரிக்க
அரசர்களானோம் என மனம் பூரிக்க
இம் மண்ணின் ஆட்சி முறைக்கான
அரசியலமைப்பினை வெள்ளையன் யாத்திட
அந்நியோன்னியமாய் வாழ்ந்த இரு இனத்திடையே
பேதங்கள் பிறந்தது -சிங்களம் அரியணையில் அமர்ந்திட
செந்தமிழோ கால் மனையில் மிதிபட
ஈழத் தமிழர் சுதந்திரம் கானல் நீரானது



***ஆண்ட பரம்பரை***
***மீண்டும் ஒரு முறை-ஈழத்தே***
***அடிமையான இழிநிலை தோன்றிட***
ஒன்றாய் வாழ்ந்த எம்மிடையே
உரிமையில் பேதங்கள் பிறந்தன
நன்றாய் வாழ்ந்த எம் உறவில்
நாளடைவில் பிளவுகள் தோன்றின

பாராண்ட பேராண்மைத் தமிழர் யாம்
முடியுடை முத்தமிழன் வாரிசுகள் நாம்
புண்ணிய பூமியில் தமக்கெனத்
தனியொரு இராட்சியம் கொண்டு
தம்மைத் தாமாண்ட தமிழர் யாம்,
இறைமை இழந்து-இம்மண்ணில்
ஆளுமுரிமையிழந்து அடிமையாகிட
***ஆண்ட பரம்பரை மீண்டும் ஒரு முறை***
***ஆளுமுரிமைக்காய் போராட***
ஈழத்தமிழரின் சுதந்திரப் பேரிகை முழங்கியது

எம்முரிமைக்காய், இறைமைக்காய்
எம் மண் சிவந்திட சிந்திய உதிரமும்
எழுப்பிய உரிமைக் குரலும்
புண்ணிய பூமியை ஊடறுத்து-ஏழ் கடலிலும்,
இமயத்திலும் இன்றும் எதிரொலிக்கின்றது

***மத்தியில் கூட்டாட்சி***
***மாநிலத்தில் சுய ஆட்சி கனவாகிட***
மறத்தமிழர் எமது உரிமைக் குரல்
***தனித் தமிழ் ஈழம் என்றே***
கத்தும் கடலேழின் அலைமுகங்களிலும்
உயர்ந்த மலை முகடுகளிலும்
மோதி ஆர்ப்பரித்து எதிரொலித்த காலமது

தமிழ் ஈழம் எனும் மாறாத முடிபோடு
புண்ணிய பூமியின் தமிழர் யாம்
அமிழ்தினும் இனிய தமிழிற்காய்-எமை
நாமாளும் உரிமைக்காய் குரல் எழுப்பி
தலைவனாய்
எமையாளும் இறைவனாய் என்றும் வாழும்
இறைமகன் இயசு கிறிஸ்துவை நோக்கி
ஏழைகள் எம் விண்ணப்பங்களை
ஒற்றுமையாய் ஒரே குரலில் மொழிகின்றோம்



In a controversy the instant we feel anger we have already ceased striving for the truth, and have begun striving for ourselves.

என்றும் வாழும் உயிருள்ள இறைவன்-தம் மக்களின்
அழுகையொலியைக் கேட்கின்றார் எனும் நற்செய்தி
எமக்கு ஊக்கமளிக்கின்றது-ஏனெனில்
முன்னொரு நாளில் தம் பணியாளன் மோயீசனுக்கு
ஓரேப் மலையருகில் மொழிந்ததையே
இன்றும் எமக்காய் மொழிகின்றார்

***அவர் தம் மக்களின் அழுகையொலியைக் கேட்டார்
அடிமைத்தனத்திலிருந்து
அவர்களுக்கு விடுதலையளிக்கவும்
பாலும் தேனும் நிறைந்தோடும் பெரும் நிலம்தனை
சுதந்திரமாய்க் கொடுக்கவும் சித்தமானார்*** (யாத் 03 08)

நம்பிக்கையூட்டும் நற்செய்தி
நலிந்த மனங்களுக்கு புத்தணர்ச்சி தர
இறைவனை நோக்கி எம் குரலை
எழுப்புகின்றோம்-ஏனெனில்
ஆண்டவரும் எமை ஆள்பவரும் அவரே

உதிரமும், கண்ணீரும் ஒன்றாய்க் கலந்திட்ட
எம் உரிமைக் குரல்-பேரினவாதத்திற்கெதிரான
அறைகூவலாய் மாறிட-அடக்குமுறை ஒழிந்து
சமதர்ம சமுதாயம் உருவாகிட
ஈழத் தமிழர் இறைமைக்காய்
விடுதலைப் போராட்டம் உதயமானது

***தமிழ் ஈழம் தமிழர் தாயகம்***
எம் இலட்சிய கோரிக்கை கேட்டு
சீறும் எரிமலையாய் சிங்களம் மாறிட
நாளும் எம்மைச் சுட்டெரிக்கும் -பேரினவாத
அவியா நெருப்பு எமக்கு எரி நரகானது

இறைவன் கண்களில் பேறுடையோம் நாம்
ஏனெனில் அவர் தம் தாயின் வாய்மொழியாக

***நெஞ்சிலே செருக்குற்றவர்களை சிதறடித்தார்
வலியோரை அரியணைனின்று அகற்றி
தாழ்ந்தோரை உயர்த்தினார்
பசித்தோரை நலன்களால் நிறைத்து
செல்வரை வெறுங்கையோடு அனுப்பினார்
என்னும் நற்செய்தியை*** கூறுகின்றார்
(லூாக்1.52-53)

தமிழ் மக்களாகிய நாம்
இப் புண்ணிய பூமியில் அனுபவிக்கும்
உரிமைப் பாதிப்பினாலும்
எமது இறைமைக்குச் சான்று பகிரும்
வரலாற்று உண்மைகளினாலும்
எம்மோடு வாழும்
உயிருள்ள இறைவனின் பலத்தினாலும்
எம்மைப் பற்றிய உண்மைகளை
உரைத்திட விழைகின்றோம்



ஈழத்தமிழர் எம்மில் இரு சாரார்
எனச் சிங்கள் மக்கள் கூறுகின்றார்கள்,
ஒரு சாரார் ஈழத்தில் பிறந்தவர்கள்
இம்மண்ணிற்கு உரித்தானவர்கள்
அவர்கள் ஈழத்தமிழர்கள்

மறு சாரார்
வெள்ளளையரால்-கூலிகளாய்
தமிழக மண்ணில் நின்று-ஈழ மண்ணிற்கு
இறக்குமதியாக்கப்பட்ட இந்தியத் தமிழர்கள்-
ஏனெனில்
இவர்கள் தாயகம் பாரதம்
ஆயினும் பின்னைய கூற்று
இன்று பொருந்தாது -ஏனெனில்
இந்தியத் தமிழரென
அவர்கள் பழிப்போர்
ஈழத்தில் பிறந்தவர்கள்
அவர்கள் தாயகமும் ஈழம்
எனவே அவர்களும் ஈழத்தமிழர்களே

ஈழத்மிழர் நாம் இப்புண்ணிய பூமியில்
குறிஞ்சி, மருதம், நெய்தல், முல்லை நிலங்களில்
கூடு கட்டி வாழ்கின்றோம்
வசந்த காலத்தில் ஜோடிக்குயிலாய் கூவி
வரண்ட பொழுதில் ஒற்றைக்குயிலாய்
கரையும் இழிந்த வாழ்வு எமது

***இறக்கைகள் இருந்தும் –எமக்கு பறந்திட வாய்ப்பில்லை***
***இதழ்கள் இருந்தும்– எமக்கு மலர்ந்திட வழியில்லை***
***ஏனெனில் நாம் கூண்டுப் பறவைகள்***
***சிங்கள இனவாத தீயில் நாளும்***
***கருகிடும் மொட்டுக்கள்***

# குறிஞ்சி மண்ணும் மாந்தரும்

----------------------------------



இயற்கையின் அபரிதமான அழகுகள்
எங்கும் நிறைந்திட- பச்சை மலைகளும்
பாயும் கங்கைகளும் நிறைந்த-குறிஞ்சி
விண்ணவனைத் துதித்திட
மண் பூத்த கூப்பிய கரங்கள்-குறிஞ்சி

பசுமை தவழ்ந்து-நதிகள் பாய
அழகு ஆடிட இறைவன் கட்டிய
பச்சைத் தொட்டில்-குறிஞ்சி

இங்கு தான்-எங்கள் முன்னோர்கள்
வறுமை வாட்டும் தங்கள் வாழ்வு
மலரும் எனும் நம்பிக்கையோடு
வாழ்வைத் தொடங்கினர்.

குறிஞ்சித் தொட்டிலில் தேயிலை,
கொக்கோ, இறப்பர், மிளகு
குதூகலத்தோடு வளர்ந்தாட
எம் முன்னோர்களின் வாழ்வோ
அழுக்கு லயன்களுக்கள் அடங்கிக் கிடந்தது



*"அக்கரைச் சீமையில் அழகிய வாழ்வு"*
நம்பி ஏமாந்த எம் முன்னோர்கள்
உழைப்பிற்கேற்ற ஊதியம் கனவானது

மாடாய் உழைத்து- ஓடாய் தேய்ந்தவர்
வியர்வையும் குருதியும்
மலையகப் பயிர்களுக்கு உரமாக
மலிவான மலையக கூலிகளின் உழைப்பு
ஆளும் வெள்ளையருக்கு பெருவிருந்தானது

இந்நிலையில்-நாடு சுதந்திரம் பெற்றது ஆயினும்
எமக்கு சுதந்திரம் மலரவில்லை.

***காலங்கள் கடந்தன***
***தோட்டங்கள் தேசியமயமாக்கப்பட்டன***
தேயிலைக்கும், இரப்பர்க்கும் கூடவே
கொக்கோவிற்கும் இருந்த மதிப்பு
நட்டு, வளர்த்து, காத்த ஏழைகளுக்கு இல்லை

தோட்டப்பயிர்களுக்கு வியர்வையும், உதிரமும்,
எம்மவர் உடலங்களும் உரமாகிட
பிரஜா உரிமையும் , உழைப்பிற்கேற்ற ஊதியமும்
கனவாய், பழங்கதையாய் கலைந்து போனது



மலசல தோட்டிகள், நகரசுத்தி தொழிலாளிகள்
பெருந்தோட்ட கூலிகள், பணியாட்கள்
இந்தியத் தமிழன் என்னும் பெருநிலையை
சிங்கள மக்களும், ஈழத்தமிழினத்தின்
சிலரும் பழித்து, இழிவு செய்திட
வறுமை, அறியாமை எமைச் சிதைத்து
சீரழித்த இருண்ட காலங்கள் அவை

அடிமைத் தளையை உடைத்திட
நாம் போராடுகின்றோம்-ஆயினும்
வெற்றி எம் பக்கம் இல்லை
எமக்குத் தோள் கொடுத்திட
ஈழத்தமிழர்களைத் தவிர வேறுயாருமில்லை
ஆதலால் மலையகத் தமிழர்கள் நாம்
எம் தனித்துவத்தோடு
சிங்கள் ஏகாதிபத்தியத்திற்கெதிராய்
போராடத் துணிந்தோம்



இயற்கையின் எழிலை
கவிதைகளோடும் கானங்களோடும்
இரசிப்பவர்கள் நாங்கள்-ஆயினும்
எங்களில் பெரும்பாலானோர்-வக்கிரமான
ஏழ்மைச் சிறையில் ஆயுட் கைதியாய் வாடும்
படிப்பறிவற்ற ஏழைகள்

குறிஞ்சி மலைகளில்-எங்கள்
பசுமைக் கனவுகளை நனவாக்கிட
நாம் முயன்ற போது-அது அநீதியல்ல
என்றறிந்து தொடர்ந்த பொழுது-
சிங்கள ஆட்சியாளர்களால்-
எங்கள் கனவுகள் சிதைந்தன

ஈழப் பொருளாதாரத்தை கட்டி எழுப்பிய
குடும்பச் சோலைகள்
சிறிமா-சாஸ்திரி ஒப்பந்தத்தால்
ஈவு இரக்கமின்றி கலைக்கப்பட்டன

எம் குருதியையும்- உழைப்பையும் உண்டு
அட்டைகளும், முதலாளி வர்க்கமும் கொளுத்திட
ஒட்டிய வயிற்றோடும், கட்டிய கந்தையோடும்
பச்சை மலைமுகடுகளை நோக்கி
எங்கள் பரிதாபக் குரலை-நாங்கள் எழுப்பி
அதன் எதிரொலியை நாமே கேட்கும் அவலம்



ஈழப்பொருளாதாரம்
குறிஞ்சி மலை முகடுகள் போல் உயர்ந்திருக்க
இந்தியக் கூலியின் வாழ்வோ-விண்கல்
அகழ்ந்த பாதாளமாய் அச்சுறுத்த
யாமிழைத்த தவறுதான் என்ன?

குறிஞ்சியின் ஏழை மக்கள்
மந்தைகளாய் லயன்களில் அடையுண்டு
கந்தைக்கும், கூழிற்கும், கருமியின் கொடையான
ஊதியத்திற்கு தம் உழைப்பை ஈடுவைத்து
வியர்வையும், குருதியியும் சிந்தி-நாளும்
அடிமைகளாய் வாழ்ந்திடும் அவலம்
என்றுதான் தீருமோ?

விடிவை நோக்கிய வாழ்வில் என்றும் கலையாத இருள்
வற்றிய உடலும், மங்கிய விழிகள் நின்று
கங்கை போல் பெருகிடும் கண்ணீரும்
பற்றிய அட்டை போல் ஒட்டிய துன்பமும்
பச்சை மலைகளில் மோதி எதிரொலிக்கும்-எம்
அழுகையும் இறைவனை கூவியழைக்க,
ஒரு கண்ணீரின் சரிதையை
காலம் சொல்லும் காட்சியினை-வானுயர்ந்த
மலைமுகடுகள் கரைந்து நாளும் காண
எம் கண்ணீர் மழைக்காலத்திற்கு ஓய்வில்லை

எங்கள் மனங்களில் பூத்த கனவுகள்
விடியலின்றி கருகிட-நமக்காய்
நாளையாயினும் மலராதோ எனும்
பொய்யான நம்பிக்கையில்
விடிவேதென்றும், வழி ஏதென்றும்
அறியா இழி நிலையில்-முதலாளிகளுக்கு
உடல் வளைத்து-துண்டை இடுப்பில் கட்டி
தொர, சாமி என கும்பிட்டு
வணங்காக் கழுத்தோடு வாழ்ந்து போன
பேராண்மைத் தமிழர்களின் வாரிசுகள் நாம்

அறியாமை இருள் நின்று
எம்மை விடுவித்திட நாம் முயல்கின்றோம்
எமக்கென ஒரு நாடு மலரும் என்ற
உறுதியான நம்பிக்கையில்-அதில்
எம் இறைமைக் கனவுகள்
நனவாகும் நம்பிக்கையில்-நாமும்
தமிழ் ஈழமெனும் யாகத்தை உவகையோடும்
உற்சாகத்தோடும் யாத்திட விழைகின்றோம்



நாம் உண்மையை உரைக்கின்றோம்
உண்மை எம் பக்கமுள்ளது எனும் நம்பிக்கை
எமக்கு பலமாகின்றது -எம் இழிந்த வாழ்வு
எமக்கு கண்ணீரை வரவழைக்கின்றது
ஆதலால் நாம் வாய்விட்டு அழுகின்றோம்

ஏழைகளாகிய எம் அழுகையொலி
ஒரு நம்பிக்கையின் நற்செய்தியாக
இறைவனின் வாக்குறுதியாக
எமக்கு உறுதியளிக்கின்றது-ஏனெனில்
***உண்மை உங்களுக்கு விடுதலையளிக்கும்*** என்பது
இறைமகனின் வாய் மொழிகளில் ஒன்று
(யோவான் 8:32)

## மருதமும் மாந்தரும்

-------------------

நிலம் உழுது, நீர் பாய்ச்சி,
நெல் விதைத்து, களைபிடுங்கி-முற்றிய
கதிர் அறுக்கும் உழவர் நாங்கள்
சோறு படைக்கும்-உயர் தொழிறை
ஏழைத் தமிழர் நாங்கள்
சோர்வுறாமல் தொடர்கின்றோம்

வானம் பார்த்த எங்கள் வளநிலங்களில்
சிறுபோகமும், பெரும் போகமும் -எம்
வாழ்விலோ ஏழ்மையே மாறாத யோகம்

கவிகள் பாடிய எங்கள் உயர்தொழிறை
கந்தையுடுத்து, கலப்பையேந்தி
காலம் காலமாய்த் தொடர்கின்றோம்-ஆயினும்
காலம் எங்களுக்காய் இன்றும் மலரவில்லை
எங்கள் வளநிலங்கள் குழைந்திட

வளமான நீர்ப்பாசனத் திட்டங்கள் ஏதுமில்லை
தூர்ந்த குளங்களைத் திருத்திட
சிங்கள் அரசின் கரங்கள் ஏனோ நீளவில்லை
திசை மாறிய நதிகள் எம் நிலம்
நோக்கி பாயவில்லை-ஆயினும்
எங்கள் தொழிலை ஊக்குவிக்க ஆர்ப்பரித்து
ஆட்சியாளர்கள்-சட்டங்கள் இயற்றினர்

அணைகட்டி, கால்வாய்கள் வெட்டி
நதிகளைத் திருப்பினர்-ஆயினும் அவை
ஏர்பிடித்து கை கன்றிய ஏழைத்தமிழருக்கல்ல
ஆயினும் நாம்
விதைக்கின்றோம்-அறுக்கின்றோம்-வரட்சியும்
வெள்ளமும் பெருகி வரும் காலங்களில்
பெருங்குரலில் அழுகின்றோம்.
எங்கள் கூக்குரலிற்கு இயற்கை
செவிசாய்க்கும் என்னும் தளரா நம்பிக்கை
இன்றும் எம்முள்ளங்களில் உண்டு



நெல் எனும் பொன்னை விதைத்து-
நாமறுத்தாலும்-பொன் பெற்ற பெருவாழ்வு
ஏழை உழவர் எம் மத்தியில் இல்லை
நெல்லிற்கு உச்ச விலை அரசிடம் ஏனோ இல்லை
பட்ட உழைப்பிற்குப் பலனின்றி-
பல வேளை பாதி விலைக்கு
தனியார்க்கு விற்றிடும் நிலை மாறவில்லை
புண்பட்ட எம் பெருநிலைதான் என்ன?

நெல்லோடு, தானியங்களும்
மரக்கறி வகைகளையும் பயிரிட்டோம்,
எம் வாழ்வு சற்றே வளமாகிட-மிளகாயும்,
வெங்காயமும், உருளைக்கிழங்கும் நன்கு விளைந்திட
ஈழச்சந்தையில் நல்ல கிராக்கி நிலவிட
ஊக்கமோடு நாமுழைத்தோம்
வெளிநாட்டுச் செலாவணி குறைந்திட-
உள் நாட்டு உற்பத்தி அதிகரித்திட
வளமான எம் வாழ்வு கண்டு-ஆட்சியாளர்கள்
தம்மக்கள் மீதும் அவர்கள் தேவைகள் மீதும்
கூடிய அக்கறை காட்டினர் -
நாம் வாழ்ந்தாலென்ன மடிந்தாலென்ன-
எண்ணினரோ யாமறியோம் -ஆயினும்
எம் வாழ்வை அவர்கள் கடினமாக்கினார்

எம் விளைபொருட்கள் களஞ்சியமின்றி அழுகிட
உழைப்பிற்கு பலனின்றி பாதி விலைக்கு விற்றிட
வெளிநாடுகள் நின்று வெங்காயமும்,
செத்தல் மிளகாயும், உருளைக்கிழங்கும்
கப்பல்களில் வந்து ஈழக்கரை தட்டின.




நாம் செய்வதறியாது திகைத்து நின்றோம்
படித்த இளைஞர்களும் வேலையின்றி அல்லாட
எங்கள் விளைநிலங்களில்-வறுமை செழிக்க
சிங்களத்தோர்-இனவெறியின் பெருமை
களைகளை நாட்டியது-கண்ணீர் வெள்ளத்தில்
ஏழைகளின் வாழ்வோ மூழ்கியது.

## தரப்படுத்தல்

----------------------------

சிங்கள இளைய தலைமுறை
பல்கலைக்கழக பட்டங்கள் பெற்று-உயர்
அரச பதவிகளில் அமர்ந்து நாடாள
சிங்கள ஆட்சி வகுத்த வன்முறை தரப்படுத்துதல்

செந்தமிழ் இளைஞர் உயர்கல்விக்கு-
சிங்களம் கட்டிய இரும்பு முள்வேலி
தரப்படுத்தல்



கற்றோர் உலகில்
உயர் கல்வியெனும் தீபத்தை
ஏந்தி நின்று எங்கும் ஒளிபரப்பிய
ஈழத் தமிழனின் மாட்சி ஒழிந்திட
தமிழர் கல்விக்கோர் தரப்படுத்தல்
சிங்கள பேரினவாதிகளின் சட்டமானது.

கலைந்த கனவுகளோடும்
கண்ணீர் முட்டிய விழிகளோடும்
பாராளுமன்ற வாயில் நின்று
உயர்ந்த அதன் கோபுரங்களில்
உண்மையில்லையே எனும் வேதனையில்
வாடி நின்ற தமிழ் இளைஞர்
அடிமைகள் நாம்
உரிமைக் குடிமக்கள் அல்ல
எனும் கசப்பான உண்மையை
அறிந்த ஞானக் கலைஞர்

ஆற்றல் இருந்தும், அஞ்சாமைப் பெருநிலையிருந்தும்
காலம் மாறும் என்னும் நம்பிக்கையில்
கண்ணீர் வடிந்திட காத்திருக்கும் வாழ்வில்
எல்லாம் மாயை தானோ கேள்வியானது?

இளமைக் கனவுகளும், நெஞ்சுற்ற
இனிய நினைவுகளும் கல்லூாரியில் கலைந்திட
களம் நிறைத்த சோகத்தோடும்-இரும்பாய்
கனத்திடும் மனத்தோடும்-கண்ணீர் முட்டிட
வேலை தேடி-இன வாத அலைமோதும்
ஈழக் கரையோரம் அலைகின்றோம்
தார்மீக அரசின் தரப்படுத்தல் கொள்கையால்
பாதிப்புற்ற தமிழ் இளைஞர் நாம்

## வேலைவாய்ப்பு

-----------------------------

எம் இளையதலைமுறையினருக்கு
திறமைகள் இருந்தும், தகுதிகள் இருந்தும்
வேலை வாய்ப்புக்கள் இல்லை
-
சிங்கள அரசியலமைப்பும்
இன, மொழி, மதவாத கட்சி அரசியலும்
ஊழல், அதிகார துஷ்பிரயோகங்களும்
சிறுபான்மைத் தமிழனை பலிக்கடாவாக்கிட
வேலையற்ற படித்த தமிழ் இளைஞர்
கடன் பட்டு பெருநிதி கொடுத்து-கூலிகளாய்
மத்திய கிழக்கை நாடிய அவலம்
கடன் பட்ட பெற்றோர் நெஞ்சிலோ
காவலன் இராவணன் உற்ற துயரம்
.




விபச்சாரத இனவாத அரசியல்வாதிகளும்
சிங்களத் தலைவர்களுக்கு பரிவட்டம் பிடித்து
அமைச்சராக இருக்கை மாறிய தமிழர்களும்
தமிழ் தலைவர்களாக
பதவிகளும் ஏலத்தில் விலைபோயின
தமிழ் தேசியமும் விபச்சாரமானது
ஏழைத் தமிழனுக்கு அரச பணி-முடவன்
கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதையானது
உயர் கல்வி தரப்படுத்தலோ-தமிழ்
இளைஞர் வாழ்வை முடமாக்கும்
போலியோ நோயானது

# தமிழ்

-------------------------

இந்து சமுத்திரத்தின்
இணையற்ற முத்து ஈழம் என போற்றிய தேசம்
எமக்கும் தாயகமான வடகிழக்கு பிரதேசம்
உரிமைக்குடிகள் தமிழர் நாம்-எம்
உயிரும், உணர்வும் தமிழாகி
ஒன்றே குலம் ஒருவனே தேவன்
யாதும் ஊரே யாவரும் கேளீர்
எங்கும் ஒலிக்க
அமுதிற்கு-இனிமைக்கு தமிழை
உவமை சொல்லலாமல்
அமிழ்தினும் இனிய தமிழ்
தமிழ்போல் இனிதாவது உண்டோ?
எனப் போற்றி வாழும் மக்கள் நாம்
கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே
முன் தோன்றிய மூத்த குடியின் வாரிசு நாம்



செம்மொழி எம் மொழி இருக்க
சிங்களம் பயின்றால் மட்டுமே அரச பணி
அரசு அலுவலகங்களில் அனைத்தும் சிங்களம்
ஆட்சிமொழியும் சிங்களம் அரசியலமைப்பாக
பொங்கியெழுந்த எம் முன்னோர் குருதி
1958,1977, -வாழ்ந்த மண்
சிவந்திட சிந்தப்பட்டது நீதியானதா?
எம் உரிமைக்கான அறப்போராட்டம்
அநீதியானதா? சட்டத்தில் குற்றமானதா?




மூன்று வருடங்களில் ஆட்சி மொழி சிங்களத்தை
தமிழர் பயிலல் வேண்டும்-இல்லையேல்-தமிழர்க்கு
அரச பணியில் ஊதிய உயர்வும் இல்லை
பணி நிரந்தரமாக்கலுமில்லை
சிங்கள் மொழியை எம் மத்தியில் பரப்பிட
வேலையற்ற தகுதியற்ற-சிங்களவர்
எமக்கு ஆசிரியர்கள்
பள்ளிகளில், மகாவித்தியாலயங்களில்
கல்லூரிகளில் சிங்களம் பாடமாக
ஆட்சி மொழியாய் சிங்களமும், செந்தமிழும் இருக்க
உறவுப்பாலமமைக்க ஆங்கிலம் கற்போம்
ஒலித்த எம் குரல்-செவிடன் காதில்
ஊதிய சங்கானது?

வறுமையும், வழியற்ற நிலையும்-சிங்கள
அரச மொழிக் கொள்கையும் வாழ்வை பறிக்க
நாம் விழித்துக் கொண்டோம்
எம் உரிமைப் பாதிப்புகளிற்காய்
எம் உரிமை முழக்கத்தை
சிங்களத்திற்கெதிராய் முழங்கினோம்
எம் உறவுகளைத் தட்டி எழுப்பி
எம் விழிப்புணர்வை நாம் காட்டிக் கொண்டோம்.
எம் உரிமை முழக்கங்கள் எங்கும் முழங்கிட
சிறைவாசம் எங்களில் பலருக்கு வாழ்வானது
சதந்திரம் உயிர் மூச்சானது

## சிங்கள குடியேற்றம்

-----------------------------

எம் உரிமைகளை புறந்தள்ளி
நாம் வாழ்ந்த மண்ணில்-நள்ளிரவில்
காளானாய் முளைத்த சிங்களக் குடியேற்றங்கள்

சிறிமாபுர-அனுராபுர, ஜெயந்திபுர-சேருவிலை
அம்பாறை-அல்ல கந்தளாய் என
எங்கள் தமிழ் மண்ணில்
சிறிதாய்ப் பிறந்து பெரிதாய் வளர்ந்த
பல சிங்களக் குடியேற்றங்கள்
இன்றும் தொடரும் அவலம்

எம் வளநிலங்களில் நாம் சிறுபான்மையினராகிட
சிங்கள பேரினவாதம்
அபிவிருத்தியின் பெயரால் புரியும் சதி
திட்டமிட்ட சிங்களக் குடியேற்றம்

பொறுத்தது போதும் தமிழா
பொங்கியெழு தமிழா நாம் அறை கூவிட
அராஜகம் கட்டவிழ்ந்தது.-தர்மிஷ்ட அரசு
தர்மிஷ்ட சமுதாயத்தைத் தோற்றுவிக்க
மலை மேடைகளில் கங்கணம் கட்டிட
தமிழர் வாழும் பகுதிகளில்-1983 ஆடி
இனக்கலவரம் உலகை உலுப்பியது
இனக்கலவரம் ஈழத்தமிழனின் உயிரையும்
வாழ்வாதாரத்தையும் திட்டமிட்டு தீக்கிரையாக்கிட
உயிர் தப்பி இடம் பெயர்ந்த இனம்
உலகெங்கும் அகதிகளான தினம்

We do not like to be robbed of an enemy; we want someone to hate when we suffer. It is so depressing to think that we suffer because we are fools; yet, taking mankind in the mass, that is the truth.

- Bertrand Russell

Get more on RelicsWorld.com

These incidents have changed the entire fabric of Sri Lankan society... Violence became a major tool of socio-political behaviour since then

Chandrika B. Kumaratunga, former Sri Lankan President

1983 ஆடிக்கலவரத்தில்
வாண வேடிக்கையாய் எரிந்த தமிழர் இல்லங்கள்
கொள்ளைபோன தமிழர் செல்வங்கள்

ஆயுதப்படையினரும், பொலிஸாரும் வாழாவிருக்க
எம் மழலைகள், முதியோர்
கனவு வளர்ந்த இறையதலைமுறையினர்
மங்கள வாழ்வு பெற்று இல்லறக் கூடமைத்த குருவிகள்
இனவெறியரால் ஈவு இரக்கமற்று கொல்லப்பட்டனர்.



இனவாத -சிங்களப் அரசியலமைப்பில்
எம் நம்பிக்கை பொய்த்துப் போனது
எம் அரசியல், பொருளாதார, சமூக,
ஆன்மீக, மொழி உரிமைக்காய்
எம் இறையாண்மைக்காய்
எம் பாதுகாப்பிற்காய், வளர்ச்சிக்காய்
எமக்கென ஒரு நாட்டை
தமிழ் ஈழமெனும் தனியொரு இராட்சியத்தை
கோருமளவிற்குத் தள்ளப்பட்டோம்.

இது வெறும் கோரிக்கையல்ல-
எம் எதிர்காலத் தலைமுறையின் வாழ்விற்காய்
நாம் ஏற்ற புனித இலட்சியம்
எம் தியாகங்களால் நாம் யாக்கும் புனித வேள்வி
விண்ணைத் தாண்டி எழும்-எம்
சுதந்திரப் பேரலை

பிறந்த மண்ணில் நாம் அடிமைகளானோம்
உரிமையிழந்து திறந்த சிறைகூடத்தில் வாழும்
அடிமைகளானோம்-
அடிமை விலங்கை உடைத்தெறிய
கண்ணீர் கங்கைகளில் உறவுகள் நீராட
அக்கினியாற்றில் எதிர்நீச்சல் போடும்
போராளிகளாய் நம் இளைஞர் மாறினார்


Fotografía de Gustavo Gutiérrez Merino, teólogo peruano de reconocimiento mundi

எங்கள் துயரங்களில்
எங்களுக்குத் தேறுதல் அளிப்பவரை நோக்கி
எங்கள் கூக்குரலை நாம் எழுப்புகின்றோம்
***வருந்திச் சுமை சுமந்து சோர்ந்திருப்பவர்களே***
***எல்லோரும் என்னிடம் வாருங்கள்***
***உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்***
என்கின்றார் தேற்றரவாளன்

எங்கள் இடுக்கன்களில்-நாம்
அவரை கூவி அழைக்கின்றோம்-ஏனெனில்
தம்மைக் கூவியழைக்கும் ஏழைக்கும்
திக்கற்ற எளியவனுக்கும் அவர் விடுதலை தருவார்
ஏழை எளியவர் மேல் இரக்கம்
கொண்டு அவர்கள் வாழ்வை மலரச் செய்வார்
கொடுமையினின்றும் துன்பத்தினின்றும்
அவர்களை விடுவிப்பார்-அவர்கள் இரத்தம்
அவர் முன்னிலையில் விலைமிக்கது


Leonardo Boff

ஒடுக்கப்பட்ட மக்கள் எம் குருதியால்
வெளிறிய சீவர ஆடைகள் சிவப்பாகின
இனத்துவேஷ நெருப்பில் எழுந்த சுவாலைகள்
போராளியாய் எம்மை புடம் போட்டன

ஆதலால் நாம் இறைமகனை இருகரம் நீட்டி
கண்ணீர் மல்க கூவியழைக்கின்றோம்
ஏழைகளுக்கு இரட்சிப்பளித்து வாழ்வு கொடுத்திட
அவர் மண்ணகம் வந்தார் தாம் பிறந்த ஊரில்
தம்மை வெளிப்படுத்திய போது-இறைவாக்கினர்
இசையாவின் வார்த்தைகளை-இறை
வார்த்தையான அவர் தேர்ந்தெடுத்தார்-




ஆண்டவருடைய ஆவி என் மேலே-ஏனெனில்
என்னை அபிஷேகம் செய்துள்ளார்
எளியோர்க்கு நற்செய்தி சொல்லவும்
சிறைப்பட்டோர் விடுதலையடைவர்
குருடர் பார்வை பெறுவர் என அறிவிக்கவும்
ஒடுக்கப்பட்டவருக்கு உரிமை வாழ்வு வழங்கவும்
ஆண்டவர் அருள் தரும் ஆண்டினை அறிவிக்கவும்
அவர் என்னை அனுப்பினார்
என தம்பணியை அறிவித்தார்




மோயீசனை போன்று மலையில் ஏறி
தம் திருச்சட்டங்களை அவர் கூறினார்
ஏழைகளே நீங்கள் பேறுபெற்றவர்கள்
ஏனெனில் விண்ணரசு உங்களதே
இப்பொழுது பசியாய் இருப்பவர்களே பேறுபெற்றவர்கள்
ஏனெனில் நிறைவு பெறுவர்கள்
இப்பொழுது அழுபவர்களே நீங்கள் பேறுபெற்றவர்கள்
ஏனெனில் அகமகிழ்வீர்கள்
ஆனால் செல்வர்களே உங்களுக்கு
ஐயோ கேடு-ஏனெனில்
உங்களுக்கு ஆறுதல் கிடைத்துவிட்டது

***இப்பொழுது திருப்தியாயிருப்பவர்களே***
***உங்களுக்கு ஐயோ கேடு ஏனெனில் பசியாயிருப்பீர்கள்***
***இப்பொழுது சிரிப்பவர்களே உங்களுக்கு ஐயோ கேடு***
***ஏனெனில் துயருற்று அழுவீர்கள்***
(லூாக் 2,24-25)




அவர் மூலமாகவே-பேரினவாத
அடிமைத்தனத்திலிருந்து எம் மீட்பு
நாம் அவரை நாடிச்செல்கின்றோம்
நாம் அவரை தேர்ந்துகொள்ளுமுன்
எம்மை அவர் தேர்ந்துகொண்டார்
நாம் அவரை தொழுது சரணடைந்தோம்

இது நீதிக்கும், அநீதிக்கும்
இடையில் நாம் தேர்ந்தெடுத்த முடிபல்ல
வாழ்வுக்கும், சாவுக்கும் இடையில்-வாழ்விற்கயா
ஈழத் தமிழர் நாம் தேர்ந்தெடுத்த முடிபு
இறைமக்கள் நாம் என்ற புதிய கனவு

ஈழத் தமிழர் நாங்கள்
எங்கள் வளமார்ந்த வாழ்விற்காய்
எங்கள் நம்பிக்கையை
அவர்மேல் வைத்துள்ளோம்
எங்களுக்கென நாம் நம்பியிருக்கும்
தமிழ் ஈழ அரசுக்குமுன்-
இறையரசை நாம் தேர்ந்துகொண்டோம்

தம் அரசை அவர் இங்கு நிலை நிறுத்தினார்
அதன் பிரஜைகள் நாம் எமக்கென
தமிழ் ஈழமாய் மலரவிருக்கும் தனி அரசுக்கு
அவரையே தலைவனாகவும், முதல்வனாகவும்
நாம் தேர்ந்தெடுத்துள்ளோம்

எங்கள் தேவைகளை
அறிந்த அவர் அதற்காய் தம் பிதாவை
வேண்டும்படி மொழிந்தார்
ஆதலால்
***பரலோகத்திலிருக்கின்ற எங்கள் பிதாவே***
***உம் திரு நாமம் பரிசுத்தம் எனப்போற்றப்படுக***
***உம் அரசு வருக***
***உம் சித்தம் விண்ணுலகில் நிறைவேறுவதுபோல்***
***மண்ணுலகிலும் நிறைவேறுக***




***எங்கள் அன்றாட உணவை எங்களுக்கு அளித்தருளும்***
***எங்களுக்கு தீமை செய்தவர்களை நாங்கள் பொறுப்பதுபோல்***
***எங்கள் பாவங்களை பொறுத்தருளும்***
***எங்களைச் சோதனையில் விழ விடாதேயும்***
***தீமையிலிருந்து எங்களை இரட்சித்தருளும்*** ஆமேன் -(மத் 6,9-13)

எம் பரம தந்தையை நாம் வேண்டுகின்றோம்-இதில்
எம் தேவைகள் அனைத்தும் அடங்கியுள்ளன,
சிங்களச் சகோதரர்களை நாம் மன்னிப்போம்
எமை தீயோனிடமிருந்து காத்திட வல்லவர் ஒருவர்
எம் பக்கமுள்ளார் ஆதலால் நாம் அகமகிழ்வோம்

நீதியின்மேலுற்ற நீங்கா வேட்கையோடும்-வாழ்வின்
உண்மையைத் தேடும் அவாவோடும்
எம் உரிமைக்கு உரித்தான புது வாழ்வை
உம் அரசு வருக- உம் சித்தம் நிறைவேறுக
என்ற திரு மந்திரத்தோடும்
***அன்பே சிவமாக*** –
***சத்தியமே தெய்வமாக*** வாழ்வோம்-
என்னும் மாறா நம்பிக்கையொடு
கண்ணீரைத் துடைத்து புன்னகை பூக்கின்றோம்

# ஆயுதப் போராட்டம்

-----------------------------------

சத்திய கிரகமும், சாத்வீகப் போராட்டங்களும்
சாரமற்ற உப்பாகிட-தரப்படுத்தலால்
வாழ்விழந்து தளர்ச்சியுற்ற இளைஞர்
தமிழ் தலைத்துவத்தில் நம்பிக்கையிழந்து
இறைவனை மறந்து-
“பொன் கன்றுக் குட்டியை” தேர்ந்த நேரம்
ஆயுதபோராட்டம் ஆரம்பமான காலம்


The philosophers Søren Kierkegaard and Friedrich Nietzsche foreshadowed existentialism.

பறை நாய்களாய் சுடப்பட்ட இளைஞர்களுக்காய்
இராக்கேலின் அழுகையொலிகள் எங்கும் கேட்க
செந்தமிழ் மறவர் விடமாலை சூடி, ஆயுதம் ஏந்தி
ஆடிய ருத்திரதாண்டவங்களால் தேசம் எரிந்திட
யுத்தம் அனைத்தையும் அழிக்க
இரத்தம் விடுதலையை பழிக்க
கண்ணீர் கங்கைகள் பெருக்கெடுக்க
“பாபேல் வழிபாடாய்”
திசைமாறிய விடுதலைப் பேராட்டம்



பொன் கன்றாய் “ புலிகளை “ வழிபட்டு
காபேல் ஆபேலை கொன்ற கொடுமைகள் செய்து
இயக்க மோதல்களால் இனமழித்து
பயங்கரவாதிகளாய் பழி சுமந்து
இழிவடைந்த விடுதலைப் போராட்டம்

பாரோவுக்கு எதிராக-
யாவேயின் பத்து கொள்ளை நோய்கள்
சிங்கள இராணுவத்தின் அடக்குமுறைக்தெிராக
போராளிகளின் வன்முறைகள்
மனிதக்கேடயங்களும், சிறுவர் போராளிகளும்
இன அழிப்பும், உச்சம் தொட
பயங்கரவாதம் என்று சர்வதேசம் கண்டித்திட
ஆண்டானும், அடிமையும் வல்லமைதான் நீதி
வன்முறைதான் விடுதலைக்கு நியதி என வழி தவறிட
குருதிக் கறை படிந்த விடுதலைப் போராட்டம்.
***கனவாய், பழங்கதையாய் மாறிட்ட தமிழ் ஈழம்***

எரிநரகிலும் கொடுந்தீ தேசத்தை எரிக்க
கண்ணீரும், செந்நீரும் தீயணைத்து களைக்க
அகதி, விதவை, அங்கவீனர், அநாதை
விடுதலைப் போராட்டத்தின் விகாரங்கள்,
காணமல் ஆக்கப்பட்டோர் எண்ணிக்கை
இன்றும் சிங்கள அரசு ஏற்காத கோரிக்கை?

To sing about freedom and to pray for its coming is not enough. Freedom must be actualized in history by oppressed peoples who accept the intellectual challenge to analyze the world for the purpose of changing it.

— James H. Cone —

AZ QUOTES

வாளேந்திய சிங்கமும், வாய் விரித்து
குமுறும் புலியும் வானில் பறக்கும் கொடிகளாக
கைப்பாஸின் கைதியாய் இயேசுவின் அலங்கோலம்
குளிர்காயும் பேதுரு வடிவத்தில்
கத்தோலிக்க திருச்சபையின் அண்ணக கோலம்
இறைவனும் மதமும் இணையாத எதிர் துருவங்கள்?
இரயில் பாதையின் இணையாத தண்டவாளங்கள்?

இறையாண்மைக்கும், ஆன்மீக, சமூக, பொருளாதார
விடுதலைக்குமான முப்பதாண்டு ஆயுதப் போராட்டமும்
வன்முறையால் பொருளிழந்து விழலுக்கிறைத்த நீராக
தீயில் வெந்தது தேசம்-செந்தணலில் மணந்தது தமிழன் தேகம்

தமிழ் ஈழமும் கலைந்த கனவானது
காணமற் ஆக்கப்பட்டவருக்காய்
கண்ணீர் தவமியற்றும் தாய்குலம்
மறையாத சோகத்தின் வடிவானது?



முறிந்த பனையும்,
எரியும் மனையும் சாட்சியம் பகிர
"***ஒடுக்கப்பட்டோருக்கு உரிமை வாழ்வு***"
முழங்கிய குருவின் சீடர்கள்-
கைபாஸின் மாளிகையில் குளிர்காய்ந்து
விடுதலை இறையிலை (Liberation Theology)
புரட்டிப் பார்த்து ஒதுக்கி வைத்தார்

இனவாதம் அரசாள-அகதிகளாய் தமிழினம்
உலக எங்கும் சிதறி ஓட
இயேசுவின் விலாவை துளைத்துப் பார்த்து
இனவாத அரசு இறப்பை உறுதி செய்தார்

வடிந்த ஒரு துளி நீரில்- ஓராயிரம்
தாய்குலத்தின் ஓயாத கண்ணீர் மழைகள்
சிந்திய ஒரு துளி குருதியில் மடிந்த -பல்லாயிரம்
மானுடத்தின் செந்நீர் அலைகள்

வாஸ்து பார்த்து கட்டிய இல்லங்களோ மணல் மேடுகள்
மூகூர்த்த நேரம் பார்த்து கட்டிய தாலிகளோ
நொந்து அறுந்த நூல் கயிறுகள்

வேதியப் பொய்களால் சாதியம் வளர்த்து
சமூகத்தை சீரழித்த நச்சு களைகள்
அடிமை, குடிமை என்ற பேதங்கள் மலிந்து
பள்ளர், பறையர், கரையார், நளவர்.
சக்கிலியர், அம்பட்டர். முக்குவர். வன்னான்
சண்டாளர், கோவியர் என குலம் கண்ட இனம்
இன்று உலகெங்கும் அகதியாய் சிதறி வாழ்ந்தும்
சாதியம் மதவேதம் எனும் ஈனமானுடம்




பகை கொண்ட உள்ளம்-துயரத்தின் இல்லம்
கண்ணிற்கு கண், பல்லிற்கு பல் நீதியாக
கண்ணீரும், செந்நீரும் சிந்தும் கொடிய போராட்டம்
யுத்ததில் கொலைகள் இல்லை
கொல்வது குற்றமில்லை நீதியான களியாட்டம்

பகைமையை பகைமையால் வெல்ல முடியாது
பகைமையை அன்பினால் வெல்லுங்கள்
புத்த பெருமான் போதனையும்
உங்கள் எதிரியையும் அன்பு செய்யுங்கள்

இயேசு பெருமான் வார்த்தைகளும்
-கேட்பார் இன்றி காற்றில் கலந்தன



சிலுவையில் அறைந்து யூதமதவாதம் கொன்றவருக்காய்
கத்தோலிக்க மதவாதிகளின் சிலுவை யுத்தங்கள்
இயேசுபெருமானை நாளும் சிலுவையில் அறைந்திட,
வல்ல யாவேயும், அல்லாவும் மோதிக்கொள்ள-கொல்ல
"ஏலி, ஏலி லமா சபக்தானி"-என் தேவனே! என் தேவனே
ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்
அப்பாவிகள் கதறல் காற்றில் கலந்து
காதுகளைச் சேர்ந்து மனதை வருத்திட
மத, இன மொழி, நிறவெறி யுத்தங்கள்
மனிதத்தை சிதைத்து இறைவனைப் பழித்தன.

என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்?
என்று மடியும் எம்மவர் பேரினவாத மோகம்?
சிந்திடும் குருதி எல்லாம் சிவப்பு நிறம்
அழுதிடும் கண்ணீரும் ஒரே நிறம்
அழுகையும், புலம்பலும் முகாரி ராகம்



The crime of liberation theology was that it takes the gospels seriously. That's unacceptable. The gospels are radical pacifist material, if you take a look at them . . . Liberation theology, in brazil particularly, brought the actual gospel to peasants. They said, let's read what the gospels say, and try to act on the principles they describe. That was the major crime that set off the reagan wars of terror.

- Noam Chomsky

Get more on RelicsWorld.com

அறிவுக்கனியில் ஞானமில்லை
ஆணவத்தை சிலுவையில் அறைந்தவரே
தூய மனமாய் இனிக்கும் வாழ்வுக் கனியானார்
அறிவுக்கனியும், வாழ்வுக் கனியும் நம்முள்ளே
அறிந்தால் தூய உள்ளமே ஏதேன் வனம்
இறைவன் உலாவிடும் நந்தவனம்

யுத்த முனையில் சிறுவர் போராளிகள்
மனிதக் கேடயங்கள் தாங்கிய ஆயுதவாதிகள்
சத்தமின்றி எரியும் டயர்களில்
இராணுவத்தின் தகனப் பலிகள்
அகதி, அங்கவீனர்,விதவையாய்
சிங்கள, தமிழ், முஸ்லீம்
மூவினத்தின் அவல நிலைகள்
தமிழ் ஈழமோ கானல் நீரான நிலைகள்

ஆணவமே தீமை, அன்பே இறை தன்மை-
உண்மையே விடுதலை
ஆன்மா நாம் என்பதே நம் மெய் நிலை
புத்தர் பெருமானோ தியானத்தில்
இறைமகனோ சிலுவையில்
அகதிகளோ தெருக்களில்

**உலகெங்கும் சிதறிய இனம்**
**ஒன்று கூட வருமோ ஈழச்சுதந்திர தினம்**
பாபிலோன் ஆறுகளருகே அமர்ந்து
நாங்கள் சீயோனை நினைத்து அழுகின்றோம்
அலரிச் செடிகள் மீது தந்தி அறுந்த எங்கள் யாழ்கள்
முறிந்த பனையின் நிழலில் அகதிகள்
எங்கள் ஓலைக் குடில்கள்

இன ஒற்றுமையின்றி தம்முள் போராடும்
மூவேந்தராய்- இன்றும் ஈழத் தமிழினம்
அரியிணையில் இன்றும் அரசாளும்
பேரினவாத சிங்களம்
பரபாஸை தேர்ந்து இயேசுவை
சிலுவையில் அறையும் யூதமத நீதி
சஹரானின் குண்டு வெடிப்பில் அம்பலமான
அல்லாவின் மதவாத பயங்கர அநீதி
கள்வர் குகையான ஆலயங்களுக்கு
கசையால், குண்டுகளால் கும்பாபிஷேஷங்கள்?
இன்றும் மதவாத இருக்கையில்
அன்னாஸ், கைபாஸீ, பிலாத்துகள்

அப்பாவிகள் வாழ்வோ கல்வாரிப் பயணங்கள்
இறந்து உயிர்த்தெழ-தமிழ் ஈழம்
இறைமகனல்ல என்ற உண்மைகள்-வாழ்வில்
ஏதும் நிலையல்ல என்ற நிதர்சனங்கள்
ஆணவம் துறந்து நம்மை நாமறிதலே மெய்யான விடுதலை
**சச்சிதானந்தமமே நம் பெருநிலை**

அடக்கியாளும் பேரினவாதமோ க்ஷத்திரிய ஜாதி
உழைப்பை சுரண்டிடும் முதலாளிவர்கமோ வைசிய ஜாதி
அபினும், போதையுமான மதவாதமேத பிரமாண ஜாதி
அடிமைகளான தமிழினமோ சூத்திர ஜாதி
இன்றும் வாழும் மனுநீதி என்றுதான் அழியுமோ?
சமத்துவ சமதர்ம சமுதாயம்
உழைக்கும் வர்கத்தின் கலைந்த கனவான நீதி ?

இருத்தலியல் (Existentialism)-ஆளுமைவாதம் (Personalism)
விடுதலை இறையியல் (Liberation Theology)
அரசியல்  இறையில் (Political Theology)
ஒடுக்கப்பட்ட மக்களுக்கான புதிய வேதம்
ஓதுவாரின்றி நூல் நிலையங்களில்
வெறுமனே கண்காட்சியான அவலம்

To force oneself to believe and to accept a thing without understanding is political, and not spiritual or intellectual.

THE BUDDHA WAS NOT A GOD.
HE NEVER CLAIMED TO BE A GOD.
HE NEVER CLAIMED TO BE A SON OF GOD.
HE NEVER CLAIMED TO BE A MESSENGER OF GOD.
HE WAS A MAN WHO ACHIEVED NIRVANA THROUGH HUMAN EFFORTS.




"realization" and the needs or demands of social life. Personalism also implies inter-personalism, as Benedict XVI stresses in *Caritas in Veritate*:

> As a spiritual being, the human creature is defined through interpersonal relations. The more authentically he or she lives these relations, the more his or her own personal identity matures. It is not by isolation that man establishes his worth, but by placing himself in relation with others and with God.[10]

மானுட அவலத்தில் துன்புறும் கிறிஸ்துவை
காணாத மதம்-குருடனுக்கு
குருடன் வழிகாட்டும் அவலம்
ஒடுக்கப்பட்டோர் உரிமை வாழ்வுக்காய்
குரல் கொடுக்காத மதம்-ஊமையும், செவிடுமாய்
ஆளும் வர்க்கத்திற்கு சாமரம் வீசும்
அண்ணக இனம்

கொடிய சிங்கங்களுக்கு-அடிமைகளை,
ஆதிக்கிறிஸ்தவர்களை பலிகொடுத்தல்-
அன்றைய ரோம சம்ராஜ்யத்தின் கொண்டாட்டம்
வாளேந்திய சிங்கத்திற்கு -தமிழினம்
ஆதிக் கிறிஸ்தவர்களாய்-பலியாவதைக்
கண்டும் காணாதிருத்தல்- திருச்சபைக்கு திண்டாட்டம்
பாரோவுக்கும், நீரோவுக்கும் அமர்ந்த அரியாசனம்
மதவாத அன்னாஸ், கைபாஸ், அமர்ந்திட
இன்றோ வத்திகானின் சிம்மாசனம்
ஆசனங்களிலும் சிங்கத்தின் இலட்சனைகள்?

இறைசாயலாய் மானுட வடிவம்
ஆதாமின் ஆணவத்தால் சாபமான இறைநிலை
இயேசுவின் பரிபூரண சரணாகதியால் வரமாகிட
இறை வார்த்தையை தவமாக்குபவன் வாழ்வில்
கிறிஸ்துவின் இரண்டாம் வருகை நிதர்சனமே

அரசியல், சமூக, பொருளாதார, ஆன்மீக
சமத்துவம் கிடைக்காதவரை உலகில் அமைதியில்லை
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
பூவுலகில் நன்மனத்தவருக்கு அமைதி
ஒரு நாணயத்தின் இரு பக்கங்களே
தூய மனமே இறை மனம்- இறைமகிமை அங்கே
நல் மனமே இறை மனம்- அமைதியும் அங்கே

எங்கள் கனவுகளை -இன்றும்
நெருப்பும், இறப்பும் அச்சுறுத்த
குருதியும் கண்ணீரும் வெள்ளமிட
கயிறறுந்த காற்றாடியாய் அல்லாடி-கண்ணீர்
கடலில் நீராடும் பரதேசியாய் ஈழத் தமிழன்?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22.2.2022*

# அக்கினி அம்புகள்

---

சிங்களப் பேரினவாதச் சிலந்தியின்
கொடிய அரசியலமைப்பு வலையில்
சுதந்திர கீதமிசைத்த செந்தமிழ் குயில்
சிறைப்பட்ட அவலநேரம்

பௌத்த விகாரைகளிலும்-பேரினவாதிகளின்
அரசியல் மேடைகளிலும்-ஈழத் தமிழனை
அச்சுறுத்தும் இனவாதத் தியானங்கள்
அமைதியை பழிக்கும் பிரித் ஓதல்கள்

1983-ஆடிக் கலவரத்தில்
பேரினவாதத்தின் கொடிய காவடியாட்டம்
குண்டர்கள் கையிலோ செடிக்கயிறு
ஈழத்தமிழன் முதுகிலோ-கொடுமுள்ளு

சொத்தும், சொந்தமும் சொக்கப்பனையாய் எரிந்திட
ஆண்டபரம்பரை அகதிகளானது
வாழிடமிழந்து புகலிடம்தேடிட
கடல் கடந்தோடும் நிலைக்கானது

தமிழ் நெஞ்சிலோ கனல் கக்கும் எரிமலையாய்
பொங்கிடும் சுதந்திர உணர்வு
எம் வாழ்விலோ கனத்திடும் பெருஞ் சுமையாய்
சிங்களம் பூட்டிய அடிமை விலங்கு

மண்ணின் விடுதலைக்காய் மறத் தமிழன்
எரிமலையாய்ப் பொங்கி , கடும் புயலாய் மாறி
விட மாலை சூடி, கனல் ஏந்தி ருத்திர தாண்டவமாடும்
விடுதலைப் புலிகளாய் உருமாறிட
அமைதிப் பூங்காக்களில்- எரிமலைகளின் கண்விழிப்பு
தென்றல் விளையாடிடும் நீர்சுனைகளிலோ
கொடுஞ் சூறாவளியின் அணிவகுப்பு

கண்ணீர் கங்கைகளும் குருதியாறுகளும் கரைபுரண்டோடிட
சோகச் சுனாமி வந்தது, விழிநீர் காய்ந்து சோகம் பொங்கிட
நெஞ்சம் பாலையானது-பிறந்த மண்ணே
திறந்த சிறைக்கூடமான அவலமிங்கே
எரியும் டயர்களே இளையதலைமுறைக்கு சிதைகளான
இராணுவ மரியாதைகளுமிங்கே.

வான்பாயும் ஏவுகணைகள் விமானங்களுக்கு-தீ மூட்டிட
நிலக்கண்ணிகள் இராணுவத்திற்கு புதைகுழிகள் வெட்டிட
ஈழமெங்கும் பிணவாசம் இல்லமெங்கும் இழவோலம்
வழிபார்க்க- கண்ணீர் விழிமறைக்கும்
வழிநடக்க நிலக்கண்ணி அச்சுறுத்தும்

எரியும் டயர்களில்-கருகிடும் பிணங்கள்
நெஞ்சில் அக்கினி மூட்டிட
அச்சக் குளிர் காய்ந்த அப்பாவிகள்
வனவாசம் போனார் ஆயுதம் ஏந்திட

இளைய தலைமுறையை கீறிப்பார்த்து புரட்சியின்
ஆணிவேரை, அறுத்திடத் துடிக்கும் ஆய்வுகள்-எரியும்
டயர்களிலோ வளரும் தலைமுறையை எரித்துப் பார்த்து
புரட்சித் தீயை அணைக்க முயலும்-கொடிய முயற்சிகள்

எரிமலையைச் சிறையிலிட்டு-கடும் புயலை
காட்டிற்கு விரட்டி
சுதந்திர குயிலைக் கூண்டிலடைத்திட
இராணுவத்தின் ஓயாத படையெடுப்பு

அடக்குமுறையில் அராஜகத்தின் வன்முறை
ஆயதக் கலாச்சாரத்தின் நிறங்களில்
குருதிச் சிவப்பும் சாவின் கறுப்பும்

கண்ணீரில் கரையாத வண்ணங்கள் பூசி
காலத்தால் அழியாத சோகத்தழும்புகள் தாங்கி
ஆண்டவனைத் தேடிடும் அப்பாவிச்சமூகம்

சுற்றி வளைப்புகளில் காணாமல் போனவர்கள்
கருகிச் சாம்பலாயிட
கண்ணீர் கடலில் மூழ்கிடும் உறவுகள்

தீயும், ரவைகளும் தீண்டித் துளைத்த தேகங்கள்
மண்ணில் வீழ்ந்து மறுபடி முளைத்திட
ஓயாத யுத்தம்-கங்கையாய் ஓடிய இரத்தம்

பெற்றோரையும், உற்றோரையும், கற்றாரையும்,
காவலரையும் சுட்டழித்த இராணுவம்
சுடுகாட்டில் வெற்றிக் கொடியேற்ற
ஒப்பாரிகளின் மத்தியில் ஒலிக்கும் தேசிய கீதம்

கண்ணுக்கு கண் பல்லிற்குப் பல் ஆயுதவாதிகளின் கீதை
பகைவனுககு அன்பு புத்தர். இயேசுவின் மாறாத போதனை

சட்டமும் நீதியும் புத்தகங்களில் உறங்கிட
சாக்கிய முனியும் தம்மமும் சங்கத்தில் சிறைப்பட
முப்பிணியால் வாடிய தேசம்

ஆயதவாதிகளின் அராஜக வேதத்தில்-நாளும்-
அப்பாவிகளின் சிலுவைமரணங்கள்
சிலுவை அடியிலோ-கண்ணீரோடு
அபலைத் தாய் மரியாள்கள்

அப்பாவிகளை பணயக் கைதிகளாக்கி
கப்பங்கள் வசூலிக்கும்- துப்பாக்கி மனிதர்கள்
சிறுவர்களை போராளிகளாக்கி-பெற்ற வயிறு
பற்றி எரிய சோகத் தீயை மூட்டிய அரக்கர்கள்.

தேசியம் பேசிய அரசியல்வாதிகளின் பிள்ளைகளுக்கு
அயல் நாடுகளில் உயர் கல்வி-ஏழ்மையும்
அச்சமும் வாட்டிடும் ஏழைகளின் பிள்ளைகளுக்கு
வனங்களில் கட்டாயப் போர்ப் பயிற்சி

செலவர்களின் பிள்ளைச் "செல்வங்களுக்கு" கோடி மதிப்பு-
ஏழைகளின் வாரிசுகளுக்கோ செல்லாகாசின் அவமதிப்பு
அப்பாவிகளின் முதுகில் -தலைவர்களின் பவனி
அபலைகளின் விழிகளிலோ- கண்ணீர் ஊறணி

***கண்ணீருக்கும், குருதிக்கும் நிறத்தில் பேதமில்லை***
***நீருக்கும் காற்றுக்கும் இன, மொழி, மத பேதமில்லை***
***மானிடரே ஒன்று படுங்கள் -அமைதிக் கீதமிசையுங்கள்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30.3.2-23*

# அக்கினிப் புஷ்பங்கள்

---

நிலவு தூங்கிய அமாவாசை இரவில்-தமிழ்
உறவுகளைச் சாய்க்க சிங்களத்தின் படையெடுப்பு
கண்ணீரில் மூழ்கிய புதுக்குடியிருப்பு
முகமூடிகள் வடிகட்டச் சுற்றி வளைப்பு

வெடிகுண்டுகளின் வெளிச்சத்தில்-அக்கினி கக்கி,
குடியிருப்புகளைத் தீயத்து-உயிர்கள் தேடி-
நச்சரவங்களாய் ஊரும் இராணுவம்

குரைத்த நாய்கள் குண்டுகள் துளைத்து
கொசுக்கள் மொய்த்து விறைத்துக் கிடந்திட
முளைத்த பயிரையும், செழித்த ஊரையும்
சிதைத்து அழித்த இராணுவத் தாங்கிகள்

குருதியும், தசையும் குழம்பிக் கலந்த மண்ணை
அடிமைத்தன அறுவடைக்காய்-ஊரடங்கில் உழுது
பயங்கரவாத தடைச்சட்டத்தில்
அச்ச விதைப்பை நடத்திய அராஜகம்

மனை மாட்சியழிய, மாதா, பிதாவோடு சொந்தமழிய
குண்டுகளால் சிவந்த வானில் புது உதயம் வந்ததென்று
கொக்கரித்து கூவியது ஏமாந்த சேவலொன்று

முறிந்த பனையும், எரிந்த தென்னையும் வழியெங்கும்,
தீய்ந்த தென்றலும் தீயுண்ணும் சவங்களும் வாழிடமெங்கும்,
குருதியும் தசையும் குழம்பிக்கலந்த மண்ணோ-பூமியெங்கும்

விடுதலை விருட்சங்கள் பூத்திட
அக்கினிப் புஷ்பங்கள் சொரிந்திட
இது போர்க் காலம்

கைதான இளஞருக்கு எரியும் டயர்கள் சிதையாகிட
காலன் புரியாய் புதுக்குடியிருப்பு மாறிட
தீமேயும் ஊர்கள் பகைமையைப் பறைசாற்றிட
பிணவாடை முகர்ந்த உயிர்கள்-விடுதலையைச் சுவாசிக்க,
சுதந்திரக் காற்றைத் தேடிக் களைத்தன

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
Pax.Ravichandra-3-04-2023

# அக்கினிப் பறவை

குண்டு வீச்சில் கருகிய தாலிகள்தான் எத்தனை?
கொடுஞ் சிறைகள் பறித்த-தாலிகள்தான் எத்தனை?
எரியும் டயர்களில் உருகிய மாங்கல்யங்கள்தான் எத்தனை
துப்பாக்கிச் சூட்டில் அறுந்த மஞ்சள் கயிறுகள்தான் எத்தனை?

சூடிய மணமாலை வாடுமுன்-மலர்களும்
மஞ்சளும், குங்குமமும் கலைந்ததென்ன?
மணமாலையே-மணமகனிற்க்குப்
பிணமாலையானதென்ன?

பூச்சூடும் பூவை மணமாலை சூடுமுன்
கருகிய பூவானதென்ன?
சூடிக் கொடுத்த மணமாலையை
அறுத்துப் பறித்த அராஜகம்தான் என்ன?

அடிவயிற்றில் அவியா நெருப்பெரிய
கைத்தலம் பற்றிய கணவன் மடிந்திட
கைமை பூண்ட இளந் தாய்கள்தான் -தமிழ்
ஈழத்தில் எத்தனை? எத்தனை?

மஞ்சளும் , குங்குமமும், மாங்கல்யமும் கூறையும்
அக்கினி வண்ணங்களாயிருப்பது-சுதந்திரத் தாயே
உன் நெஞ்சில் எரியும் சுடரைச் சுட்டவோ?

பூவாய் பூத்த பூவையரைக்
கறபழித்து கொன்ற அராஜகம்
தாய்களையும், போய்கள் சிதைத்து
காமம் தணித்த அசுர யாகம்

கண்ணீரால் கழுவியும் போகாத கறை
காலமெல்லாம் நிலைத்தால்-வாழ்வே பெருஞ்சுமை
தீச்சூடி- தீயில் மலர்ந்த பெண்மை
கற்பே பெண்ணின் மேன்மை

அக்கினியாற்றிலும், அணையாத
எரிமலைக் குழம்பிலும் பெண்மையின் எதிர்நீச்சல்
பூபாளம் பாடும் புள்ளினமாய்-களத்தில்
விடுதலைப் பறவைகளின் தீப்பாய்ச்சல்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***

Pax Ravichandra-3.04.2023

# அல்லாஹூ அக்பர்

<u>காத்தான்குடி</u>

நாம ரூபம் இல்லாத ஏகன் இறைவனை
அளவற்ற அருளாளன்-நிகரற்ற அன்புடையோன்
என போற்றி புகழும் ஈசனை
அல்லாஹூ அக்பர் என்றே கண்ணியமாய் வாழ்த்தி
ஐவேளை பள்ளிகளில் தொழுது மகிழ்ந்தவர்கள்
புள்ளிமான்களாய் வேட்டையாடப்பட்டார்
பலிக்கடாக்களாய்க் சுட்டுக் கொல்லப்பட்டார்.

உடல் துளைத்து உயிர் பறித்த குண்டுகள் சுவர்களில் ஓய்வு கொள்ள
உயிர்கலம் உடைத்து ஓடிய குருதி அடைக்கலம் தேடி தவித்து நிற்க
தொழுகையில் மூழ்கியவர்கள்- உறவுகளை
அழுகையில் மூழ்கவிட்டே பிணமாகிக் கிடந்தார்-

தொழவந்தவர் மீளாத் துயில் கொள்ள
அழவந்தவர் தொழுதே அழுதார்
“யா அல்லா ஏன் எம்மை கைவிட்டாய் ”

<u>ஏறாவூர்</u>

அன்னையின் மார்பில் பால்குடி மறவாத சேயும்
தந்தையின் அணைப்பில் மழலை மறவாத தனயனும்
அம்மையப்பனோடு மாண்டு கிடந்திட-கொஞ்சிக் குழாவி
கூடி மகிழ்ந்து உறங்கிய உறவுகள்-குடிசைகளில்
ஈக்கள் மொய்த்திட உடலங்களாய் நாறிக்கிடந்தார்

கருவோடு கர்ப்பிணித் தாயும்-மூப்பின் அழகோடு
பெற்றோரும் ஒன்றாய் மாண்டு கிடந்திட
மொய்த ஈக்களின் ரீங்காரம் முகாரியானது

அன்னை தானிங்கே தன் ஆருயிரை தேனமுதை
குண்டுபடாமல் காத்திட தன்னுடலை கவசமாக்கினாள்
தந்தை தானிங்கே குஞ்சுகளை காத்திட
நெஞ்சில் குண்டுகள் தாங்கினான்.

எமனும் தன் இயலாமைக்காய் வருந்திட
காத்தான்குடியில்- பள்ளிவாயில்கள் இரண்டு
“காத்தான்” யாருமின்றி காலன் புரியாயின
ஏறாவூரில் சேரிகள் சில யமபுரியாயின

வன்முறையின் வடிவங்களாய்
வலுவிழந்த விடுதலைப்போராட்டம்
பயங்கரவாதமாய் திசை மாறிய சூதாட்டம்

வெறிகொண்ட வேங்கையும்-மதிகெட்டு
வெள்ளாடுகளை குட்டிகளோடு வேட்டையாடிட
விடுதலைப்போராட்டத்திலும்- தீராக் கறையாய்
பாவச் சுமையாய் படிந்த பயங்கரவாதம்

இதயங்களில் ஏற்றி வைத்த சுதந்திர நெருப்பு
இனவாதப் புகையாய் உருவழிய
திசைமாறிய பயணத்தில் போராட்டம் நெறி தவற
இனங்கடந்த நல்லிதயங்கள் வாடி நலிந்தன

கள்ளிருக்கும் மலர் வனத்தை
முள்ளிருந்ததென்று சொல்லி அழிக்கலாமோ?
கனிகொடுக்கும் பழமுதிர்ச்சோலையை
நாகம் குடி வந்ததென்று சொல்லி எரிக்கலாமோ?

பாங்கொலியாய் ஒலிக்கும் அழுகையும்
வல்ல அல்லாஹ்வை கூவியழைக்கின்றது
இன்றும் ஆபேலின் இரத்தம்-**அல்ஹகமிடம்**( (நீதியுள்ளவர்)
சகோதரன் காயீனின் அநீதிக்காய் நீதிகேட்கின்றது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30.3.2023

# அமைதி காக்கும் படை

---

கன்னியர் மார்பில கைக்குண்டுகளையும்,
அன்னையர் ஆடைகளில் ஆயுதங்களையும் தேடுகின்ற
காடையர்தான் இந்திய அமைதிப்படையினரோ?
ஈழ மண்ணில் அமைதி நிலை நாட்ட வந்த
பாரத மண்ணின் அகிம்சா புத்திரரோ?

மகா வீரரும்,கௌதம புத்தரும், காந்தியும்
வாழ்ந்த மண்ணின்-வீர மைந்தர்கள்
துச்சாதனன்களாய் மாறிய அவலமுமிங்கே,
கீதையும், தம்மபதமும் தந்த பூமியின் தேவர்கள்
வாதையும், அதர்மமும் புரிந்த கொடுமையுமிங்கே.

மழலைகளின் அழுகுரலும், மங்கையரின் கண்ணீரும்
ஈழத்தமிழ் மண்ணில் இன்னும் ஓயவில்லை
பாலிற்காய் மழலைகள் அழ, பறிபோன கற்பிற்கும்,
உயிர்போன காதலினிற்குமாய் பூவையர் அழ,
உருகும் விழிகளால் பெருகும் கண்ணீர் வெள்ளம்
ஊரையும், உறவுகளையும் மூழ்கடிக்க,
இந்திய அமைதிப்படையால் இருந்த நிம்மதியும்
இறந்த பிணமானது வடியும் கண்ணீரில்
அஸ்தியாய் கரைந்துபோனது.சோகம் சொந்தமானது

வெள்ளையரும் வியப்புற இந்தியத் துரைகளால்
ஈழமெங்கும் எட்டப்பர் கூட்டம்-
பிள்ளைகளெல்லாம் கட்டப்பொம்மன்களாகிட
வானை முட்டிய சுதந்திரகோஷம்.

இந்திய அசுரனை என்று நாமழிப்போம்?- எம்மவர்
சிந்திய குருதிக்கு என்று நாம் பழிதீர்ப்போம்?
எம் அன்னையர் கண்ணீரை என்று நாம் துடைப்போம்?
எம் தங்கையர் கற்பிற்கு என்று நீதி வழங்குவோம்?

சுதந்திரக் கவிபாடிடும் ‘‘புதிய பாரதிகளின்’’
விடுதலை முழக்கங்கள் வீதியெங்கும் ஒலிக்க
எதுவும் நிரந்தரமில்லை எம்
சுதந்திரமொன்றே நிரந்தரம்

உலகை அதிரவைத்த, எச்சில் இலைகளாய்
குண்டுகள் உண்டு துப்பிய உடலங்கள் தெருவெங்கும்-
தமிழ் ஈழமே உயிர் மூச்சான வேங்கைகளால்-அஞ்சிய
ஆடுகளும் புலிகளாய் ஆண்மை பெற்ற மாற்றங்கள்

சாவும், அழிவும், சகோதரிகள் வயிற்றில்
கலப்பினச் சந்ததியும் அமைதிப்படையின் நன்கொடையாக,
இனவாதப் பேயும், ஏகாதிபத்திய பூதமும்
ஒன்றிணைந்த கூட்டணியோ கௌரவப் படையணியாக
ஈழமண்ணில் -இன்று ஒரு புதிய குருஷேத்திர யுத்தம்

எட்டப்பனும் அரியணை அமர்ந்திட
கட்டபொம்மன் கானகத்தில் வாழ்ந்திட
இந்திய ஏகாதிபத்தியமும், சிங்கள இனவாதமும்
ஈழத்தமிழர் எம்மேல் திணித்திட யாத்த
இந்திய இலங்கை ஒப்பந்தம் அடிமைச் சாசனமோ?-
இல்லை இந்தியருக்கு வழங்கிய உரிமைப் பட்டயமோ?

உயிர் தமிழிற்கும் உடல் மண்ணுக்குமாய் -எரிநெருப்பில்
தம் எ.ஃகு தேகத்தை தினமுருக்கும் தவப்புதல்வர்
தமிழ் ஈழத்திற்கு நிகரில்லாத அரசியல் தீர்வை
எதிர்த்திடத் மூண்ட யுத்தம்

பூவையரே வெடிகுண்டு தாங்கி நடமாடும் எரிமலையாகிட
பொன்னுடலே புது சுடராய் சிதறி ஒளி சிந்திட
அன்னை காளியால் புதிய மகிசுவர வதம்

ஊர்களும், மனைகளும் உருவழிந்து காடாகிட,
அன்னையரும், கன்னியரும் தீக்குளித்துச் சுடராகிட
சீரழிந்த தேசமெங்கும் ஒப்பாரியும், புலம்பலும் ஒலித்திட
அமைதி பகற் கனவானதென்ன?

உயிரால் ஈகைச்சுடரேற்றி, உதிரும் தேகத்தை
செஞ்சந்தனமாய் தேய்த்து சுவாசக்காற்றிலும்
சுதந்திர வாசம் வீசிட வேங்கைகளின் விடுதலைக்கீதம்
புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம்

***வாழ்க நிரந்தரம் -வாழ்க தமிழ்மொழி-வாழிய வாழியவே!***
***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-27.03.2023

# அம்மா சீக்கிரம் வாங்க

---

போர் ஓய்ந்தும் தணல் ஆறாத யுத்தபூமியில்
முறிந்த பனையாய் மானுடம் வாடிட
ஆறாத மனக்காயம் -தீராப் பெரும்பிணியாய் மாறி
நடைப்பிணமாய் வாழ்வு சிதைந்திட
புலம்பெயர்ந்தவர் அனுப்பும் பணத்தால்
புதுப்பழக்கமாய் மதுவும்,
கேரள கஞ்சாவும், போதைவஸ்தும்
இளைஞர் வாழ்வை நஞ்சாக்கிட-அமைதிதேடி
விரக்தியால் அழிவுறும் மனிதகுலம்

விந்தியா முதல் சிறுமி ஷிரோமிவரை பாலியல்
வன்முறைக்குப் பலியாக, பாதுகாப்பில்லாத
வட புலத்தில் புதுப் பயங்கரவாதமாய்-போதைவஸ்து,
மது, பாலியல் வன்முறைக் கலாச்சாரம்

புலம்பெயர்ந்து நீ போகத்-தாயே இடம்பெயர்ந்து வாடிய
உன் மொட்டு இன்றோ பூவனமாய் பூத்துக் குலுங்கிட,
கண்படும் என் அழகை மொய்க்கும் காமவிழிகள்
களவாய் சிதைத்திடத் துடிக்கும் காமப்பேய்கள்

வேலியே பயிரை மேயும் அபாயமாய் மாமன் விழிகள்-
அண்டை வீட்டுக் காளையர் கண்சாடைகள்
விளையாடப்போனாள்-விளையாட்டாய்
தொட்டுப் பார்த்து இரசிக்க தடவல்களிலும்,
உரசல்களிலும் காமச்சூடு தணிக்கும் கழிசடைகள்

நாளும் செய்திகளோ கற்பழிப்பு, கொலையாக
பள்ளி செல்லும் பாதையும் தீக்குளிக்கும் வழியாக
பயமாய் இருக்குது அம்மா, மானம் அழிந்து
நான் மடியுமுன்- தாயே வந்துவிடு

பொன்மேனியை மொய்த்தே புண்ணாக்கும் போதை விழிகள்
பாலியல் வல்லுாறு செய்யத் துடிக்கும் காமப்பேய்கள்
கண் படும் போதெல்லாம் புண்ணில் விழும் அமிலத்துளிகளாய்
பூ நெஞ்சம் புண்பட, இடையினம் தொட்டு, மெல்லினம் சிதைய
வல்லினம் என்னை வல்லாங்கு செய்யமுன்
தாயே வந்துவிடு-உந்தன் குழந்தை
தமிழினி என்னைக் காத்துவிடு

பூ மொய்க்கும் தேனீக்களும்,
புண் மொய்க்கும் ஈக்களும் நிறைந்த உலகில்
கண்மொய்க்கும் காமுகர் பார்வை
கருந்தேளாய் மேனி ஊரக் கலங்குகின்றேன்-அம்மா
உன் வரவிற்காய் தவமாய் தவமிருக்கின்றேன்

நீராடும் போது நிம்மதி நாடி-தாயே
கண்ணீரில் நீராடும் என் விழிகள்-அஞ்சி
துயிலும் போது கண்ணீரால் நனையும்
என் தலையணை, பஞ்சணைகள்

தேனீக்கு கொடுக்கும், ரோஜாவிற்கு முள்ளும்
ஈந்த இறைவன் பெண்மைக்குத் தந்தது ஏதம்மா?
என் அழகே எனக்குப் பகையாக
பரிதபித்து புலம்பியழைக்கின்றேன்
வா அம்மா சீக்கிரம் வா

தாய்மடி காணாத பருவக்குமரி-இன்னும் உந்தன்
சின்ன ராஜகுமாரி கொழுகொம்பில்லாத முல்லைக்கொடி
உன் மடியில் நான் முகம் புதைத்து என் மனப்பாரம் தீர
அழவேண்டும், அச்சமின்றி நான் வாழ-அருகில்
அன்னையே நீ வேண்டும்
வருவாயா அம்மா? சீக்கிரம் வந்துவிடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra*

# அணையாத நெருப்பு

---

அணையாத நெருப்பினை ஆவிக்குள் மூட்டு
கலையாத கனவினை கண்களுக்கு காட்டு
தணியாத தாகத்தை நெஞ்சினில் ஏற்று
விலைமதிப்பில்லா விடுதலைக்காய்-தமிழா
போர் முரசை மீண்டும் கொட்டு

முடியாதது என்று ஏதுமில்லை-தமிழா
விடியல் வராத இரவுகளுமில்லை
விழுவதால் அலைகள் மடிவதில்லை
தேய்வதனால் நிலவு அழிவதில்லை.

சோகங்கள் சுமக்காத இதயங்கள் இல்லை
கண்ணீரில் மூழ்காத விழிகளுமில்லை
சாவு தீண்டாத இல்லங்களுமில்லை
ஞானம் தேடிடத் துறந்து வா
புதிய சித்தார்த்தனாய் எழுந்து வா

உறங்கிடும் கல்லறைகள் உயிர்த்தெழட்டும்
கலைந்திட்ட கனவுகளும் புத்துயிர் பெறட்டும்
எழுந்த போராடு -விழுந்தவை விதைகளாகட்டும்
விடுதலையின்-புதிய முளைகளாகட்டும்

சரிந்தவையும் குண்டடிபட்டு சாய்ந்தவையும் உரமாகிட-
உறுதிகொண்ட நெஞ்சோடு எழுந்துவா
இன்னுமொருமுறை போராடுவோம்-எம் விடுதலைக்காய்
இடைவிடாது அக்கினி நீராடுவோம்

விழுந்தவை ஆகுதிகளாகட்டும்-புதிய
விடுதலை யுத்தம் வேள்வியாகட்டும்
காயமாகிப்போன காயங்கள்- விழுப்புண்களாகட்டும்
கருவிழிகள் சிந்தும் நீர் தீர்த்தமாகட்டும்

அந்திச் சிவப்பை அணிந்த வானும்
சிந்திய குரதியால்சிவந்த நந்திக் கடலும்
கூவி அழைக்கிறது எழுந்து வா-ஈழத் தமிழா
இன்னொருமுறை போராடத் துணிந்து வா

சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்
நீந்திக் கடந்த நெருப்பாறும்
ஆயுதப்போராட்டத்தின் நீங்கா நினைவானது

எந்தையும் தாயும் வாழ்ந்த திருநாடு
இன்றும் அடிமை -நெஞ்சில் பாய்ந்த
நெருஞ்சி முள்ளானது

புகலிடம் தேடும் அகதியாய் நாம் மாறிட
நன்றோ தமிழா-நாடுகள் வென்று ஆண்ட தமிழா
உண்டென்று நீ சொல்ல
உலகில் உனக்கென்று ஒரு நாடு கொள்ள
போராட எழுந்து வா

அன்பே சிவமென அனுபூதியில் அறிந்தே
அகிம்சை வழி செல்வோம்.
அறப்போரால் நாடு கொள்வோம்

விழுந்தாலும் எழுகின்ற அலைபோல் தொடரும் எங்கள் எழுச்சி
விழுந்து மடிந்தாலும் உயிர்க்கின்ற பீனிக்ஸ் பறவைபோல்
உயிர்க்கும் எங்கள் முயற்சி

***வானமே எங்கள் எல்லை***
***தமிழ் ஈழமே எம் உயிர் மூச்சின் எல்லை***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# அஞ்சலி

---

உணர்வுகளை எரித்துப் பொசுக்கி
கண்ணீரை அடக்கி ஒடுக்கி
கனத்த உள்ளத்தோடு-களம் வீழ்ந்த
தோழனை விதைத்தோம்

தோழர்களே, கண்ணீர்பூக்களும்,
வண்ண மலர்களும் வேண்டாம்
வாடிய மலராய் அவன் உதிரவில்லை
தமிழ் ஈழ அன்னைக்கு
குருதிப்பூவாய் தன்னை அர்ச்சித்த
வீரமகன் நம் தோழன்.

தீபங்கள் வேண்டாம்-தன்னையே
ஆகுதியாய் எரித்த தியாகி அவன்
கல்லறை வேண்டாம்-இவன்
புதைக்கப்படவில்லை-தமிழ் நெஞ்சங்களில்
தன்னை விதைத்துக்கொண்டான்.

தூபங்கள் வேண்டாம்
தமிழ் மண்ணை சுவாசித்து நேசித்தவன்-பாசமே
எம் சுவாசத்தை நிறைக்கும் வாசம்

கண்ணீர் அஞ்சலி வேண்டாம்
அஞ்சாமையே அவன் வேண்டும் அஞ்சலி-
அதுவே ஈழத் தமிழ் அன்னையின்
அடிமை விலங்குடைக்கும் சங்கொலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-5-2023

# அம்மா சீக்கிரம் வாங்க

---

போர் ஓய்ந்தும் தணல் ஆறாத யுத்தபூமியில்
முறிந்த பனையாய் மானுடம் வாடிட
ஆறாத மனக்காயம் -தீராப் பெரும்பிணியாய் மாறி
நடைப்பிணமாய் வாழ்வு சிதைந்திட
புலம்பெயர்ந்தவர் அனுப்பும் பணத்தால்
புதுப்பழக்கமாய் மதுவும்,
கேரள கஞ்சாவும், போதைவஸ்தும்
இளைஞர் வாழ்வை நஞ்சாக்கிட-அமைதிதேடி
விரக்தியால் அழிவுறும் மனிதகுலம்

விந்தியா முதல் சிறுமி ஷிரோமிவரை பாலியல்
வன்முறைக்குப் பலியாக, பாதுகாப்பில்லாத
வட புலத்தில் புதுப் பயங்கரவாதமாய்-போதைவஸ்து,
மது, பாலியல் வன்முறைக் கலாச்சாரம்

புலம்பெயர்ந்து நீ போகத்-தாயே இடம்பெயர்ந்து வாடிய
உன் மொட்டு இன்றோ பூவனமாய் பூத்துக் குலுங்கிட,
கண்படும் என் அழகை மொய்கும் காமவிழிகள்
களவாய் சிதைத்திடத் துடிக்கும் காமப்பேய்கள்

வேலியே பயிரை மேயும் அபாயமாய் மாமன் விழிகள்-
அண்டை வீட்டுக் காளையர் கண்சாடைகள்
விளையாடப்போனாள்-விளையாட்டாய்
தொட்டுப் பார்த்து இரசிக்க தடவல்களிலும்,
உரசல்களிலும் காமச்சூடு தணிக்கும் கழிசடைகள்

நாளும் செய்திகளோ கற்பழிப்பு, கொலையாக
பள்ளி செல்லும் பாதையும் தீக்குளிக்கும் வழியாக
பயமாய் இருக்குது அம்மா, மானம் அழிந்து
நான் மடியுமுன்- தாயே வந்துவிடு

பொன்மேனியை மொய்த்தே புண்ணாக்கும் போதை விழிகள்
பாலியல் வல்லுறு செய்யத் துடிக்கும் காமப்பேய்கள்
கண் படும் போதெல்லாம் புண்ணில் விழும் அமிலத்துளிகளாய்
பூ நெஞ்சம் புண்பட, இடையினம் தொட்டு, மெல்லினம் சிதைய
வல்லினம் என்னை வல்லாங்கு செய்யமுன்
தாயே வந்துவிடு-உந்தன் குழந்தை
தமிழினி என்னைக் காத்துவிடு

பூ மொய்க்கும் தேனீக்களும்,
புண் மொய்க்கும் ஈக்களும் நிறைந்த உலகில்
கண்மொய்க்கும் காமுகர் பார்வை
கருந்தேளாய் மேனி ஊரக் கலங்குகின்றேன்-அம்மா
உன் வரவிற்காய் தவமாய் தவமிருக்கின்றேன்

நீராடும் போது நிம்மதி நாடி-தாயே
கண்ணீரில் நீராடும் என் விழிகள்-அஞ்சி
துயிலும் போது கண்ணீரால் நனையும்
என் தலையணை, பஞ்சணைகள்

தேனீக்கு கொடுக்கும், ரோஜாவிற்கு முள்ளும்
ஈந்த இறைவன் பெண்மைக்குத் தந்தது ஏதம்மா?
என் அழகே எனக்குப் பகையாக
பரிதபித்து புலம்பியழைக்கின்றேன்
வா அம்மா சீக்கிரம் வா

தாய்மடி காணாத பருவக்குமரி-இன்னும் உந்தன்
சின்ன ராஜகுமாரி கொழுகொம்பில்லாத முல்லைக்கொடி
உன் மடியில் நான் முகம் புதைத்து என் மனப்பாரம் தீர
அழவேண்டும், அச்சமின்றி நான் வாழ-அருகில்
அன்னையே நீ வேண்டும்
வருவாயா அம்மா? சீக்கிரம் வந்துவிடு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# அணையாத நெருப்பு

---

அணையாத நெருப்பினை ஆவிக்குள் மூட்டு
கலையாத கனவினை கண்களுக்கு காட்டு
தணியாத தாகத்தை நெஞ்சினில் ஏற்று
விலைமதிப்பில்லா விடுதலைக்காய்-தமிழா
போர் முரசை மீண்டும் கொட்டு

முடியாதது என்று ஏதுமில்லை-தமிழா
விடியல் வராத இரவுகளுமில்லை
விழுவதால் அலைகள் மடிவதில்லை
தேய்வதனால் நிலவு அழிவதில்லை.

சோகங்கள் சுமக்காத இதயங்கள் இல்லை
கண்ணீரில் மூழ்காத விழிகளுமில்லை
சாவு தீண்டாத இல்லங்களுமில்லை
ஞானம் தேடிடத் துறந்து வா
புதிய சித்தார்த்தனாய் எழுந்து வா

உறங்கிடும் கல்லறைகள் உயிர்த்தெழட்டும்
கலைந்திட்ட கனவுகளும் புத்துயிர் பெறட்டும்
எழுந்த போராடு -விழுந்தவை விதைகளாகட்டும்
விடுதலையின்-புதிய முளைகளாகட்டும்

சரிந்தவையும் குண்டடிபட்டு சாய்ந்தவையும் உரமாகிட-
உறுதிகொண்ட நெஞ்சோடு எழுந்துவா
இன்னுமொருமுறை போராடுவோம்-எம் விடுதலைக்காய்
இடைவிடாது அக்கினி நீராடுவோம்

விழுந்தவை ஆகுதிகளாகட்டும்-புதிய
விடுதலை யுத்தம் வேள்வியாகட்டும்
காயமாகிப்போன காயங்கள்- விழுப்புண்களாகட்டும்
கருவிழிகள் சிந்தும் நீர் தீர்த்தமாகட்டும்

அந்திச் சிவப்பை அணிந்த வானும்
சிந்திய குரதியால்சிவந்த நந்திக் கடலும்
கூவி அழைக்கிறது எழுந்து வா-ஈழத் தமிழா
இன்னொருமுறை போராடத் துணிந்து வா

சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்
நீந்திக் கடந்த நெருப்பாறும்
ஆயுதப்போராட்டத்தின் நீங்கா நினைவானது

எந்தையும் தாயும் வாழ்ந்த திருநாடு
இன்றும் அடிமை -நெஞ்சில் பாய்ந்த
நெருஞ்சி முள்ளானது

புகலிடம் தேடும் அகதியாய் நாம் மாறிட
நன்றோ தமிழா-நாடுகள் வென்று ஆண்ட தமிழா
உண்டென்று நீ சொல்ல
உலகில் உனக்கென்று ஒரு நாடு கொள்ள
போராட எழுந்து வா

அன்பே சிவமென அனுபூதியில் அறிந்தே
அகிம்சை வழி செல்வோம்.
அறப்போரால் நாடு கொள்வோம்

விழுந்தாலும் எழுகின்ற அலைபோல் தொடரும் எங்கள் எழுச்சி
விழுந்து மடிந்தாலும் உயிர்க்கின்ற பீனிக்ஸ் பறவைபோல்
உயிர்க்கும் எங்கள் முயற்சி

***வானமே எங்கள் எல்லை***
***தமிழ் ஈழமே எம் உயிர் மூச்சின் எல்லை***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# அஞ்சலி

---

உணர்வுகளை எரித்துப் பொசுக்கி
கண்ணீரை அடக்கி ஒடுக்கி
கனத்த உள்ளத்தோடு-களம் வீழ்ந்த
தோழனை விதைத்தோம்

தோழர்களே, கண்ணீர்பூக்களும்,
வண்ண மலர்களும் வேண்டாம்
வாடிய மலராய் அவன் உதிரவில்லை
தமிழ் ஈழ அன்னைக்கு
குருதிப்பூவாய் தன்னை அர்ச்சித்த
வீரமகன் நம் தோழன்.

தீபங்கள் வேண்டாம்-தன்னையே
ஆகுதியாய் எரித்த தியாகி அவன்
கல்லறை வேண்டாம்-இவன்
புதைக்கப்படவில்லை-தமிழ் நெஞ்சங்களில்
தன்னை விதைத்துக்கொண்டான்.

தூபங்கள் வேண்டாம்
தமிழ் மண்ணை சுவாசித்து நேசித்தவன்-பாசமே
எம் சுவாசத்தை நிறைக்கும் வாசம்

கண்ணீர் அஞ்சலி வேண்டாம்
அஞ்சாமையே அவன் வேண்டும் அஞ்சலி-
அதுவே ஈழத் தமிழ் அன்னையின்
அடிமை விலங்குடைக்கும் சங்கொலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-5-2023

# அந்த நாள் ஞாபகம்

---

அந்தணர் அறம் பிறழ-வறுமையால் மங்கையர் நெறி பிறழ
ஆலயங்கள் பாழ்படக் குண்டு வீச்சுகள்-ஏழைகள்
அகதிகளாய் வாடிட-செல்வர், வல்லுனர் புலம் பெயரப்
ஆயுதக் கலாச்சாரத்தின் அராஜகங்கள்

பிள்ளைச் செல்வங்களைப் கொள்ளைப் பொருளாய்ப்
பிடித்துச் செல்ல, இருண்ட கல்வி, கப்பம் செலுத்தி முடிவில்
கையேந்திடத் தெருவிற்கு வந்த செல்வர் வாழ்வோ தோல்வி

வறுமை செழிக்க, வாய்மை பிறழக், கண்ணீர் மழை,
ஊரழிய, உறவழிய, உண்டு குடித்து வாழ்ந்த மனையழிய
இராணுவமும், ஆயுதக் குழுக்களும் போராட
அராஜகம் தலைவிரித்தாடிய இருண்ட நிலை

ஆயுதக் குழுக்களின் அராஜ நிலைப்பாடும்,
காட்டிக் கொடுப்பும் இயக்க மோதல்களாய் மாறிட
கடன்பட்டார் நெஞ்சம் போல் கலங்கிய தமிழினம்

நிதியும், சதியும், தந்திரங்களும், சாணக்கியமும்
சந்தர்பவாதமும், பகையழித்து, பகை வளர்த்திட
பயங்கரவாதமான விடுதலைப் போராட்டம்

முகமூடிகள் ஊரைச் சல்லடைபோட
ஒப்பாரியும் அழுகையும் ஊரைச் கூட்டும்,
குருதியும், கண்ணீரும் வீடுகளில் வெள்ளமிட
கொலை, கப்பம், ஆட்கடத்தல் செய்திகளாகும்

ஆயுதக் கலாச்சாரத்தில் அராஜகம் நீதியாக,
எரியும் டயர்களில் பிணங்கள் கருகும்,
எரியாத விளக்கு கம்பங்களில் சவங்கள் தொங்கும்.

தள்ளா விளையுளும், தக்காரும்,
தாழ்விழாச் செல்வமும் ஒன்றாய்க் குன்றி
தமிழ்க்குடி, சீரழிந்த இருண்ட காலம்.

இராணுவமோ, இயக்கமோ கொன்று
இழவு காணாத வீடில்லை-ஒப்பாரியும்,
துப்பாக்கிச் சத்தமும் கேட்காத நாளில்லை.

இயக்கம் பிடித்துச்சென்ற பிள்ளைகளுக்காய்-ஒப்பாரியோடு
கச்சேரி முன் உண்ணா நோன்பிருக்கும் தாய்கள்,-
ஊன்தேய, உணர்வு நோக,-உருக்குலைந்த
ஒருத்தியாய் வயதான என் அன்னை

கடமையின்போது, கண்ணி வெடியில் சிக்கி
வேரோடு பிடுங்கி எறிந்த விருட்சமாய்
குண்டு துளைத்து குருதி ஒழுகிட
தெருவில் வீழ்ந்து மடிந்த அண்ணன்

அதிரடிப்படையால் கடத்தப்பட்டு அநீதியாய்க்
கொல்லப்பட்டு மறைக்கப்பட்ட தம்பி,
சோகச்சுமையோடு தள்ளாடும் வயதான விதவைத்தாய்.
இளமையில் கைமை பூண்ட அண்ணியோ
இரு பிள்ளைகளுக்குத் தாய்

நினைத்துப் பார்க்கையில்-நினைவிலும் குருதிக்கறை,
விழிகளிலோ மறையாத கண்ணீர்க் கறை
சோகம் தாங்கி புன்னகை மறந்த சொந்தங்கள்
சிலுவை சுமந்தும் மீட்பில்லாத பந்தங்கள்.

காணாமல்போகும் ஊர்களும், உறவுகளும்,
பாக்கு நீரிணையைத் தாண்டும் அகதிகளும்,
நாளும் செய்திகளாகிட, கல்லான மனம்,
சிலையான கடவுளிடம் உருகிக்கரையும் தினம் தினம்.

நினைத்துப் பார்த்திட காலம் ஆற்றிய
ரணங்களிலும் காயாத இரத்தம்,
எல்லாமிழந்து அடிமையாய் மாறி-அநாதை,
விதவை, அகதி, அங்கவீனர் என உருவழிந்திட
பொய்யாய், பழங்கதையாய மாறிக் கனவாய்க் கலைந்த
தமிழ் ஈழ விடுதலைப் போராட்டம்.

ஓய்ந்திடாத குண்டு, துப்பாக்கிச் சத்தங்கள்-ஓயாமல்
ஓங்கி, முனகி நாளும் ஒடுங்கி போகும் ஒப்பாரிகள்

**ஓ நாடே! என் தாய்திரு நாடே!**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29-04-2023*

# (அ)சோகவனச் சீதைகள்

---

கொலைதான் யுத்தக் கலையோ?-குருதி சிந்தும்-
பாவ புண்ணியம் கடந்த கர்மயோக நிலையோ?
வீழ்ந்தவனுக்கு சொர்க்கம்-வீழ்த்தியவனுக்கு உலகம்
என்னும் குருஷேத்திரக் கீதை நிலையோ?
உறவினைப் பறித்து-அப்பாவி -உயிர்களை கொன்றிட
உரிமம் பெற்ற (அ)தர்ம நிலையோ?

கார் கால மேகங்கள்தான் கண்களில் கரைகின்றனவா?
கங்கைதான் திசைமாறி விழி வழி பாய்கின்றதா?
இதயம்தான் உருகி கண்வழி ஓடுகின்றதா?

அழுது சிவந்த விழிகள் அந்திவானைக் காட்ட
சோகம் சிதைத்த உடல்கள் சொந்தங்களின் இழப்பைச் சுட்ட
வேரறுந்த கொடிகளாய் வாடிக் கிடந்தார்-கைதாகி
காணாமற்போனோர் சொந்த பந்தங்கள்

கணவனாய், பிள்ளையாய், காதலனாய் சகோதரனாய்த்,
தந்தையாய் கண்ணின்று மறைந்த உறவுகளுக்காய்
புகைப்படங்கள் தாங்கி-ஐ.நா.காரியாலயம் முன்
வரமின்றிக் -கண்ணீர்த் தவமிருக்கின்ற பந்த பாசங்கள்

கைதான உறவெல்லாம் காலனுக்குத் ‘‘தானமாகி’’
எரியும் டயர்களில் தகனப்பலியாகிட-‘‘கைதுகள்’’
காவல் துறையின் பதிவேடுகளில் கண் மறைந்திட
நீதி கேட்டு உறவுகள் நீர் வழியும் விழிகளோடு
தவமிருக்கின்றார் விடியல் பார்த்து.

விடுதலைப் பயணத்தில் விழுப்புண் தரித்து விழுந்தவரை
‘‘நடுகல்’’ குறிக்க -அப்பாவிகளை-‘‘எரியும் டயர்கள்’’
தடயமுமின்றி சாம்பலாய் அழிக்க-சோகச்
சிறையில் கண்ணீரோடு வாடும் சொந்தங்கள்

கைதான உறவுகளைத் தேடிய யாத்திரை கானல் நீராக
கைவிரித்த காவல் துறையும், இராணுவமும், அதிரடிப்படையும்
செஞ்சிலுவைச் சங்கத்திடம் முறையிட்டு
சோகத்தீயில் கருகித் தவமிருக்கும் உறவுகள்

இன்று வருவான் என் மகன்-நாளை
வருவான் என் மணாளன்-என்று நாட்கள் போயிட
வாரங்கள் கழிந்து மாதங்களாயிட
வருடங்கள் கழிந்து வாழ்வும் சுமையாகிட
பெற்ற வயிறும்-தாலி பெற்ற சொந்தமும் தவிக்க
மண்ணுக்குள் மறைந்த உறவுகள்

நள்ளிரவில் கேட்கும் வெடிச் சத்தங்களும்
நாளும் எரியுண்ட நிலையில் கிடக்கும் சடலங்களும்
அடையாளம் தெரியாத புதைகுழிகளும்
சொந்தங்கள்தான் மாண்டதோ என்று புலம்பிட
ஏழ்கடலாய் சோகம் நெஞ்சுக்கள் அலைமோதும்

‘‘அம்மா’’ என்றும் ‘‘அப்பா’’ என்றும்
‘‘அத்தான்’’ என்றும்
‘‘மகனே’’ என்றும் ‘‘அண்ணண்’’ என்றும்
‘‘தம்பி’’ என்றும் அழைத்த உறவு
அன்பொழுக பூண்ட உறவு புகைப்படமாய் உருவழிய
ஏற்றிய தீபங்களோடு எரியும் நெஞ்சோடும்
சொந்தங்கள் கண்ணீர்த் தவமிருக்கும் இருண்ட காலம்

மஞ்சளும், குங்குமமும் கலைந்த கனவாக-
சூடிய பூவும் வாடிய நினைவாக
மஞ்சள் பூசிய மகாலக்ஷ்மி அசோகவனச் சீதையாக-
தோளிலும் மடியிலும் சொந்தமாய்த் தந்த செல்வம்
தந்தை முகம் காணாது துக்கித்திட
கேவியழும் இளந் தாயோ ஈரவிழிக் காவியம்

வாட்டிடும் வறுமை சாட்டையாய் உடலை வருத்த
வாழ்வுச் சுமையோ சிலுவையாய் தோளை அழுத்த
இளம் தாயின் பாதையும்-குடும்ப மீட்பிற்காய்
சிலுவைப் பயணமானதே?

அன்று கண்ட தந்தை முகம் இன்று புகைப்படமாக
அள்ளியணைத்து கொஞ்சிய நினைவும் கனவாக
தந்தையைத் தேடி தாய்மடி புதையும்
பிஞ்சு மனதில் இமயச் சோகம்

அன்பினால் கூடி கருப்பையில் வார்த்த உயிர்
தொட்டிலில் கண் விழித்தபோது
தந்தை உறவோ புகைப்படமானது
தாய் வாழ்வோ கண்ணீர்க் கதையானது.

உறவைத் தேடும் பிஞ்சு நெஞ்சங்கள்
உலகில் தந்தையில்லாப் பிள்ளைகளாயிட
கைதாகி காணாமற்போன கணவனால்
கண்ணீர்க் காவியமாகும் குடும்பம்

கைது செய்த என் மகனை வதைத்தனரோ?
வாதைகள் செய்தே சிறை வைத்துள்ளனரோ?
சுட்டு எரித்தனரோ? வெட்டிச் சாய்தனரோ?
அச்சம் ஆட்கொள்ள பெற்ற வயிறு பற்றி எரியும்

இன்றும் மனப்பாரத்தை இறக்கிட
சுமைதாங்கி தேடும் தாய்குலமாய்-புதிய கீஸ கௌதமி
பிடி கடுகு ஈந்திட இழவு விழாத வீடில்லை
புத்த பெருமானோ பௌத்த மனங்களில்
கல்லான அவல நிலை

யுத்த பூமியில் "கைதுகள்" காணாமற்போகும்,
எரியும் டயர்களே உயிர்களுக்கு சிதையாக மாறும்,
அநாதை-விதவை அங்கவீனர் சமூகத்தோடு-
புதிதாய்ச் சங்கமிக்கும்
"காணமல் ஆக்கப்பட்ட உறவுகளின் சமூகம்"
எந்நாளும் கண்ணீரில் வாழும் சாபம்

ஏதேன் வனத்தை எரி நரகாக்கும் யுத்தம்
காயீன் ஆபேலைக் கொல்ல-இறைவனைக்
கதறியழைக்கும் ஆபேலின் இரத்தம்

யுத்தமில்லாத பூமி வேண்டும்-அன்பினால்
உலகை ஆளும் நிலை வேண்டும்
யாவரும் எந்நாளும் இன்புற்றிருக்கும்
பேரின்ப நிலை வேண்டும்-

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-30.03.2023*

# அஸ்தியும்-ஆறடி மண்ணும்

வங்ககடலும் வாடி ஒடுங்கிட
நந்திக்கடலும் நடுங்கி மெலிந்திட
ஈழத் தமிழினத்தை அழித்திட
சிங்கள அரசின் பெரும் படையெடுப்பு.

விண்ணும் மண்ணும், வீசு தென்றலும்,
அலையும் கடலும் அதிர்ந்திட-நிலம், நீர், வானின்று
இரவு பகலாய் ஓயாத குண்டு வீச்சு

கண்ணில் பட்ட உயிர் எல்லாம் கருகிச் சாய்ந்திட
விண்ணில் வாழும் தேவர்களும் கண்ணீர் சிந்திட
சுட்டும், வெட்டிச்சாய்த்தும் அரக்கர்களின்
இளவாத வெறியாட்டம்

கன்னியர், அன்னையர் கற்பினைச் சூறையாடி
தணியாத காமத்தை தணித்து,குழந்தைகளை மிதித்துக் கொன்று
கொலைவெறியாடும் கோர இராட்சதர்களால்
தமிழ் ஈழ மண்ணில் கொடிய இனவழிப்பு

( Channel 4- unknown soldier)

ஊர் எரிய-உறவெரிய வாழ்ந்த மனைகளும்
வணக்கத் தலங்களும் ஒன்றாய் தீயில் எரிய
தீமேயும் பூமியான தேசத்தில் வாழிடம் துறந்து
புகலிடம் தேடி ஓடுகின்றார் அப்பாவித் தமிழர்

சாரி சாரியாய் எறும்புக் கூட்டங்களாய்,
விரட்டியடிக்கப்பட்ட வெள்ளாட்டு மந்தைகளாய்,
வேட்டையாடப்படும் மான்கூட்டங்களாய்
உயிர் பிழைத்திட ஓடுகின்றார் மக்கள்.

கட்டிய துணியோடும், கண்ணீர் விழிகளோடும்,
உற்றவர் விழுந்தாலும், உதவிட வழியின்றி
உயிரைக் கையிலேந்தி ஓடுகின்ற மானுடர் இங்கே.

செல்லும் திசையெல்லாம் தீ விரட்டிட
தீமேயும் ஊரும் உறவும் தீய்ந்த கனவைச் சொல்லிட
வங்கக்கடல் ஒரு புறம் வழி மறிக்க
நந்திக் கடல் கொதிக்க இராணுவம் குண்டுமழை பொழிய
இருதலைக் கொள்ளி எறும்பாய் வாடுகின்றார் தமிழர்

கஞ்சுக்கும், கந்தைக்கும் வழியின்றி
மாண்ட உறவுக்கு மண்போட்டிட நேரமின்றி
வாட்டிடும் காயத்துக்கு மருந்துமின்றி
நோன்புற்ற வயிற்றோடு நொந்து ஓடுகின்றார்

மண்ணும் கடலும் வானும் தீ மழை பொழிய
மண்மீது கொண்ட காதல் விடுதலைப் போராய் எரிய
அனலில் விழுந்த புழுவாய்த் தமிழர் வாழ்வு

நந்திக்கடல் ஒருபுறம்-இந்துக் கடல் மறுபுறம் மறிக்க
சுற்றி வளைத்த இராணுவம்-ஓடிக் களைத்த
மானுடம் வாடித் தவித்தது -ஓடிட வழியின்றி
வலையில் சிக்கிய சிறு மீனாய் வாடித் துடித்தது

இரவு பகலாய் எறிகணைகள் மூட்டிடும் தீமழையில்
மடிந்து விழுந்து கருகும் ஆயிரமாயிரம் உடலங்கள்
முண்டங்களாய்-முழு உடலங்களாய்
துண்டங்களாய்-சதைப் பிண்டங்களாய்
அங்கமிழந்தவைகளாய் எங்கும் பிணங்கள்

அன்னையின் மடியில் அமுதருந்திய மழலைகளும்
தந்தையர் மடியில் நடுங்கிக் கிடந்த இளவல்களும்
வயதான பெற்றோரைக் காத்து நின்ற பிள்ளைகளும்
ஒன்றாய் இங்கே மாண்டு கிடந்தார்.

வாழ்வில் இணையாத காதலர் சாவில் இணைந்திட
வாழ்வில் இணைந்தவரும் சாவில் பிரிந்திட-மரண பூமியில்
*சாவு கூட ஒரு வித வாழ்வு போலானது*

தீயும் புகையும் எங்கும் பரவிட
தீய்ந்த பிணவாடையும் நாறி எழுந்திட-
நந்திக் கடலோரம் நடந்த கடுஞ் சமர்

சிந்திய குருதியால் -மண்ணும் சிவந்திட
மணந்திடும் பிணங்களால் தென்றலும் நாறிட
தீ மேயும் பூமியில் தீய்ந்து கருகிட
கொடுந் தீ மிதிப்பு

உணவின்றி, நீரின்றி, மருந்தின்றி-உயிர்காக்கும்
மருத்துவ மனைக்கும் பாதுகாப்பிற்கு உத்தரவாதமின்றி
நந்திக்கடலோரம் அல்லாடும் மானுடத்தை
கொன்றழித்திட அகோரயுத்தம்

குண்டு வீச்சு விமானங்களும்
எறிகணைகளும் பல்குழல் பீரங்கிகளும்
நிலமும் நீலக்கடலும் அதிர்ந்திட
குண்டு மழை பொழியும்.

செந்நீரில் நீராடி, ஒட்டிய உடல் துண்டங்களை உதறி-
செத்துப் பிழைத்தோம் என ஓடித் தப்பிடும் மானுடம
மற்றோர் ஷெல் வீச்சில் மடியும்

ஒரு வேளைச் சோறும்-ஒரு குவளை நீரும்
உயிர்காக்கும் அமுதாகும்
சிறு துளி மருந்தும் சஞ்சீவினியாகும்

யுத்த சூனிய பிரதேசமெங்கும் செத்து மடியும் உயிர்கள்
புனித பிரதேசமெங்கும் புத்தரை வாழ்த்தி
இரவு பகலாய் ஒலிக்கும் இனவாதப் பிரித் ஒலிகள்

வெள்ளி மணற்கரையெங்கும் புள்ளி வைத்துப் போட்ட
பிணக்கோலங்கள்-குழந்தை முதல் முதியோர் வரை
குண்டு பட்டு வீழ்ந்து கிடக்க-
இராணுவம் செதுக்கிடும் அவலச் சிற்பங்கள்

***இது யுத்த காலம், இனவழிப்பில் -தமிழ் உயிர்கள்***
***மாலை வருமுன் வாடிக் கருகிய கொலைக்காலம்***

வாழிடம் துறந்து புகலிடம் தேடி ஓடிக் களைத்த மானுடம்
உடலம் சிதைய நாறிடக் கிடந்த சொந்தங்களை
வலம் வந்து கண்ணீர் குடமுடைத்தே கிரியை செய்தன

ஆண்ட மண்ணை மீண்டும் ஆண்டிட
போராடி வீழ்ந்தவர்க்கும், தீய்ந்து சாம்பலானவருக்கும்
வாழ்ந்தபோதும் நிலமில்லை- மடிந்தபோது
அமைதியில் உறங்கிட ஆறடி மண்ணுமில்லை.

யுத்தம் முடிந்திட இனவழிப்பின் எச்சங்களை
மண்ணில் புதைத்து, பெருந் தீயில் எரித்து
வெற்றிக் கொடி நட்டு
வெறி தணித்த சிங்கள இராணுவம்

இன்று தணிந்தததோ தமிழன் சுதந்திர தாகம்?
இன்று மடிந்ததோ -தமிழ் ஈழ மண்ணிற்காய்
யாத்த விடுதலை யாகம்?

விண்ணும் மண்ணும், வீசும் காற்றும்
அலையும் கடலும் , அணையாத நெருப்பும் சாட்சிகளாயிருக்க
இனவழிப்பின் எச்சங்களை இல்லாது அழித்தொழித்த இராணுவம்
சர்வதேச சமூகத்தை எள்ளி நகையாடிக் கேட்கின்றது
இன அழிப்பிற்கு எங்கே சாட்சியம்?

புதைகுழியும், சிதையுமின்றி
மண்ணில் புதைந்தும், தீயில் எரிந்தும்
மறைந்த மானுடம்

மண்ணின் தணல் ஆறவில்லை-மனத் துயர் ஓயவில்லை-
விண்ணும், மண்ணும், மாறவில்லை
வீரத் தமிழன் மாண்டுவிட்டான்

இது மயான பூமியல்ல-விடுதலையின் விளை நிலம்
மானிடரே -அமைதி காப்பீர்.!
ஈகைச் சுடரேற்றி, நீதி கேட்பீர்

கடற்படை, தரைப்படை, வான் படை கொண்டு
விடமாலை சூடி, அனல் ஏந்தி
தாய் மண்ணை மீட்டிட-தமிழ் மகன்
ஆடிய உருத்திர தாண்டவம் ஓய்நதது

மா வீரன் விழுந்திட-மன்னவன் கனவு கலைந்திட
வீர வரலாறு முடிவுக்கு வந்தது
சிந்திய குருதியிலே தணியாத தாகம்
சிவந்த விழிகளிலே நெற்றிக்கண் காட்டும் பாவம்

ஆண்ட பரம்பரை-மீண்டும் ஆளுமுரிமை பெறும்வரை
நூற்ற யாகம் வீரத் தியாகம்
ஆறடி மண்ணுமின்றி, இறுதிக் கிரியையுமின்றி
மண்ணில் புதைந்து தீயில் எரிந்து
ஆகுதியாய் மறைந்த வீர பந்தம்

மலர்கள் வேண்டாம்-ஒரு மாலைக்குள் வாடிவிடும்
நெய் விளக்குகள் வேண்டாம்
விட்டில்கள் விளையாடி மடிந்து விடும்
கண்ணீர் அஞ்சலி வேண்டாம்-இது வீர காவியம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# அதிகாரப் பகிர்வு



இனவாதத்தின் கொடுங் காங்கை-ஈழத்தை
சுட்டெரித்து ஓய்ந்த நேரம்-செந்தணலின்
சூடு மண்ணில் ஆறவில்லை-பேரினவாதமும்
செந்தமிழன் அவலநிலையும் மாறவில்லை




காணாமல் ஆக்கப்பட்டவர்க்காய்-தாய்க்குலத்தின்
கண்ணீர்த் தவங்கள் ஓயவில்லை-தமிழ்
அரசியல் கைதிகளுக்கு விடுதலை கிட்டாத நிலை

காடு மண்டி, கண்ணி வெடிக்காடாய் கழனிகள் மாறிட
முறிந்த பனையும், தென்னையும் பட்டுப்போயின
புகலிடம் தேடி அகதிகள் புலம் பெயர்ந்திட-பாழடைந்த
கோயிலும், மனைகளும் வௌவால் குடியிருப்பாயின

குடும்ப ஆட்சி கொள்ளையிட்ட தேசத்தை
கொரானா வாட்டிட-கடன் பளு வானைத் தொட்டிட
எண்ணெய்க்கும், எரிவாயுவிற்கும் தட்டுப்பாடு
ஏழைகள் வாழ்வு எரிநரகான வெட்கக்கேடு




நாட்டை விட்டு ஓடிய ஜனாதிபதி-தேர்தலில்
தோல்வி கண்டு மண்ணைக் கவ்வியவரோ
நாட்டின் புதிய அதிபதி
ஜனநாயகத்திற்கோ சாவுமணி

இனப்பிரச்சனையைத் தீர்த்து
நாட்டை வங்கிறோத்து நிலையிலிருந்து மீட்டிட
அதிகாரப் பகிர்வை வற்புறுத்திய சர்வதேசம்
இனவாதம் கக்கி சீறி எழுந்த மகாசங்கம்

சீவர ஆடை செந்தணலாய் எரிய
செப்பிடும் மொழிகளில் பௌத்த தர்மம் நலிய
பேரினவாத அரசை அச்சுறுத்தும் தேரர்கள்-அன்பு
கருணை அகிம்சை மறந்த அங்குலிமாலாக்கள்?

முப்பத்தைந்து ஆண்டுகளின் பின்னர்-பதின் மூன்றாம்
திருத்தத்திற்கு  பச்சை கொடி காட்டிய ஜனாதிபதி
சீவர ஆடை சிவப்பு கொடியாக அதிகாரப் பகிர்விற்கு
சாவு மணி அடித்து, அச்சுறுத்தும் பீடாதிபதிகள்

நியாயமற்ற வரிச்சுமையை எதிர்த்து-நாளும்
தொழிற்சங்கப் போராட்டங்கள்
வாழ்வாதாரத்தை இழந்த ஏழைகளோ
வறுமைக் கடலில் மூழ்கிடும் அவலங்கள்




இனவாதம் பேசி மக்களை ஏமாற்றி
குடும்ப ஆட்சியால் நாட்டைக் கொள்ளையிட்ட
அரசியல் வாதிகளோ கோடிஸ்வரர்கள்
வாக்களித்த மக்களோ குசேலர்கள்

குற்றவாளிகள் சுதந்திரமாய் உலாவிட-நீதிக்காய்
போராடியவர்கள் சிறையில் வாடிட, வாளாவிருந்த
மகா சங்கம்-அதிகாரப் பகிர்வை எதிர்த்து போர்க்கொடி
ஏந்துவதோ பௌத்த தர்மத்திற்கே பெரும் பங்கம்?



எம்மவர் சிந்திய குருதியும் வீணோ-தமிழ்
மறவர் போராட்டமும் விழலுக்கிறைத்த நீரோ?
எந்தையும், தாயும் மகிழ்ந்த உலாவிய பூமி
என்றும் அடிமைதானோ?

வெளிறிய சீவர ஆடையை சிவப்பாக்கிட
செந்தமிழன் இரத்தம் கேட்கும் பௌத்தம்
மகா சங்கத்தை ஆளும் தேவதத்தனின் சப்தம்
ஆட்சியமைக்க பேரினவாதமே பிரம்மாஸ்திரம்

வெள்ளரசு மரத்திலோ பிணந்தின்னிக்
கழுகுகளின் கூட்டம்-அகதி முகாம்களிலோ
தமிழர்களின் அழுகைச் சப்தம்

யுத்தத்தின் சத்தம் ஓய்ந்தாலும், இரத்தம் காய்ந்தாலும்,
கண்ணீர் காயவில்லை, அகதி, விதவைகளின்
மனக் காயங்கள் ஆறவில்லை, மண்மேடாய்ப்போன
மாவீரர் துயிலிடங்கள் கலைந்த கனவான தாயகக் கனவுகள்



தமிழர் உரிமைப் போராட்டம் உயிர்ப்பலி கொடுத்தும்
தீரவில்லை, பகிர்ந்து வாழ பௌத்த தேரர்களுக்கும்,
பேரினவாதிகளுக்கும் இன்றும் மனமில்லை

பகிரப்படாத அதிகாரம் சர்வாதிகாரம்,
எதேச்சதிகாரம் பேரினவாதத்தின் அங்கம்?
ஓதும் தம்மத்தை ஒழுகாத சங்கம்
பௌத்த தர்மத்திற்கே களங்கம்

சீவர ஆடைக்குள்ளும் நீறு பூத்த நெருப்பாய்
இனவாதம், பெருமான் புத்தரின்
தம்மத்தை நிந்திக்கும் மகா சங்கம்
குருடனுக்கு குருடன் வழிகாட்டும் பங்கம்

தமிழன் உரிமையை ஆகுதியாக்கி-மகா சங்கம்
நூற்கும் பேரினவாத யாகம்
ஒற்றுமை, நீதி , அமைதி, சமத்துவம்-
இனவாத பௌத்தம் அறியாத பாவம்?




சாதி, மத, நிற , மொழிப் இனப் பேதங்களும் ஏனோ?
மனிதத்தை அழிக்கும் கொடிய யுத்தங்களும் ஏனோ?
அன்பும், உண்மையும் நீதியும் வாழும் கலையாக
உலகில் அமைதி நிலைக்க காலம் மலருமோ?

உரிமைக் குரல் ஒலிக்க -அமைதி நிலைக்க
ஒற்றுமை தழைக்க எழுந்து வா தமிழா
புதிய மகிந்த சங்கமித்திரை நாமே
அகிம்சையே பாதை-அன்பே நீதி
உண்மையே தெய்வம்

பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினாலே தணிக்க முடியும்
தொன்று தொட்டு வருகிற தர்மம் இதுவே-**தம்மபதம்** 1-5

புத்தம் சரணம் கச்சாமி
தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra -23-08-2023*

# போதி சிலுவை புல்லாங் குழல்

---

ஆயுத வன்புணர்வால் வலுவிழந்து தமிழர் தாயகம் வாடிட
அமைதி காக்கும் படை கைகட்டி வேடிக்கை பார்த்திட
கப்பம், கொள்ளை, கொலை, இயக்க மோதல்
நாளும் செய்தியானது -தமிழ் ஈழம் கலைந்த கனவானது



பள்ளி வாழ்வைப் பாழாக்கி-பெற்றோர் கனவைச் சீரழித்து-
பிள்ளைகளைப் பிடித்து இயக்கத்திற்கு ஆட்சேர்த்து
புள்ளி மான்களின் கைகளில்-துப்பாக்கி கொடுத்து
போராட நிர்ப்பந்தித்த வன்முறை-அராஜகமானது

மாணவரின்றிப் பள்ளிகளும், ஓதுதல் குன்றி ஆலயங்களும்,
ஒழுக்கம் குன்றிக் குலமகளும், தலைமகனும் இருளில் நடக்க
நல்லறம் தவறிய இல்லறம் -வல்லமையே மாட்சி
ஆயுதக் கலாச்சாரத்தின் தாரக மந்திரமானது




சட்டம், ஒழுங்கும் ஆயுதவாதிகளின் வாய்மொழியாக
அப்பாவிச சிங்கள, முஸ்லீம் மக்களின் படுகொலைகள்
அமைதியைச் சீர் குலைத்திட -அமைதிக்கும், நீதிக்கும்
குரல் கொடுத்த தலைவர்களின் குரல் வளைகள் நெரிக்கப்பட
"திசைமாறிய விடுதலைப் போராட்டம்-பயங்கரவாதம்"
முத்திரை குத்தி வன்மையாய் கண்டித்த சர்வதேசம்

வாழ வழியின்றிச் செவ்வழி நடந்த நற்குடிகளும்
கல்விமான்களும் அஞ்சி நாட்டை விட்டுப் புலம் பெயர்ந்தார்
கப்பங்களால் தமிழ் தொழிலதிபர்கள் வறுமையுற்றார்

மரணசெய்திகள் நாளும் மலிவுப்பதிப்பாகிட,
மாண்ட பேராளிக்கு கண்ணீர் அஞ்சலி
இசையோடு வெற்று விளம்பரமானது



இரத்த வெறியோடு வாளேந்திய சிங்கமும்,
யுத்த வெறிகொண்ட புலியும்
யாத்திடும் அசுர வேள்வியில்-நாளும்
ஆகுதியாகும் அப்பாவி உயிர்கள்

போதியும், புல்லாங்குழலும், சிலுவை மரமும்
ஓதிடும் அன்பின் வேதம் -கருங்கல்லில் பெய்த மழையானது
அன்பு வாழும் இதயங்கள் அஞ்சி ஒதுங்கிட-அராஜகம்
அப்பாவிகளின் வாழ்வை எரிநரகாக்கியது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-29.3.2023*

# போதி விருட்சம்

---

இம் மண்ணில் ஈழத்தமிழனுக்கோ இழிந்த நிலை
போதி விருட்சங்களுக்கோ பொன்வேலி பூண்டு
நீர் வார்த்துப் பூஜிக்கும் புனித நிலை

பிறவாமை வேண்டும்-**புத்தர் பெருமானே**
மீண்டும் பிறப்புண்டேல்-இம்மண்ணில்
தமிழனாய்ப் பிறவாமல் -போதி விருட்சமாய்
பிறக்கும் நிலை வேண்டும்

காட்டிலோ மேட்டிலோ ஆனந்தமாய்
என்னை முளைக்கவிடு-என் நிழலில் நீயிருக்க
உன் தயவால் நான் சிரிக்க-மாறாத
ஆனந்த வாழ்வு நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30.03.2023

# செஞ்சோலை

---

பூஞ்சோலையாய் மலர்ந்து, பூவாசத்தால் நிறைந்த
செஞ்சோலையெங்கும்-பிணவாசம்
பூபாளம் ஒலித்த புள்ளினங்களின் சரணாலயத்தில்
காலனின் வேண்டாத திடீர்ப் பிரவேசம்

இதழ் விரிக்குமுன் கருகிய மொட்டுக்களும்
இறக்கை விரிக்குமுன் குண்டுக்கிரையான தேன்சிட்டுக்களும்
பயங்கரவாதி பட்டம் சூட்டி-அரசு
குண்டுவீசி கொன்றழித்த கொடிய நாளிது.

செஞ்சோலையெங்கும் அக்கினியின் ஆட்சி
சொந்தங்களின் கண்ணீரிலும் பெருமூச்சிலும்
ஆறாத சோகத்தின் காட்சி

குண்டுவீச்சு விமானங்கள் கொன்று குவித்தது
பூக்களையல்ல-பூவையரை
மொட்டுகளாய் உதிர்ந்தவை மங்கையரல்ல-
மாவீரரின் முல்லைப் பூக்கள்

மகிந்த- அரசின் பூத யாகத்தில்
ஜனதாவிமுக்திப் பெரமுனையும்,ஹெலஉருமயவும்
இனவாத மந்திரம் ஓதிடும் அசுர குருக்கள்
அசுர வேள்வியில் அவ்வியமானவையோ
வாச மொட்டுக்கள், வண்ணக் குஞ்சுகள்

## எம் தாயகம்

தேய்ந்த செருப்பல்ல நாம் தேவை முடிந்திட வீசியெறிந்திட
காய்ந்த சருகல்ல நாம் காற்றில் பறந்து மண்ணில் வீழ்ந்திட
மானிடர் நாம் மறத்தமிழர் நாம்
சுதந்திரக் காற்றை சுவாசிக்கத் துடிக்கும்
சோனகர் நாம் -உங்கள் சகோதார் நாம்
எம்மைத் துரத்தியது என்ன நியாயம்-?
எம் மண்ணைப் பறித்தது –அநியாயம்-?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# தேசம்

---

அமைச்சுப் பதவிகளில் அலங்காரப் பொம்மைகளாய்
மலையகத் தலைவர்கள்-ஆயுதக் கலாச்சாரத்தில்
புதிய தாதாக்களாய் கட்சி மாறிய போராளிக்குழுக்கள்

ஆயுதவாதிகளின்-பழிவாங்கலில்-ஆலயங்களும்
கொலைக் களங்களான அவலம்
நத்தார் வழிபாட்டில் மக்கள் பிரதிநிதி
யோசேப் பரராஜசிங்கம் பலியான துயரம்

வேட்டுச் சத்தங்கள் கதவைத் தட்டிட-பல்குழல் பீரங்கிகள்
ஊரைக் கொளுத்திட-அச்சக் குளிர்காய
அகதிகளாய் உருமாறிய அப்பாவிகள்-நாளும்
திரைகடலோடி புகலிடம் தேடிடும் அவலங்கள்

வாக்களிக்கப்படாத தேசம் நோக்கி-நாளும்
வாடிய ஈழத்தமிழரின் கண்ணீர் யாத்திரைகள்.
பிடிச் சோற்றுக்காய் இராணுவ முகாம்களை
காபாவாய் சுற்றி கையேந்தும்
அப்பாவிச் சிறார்களின் ஹச் பயணங்கள்

ஆயுதக் கலாச்சாரத்தின் பரிணாமத்தில்
சிறுவர் தோள்களிலும் ஆயுதங்கள்-கப்பம்,
ஆட்கடத்தல், கொலை மாறாத வேதங்கள்

கல்விச் செல்வத்தை பறித்து பிள்ளைகளின் தோள்களில்
துப்பாக்கிச் சுமைகளை ஏற்றி வைத்தார்-பிள்ளைச
செல்வத்தை கொள்ளையிட்டு பெற்றோரின் வயிற்றில்
சோகச் சூளைகளை பற்ற வைத்த பயங்கரவாதிகள்

விறகாய் எரியும் ஒலிவ மரக்கன்றுகளில்
விருந்தாய் மாறும் வெள்ளைப் புறாக்கள்
இரத்தக் கறைகளால் பதிவாகும் யுத்த நிறுத்த மீறுதல்கள்
வெள்ளை கொடிகளில்
சிவப்பு சிலுவைகளை வரையும் அவலங்கள்.

கந்தைக்கும் கூழிற்கும் -தலை சாய்திட குடிலுக்கும்
தவமிருக்கும் அகதிச்சாதி –இத்தேசத்தின்
ஆயதவாதிகளால் உருவாகிய புதிய சாதி

காணமல் ஆக்கப்பட்டவர்க்காய்
கண்ணீர்த் தவமியற்றும் அன்னையர் சாதி
கணவனைக் கொன்றவனிடம்
தன்னை எரித்து ஈழக் கண்ணகி கேட்ட நீதி

இரந்தும்-தவமிருந்து தொழுதும்
இதுவரை இரங்காத தெய்வங்கள்
காணுமிடமெல்லாம் புத்தர் சிலைகள்
தம்மம் கல்லாகிப்போன அவல நிலைகள்

மதங்கள் எல்லாம் மானுடத்தின் கண்டுபிடிப்புகளோ?
வயிற்றுப் பிழைப்பிற்காய் தோற்றுவிக்கப்பட்ட
அழகிய -கற்பனைகளோ?

மானுடமோ தெய்வம்-மனித நேயமே பக்தி
மானுட சேவையே-செபம்-தியானம்
மானுடமே விழித்தெழு
மதங்களைத் துடைத்து மனிதநேயத்தில் நிலைத்து
அமைதி, இரக்கம், நீதி தழைக்க உழைத்திடு

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***

*Pax Ravichandra-2-4-2023*

# இடைத்தங்கல் முகாம்

கொடுவெயில் கூத்தாடும் பொட்டல் வெளிக்காடெங்கும்
புழுதியில் பூத்த மழைக்காளான்களாய்
அகதிகளின் கொட்டில்களும் கூடாரங்களும்.

சோகக் கடலில் தத்தளிக்கும் சொந்தங்களுக்கு
கைகொடுக்க வழியின்றி கண்ணீரோடும்-கவலையோடும்
தவமிருக்கும் உறவுகளுக்கு -முட்கம்பி வேலிகள்
இரும்புத் திரையான கொடுமைகள்

மூப்பு பிணி சாவு- தினம்
காவு கொள்ளும் மானிடத்தைக் கண்டும்
புத்தநிலை தேடாத பௌத்தர்கள்
யுத்தநிலை நாடிய துயரமுமிங்கே.

இன்னோர் அசோகனாய் இனவாத யுத்தம் நடத்தி
வணங்கா மண்ணையும் -மற்றோர்
கலிங்கமாய் வலிந்து வீழ்த்திய கொடுமை
இனப்படு கொலையாய் மாறிய சிறுமை

காடாய்போன ஊர்களும் கண்ணி வெடிகளை
கருத்தாங்கி மலடாய்போன விளை நிலங்களும்
புதைகுழியின்றி புழுதியில் கிடந்த சடலங்களும்
பாழாய்போன யுத்தத்தின் பயங்கரம் சொல்ல
வாழாமல் கருகும் சொந்தங்களை நோய்க்கும் பசிக்கும்
விருந்தாக்குகும் பேரினவாதம் கொடிதே.

சொந்தங்களைப் பிரித்து சோகத்தால் நிறைத்து
கஞ்சிக்கும் கந்தைக்கும் கையேந்தும்
பஞ்சங்களாய் உருவழிக்கும்-இடைத்தங்கல் முகாம்கள்
எரிநரகோ இல்லை பேரினவாதப் புது நகரோ?

கொள்ளை நோய்களும் கொடிய விஷ ஜந்துக்களும்
இங்கே அழையா விருந்தாகும்-குடி நீரும் மருந்தும்
வானவர் அமுதாகும்.

முள்வேலிக்குள் பூத்த கண்ணீர்ப் பூக்களிலோ
ஏழ்கடலின் உப்புச்சுவை-சூனியமாய்போன வாழ்விலோ
தினமும் "இனவாதத் தீ மிதிக்கும்" அச்சநிலை.

இரானுவச் சிலந்தியின் இராட்சத வலைக்குள்
இரையாய் புலிகளும் பொதுமக்களும்.
புலி-களையெடுக்க
பயிர்களும் பலியான கொடுமை.

கன்னியர்களும்- இளம் தாய்களும்
காமன் விழாவிற்கு பலியாகி காணாமற்போயிட
கொடுஞ்சிங்கங்களின் இனவாத வேட்டைக்கு
அடங்காத் தமிழனின் ஆண்வாரிசுகள்
அனுதினமும் இரையாகும்

புன்னகையைச் சாபமாக்கி-கண்ணீரை
வரமாய் ஈந்த தெய்வங்கள்-கல்லாகிட
சுதந்திர கனவுகளை விதைத்தவர்-கண்ணீரை
அறுவடைசெய்யும் கொடுமை மாறாத ஒன்றாகும்

யுத்த நெருப்பில் வெந்து கருகி, சோகச் சுனாமியில் மூழ்கி எழுந்து
கத்தும் கடமேலும் கதறியழக்.-கண்ணீர்ப்பூச் சூடி
வணங்காமண்ணின் புதிய வாரிசுகள் புழுதியில் தவமிருக்கும் துயரம்
காலம் செய்த அலங்கோலமோ-இல்லை
அராஜகங்களுக்கான பாவப்பரிகாரமோ?

உரிமைக்காய் போராடிய ஓரினம்-திறந்த வெளிச் சிறைக்கூடத்தில்
அடிமைகளான அவலம்-அகதிகளாய் வந்தோர் யுத்த கைதிகளானார்.
அடக்கு முறையின் கோரவடிவங்களுக்கு பலிக்கடாவானார்.

குடும்பங்களைப் பிரித்து நம்பிக்கை விளக்கினை அணைத்து
அடிப்படை மனித உரிமைகளை மறுத்து
இடைத்தங்கல் முகாம்களை
திறந்த சிறைக்கூடங்களாக்கிய அரசு

நீதிக்காய் குரல் கொடுக்காமல் ஊமைகளாய் போன
சர்வதேச சமூகத்தின் முன்-மனிதத்ததை இழிவுபடுத்தும்
"கைப்பாசின்" நீதி விசாரணைகள்
மனுமக்களை சிலுவையிலறைந்திட
"பிலாத்துக்கள்" வழங்கிடும் அநீதத் தீர்ப்புக்கள்.

உரிமை பறிக்கப்பட்டு -கைதிகளாய் உருவழியும் மானுடத்தை கண்டு
"வெற்றுச்சிலுவைகளும்","காவியுடைகளும்" வீரநடைபோட்டிட
நல்ல சமாரியன் வருகைக்காய் காத்திருக்கும்
நலிந்த மானுடத்தின் நம்பிக்கைக்கு காலம் பதில் சொல்லுமோ?

இடைத்தங்கல் முகாம்களிலோ நடைப் பிணமாய் வாழ்க்கை
அடை மழையில் நனைந்து, கொடு வெயிலில் காய்ந்து
ஆடைக்கும் உணவுக்கும் அநாதைகளாய் கையேந்தி
விடை தெரியாத வீடேகும் நாளை
திருநாளாய் எண்ணிக் கனவு காண்கின்றோம்
கைதியும் அகதியும் கனவு காணத் தடையுண்டா?

கண்ணீர் தடம் பதித்த முகங்கள்
சோகச் சுமை தாங்கியாய் மனங்கள்
கல்வாரிப் பாதையான முகாம் வாழ்வில்
கழுமரங்களே நிழழ் தரும் பரிதாபநிலைகள்

எரிநரகாய் உருமாறிய முகாம்களில்
பிணங்களும் சுதந்திரமாய் வெளிச் செல்ல தடை
வணங்காமண்ணின் அடங்காத் தமிழனுக்கு
வாழ்வோ கேள்விக்குறியான அவலநிலை

என்புருகி நெஞ்சம் இளகிக் கனிந்து
கரைந்து-அன்புருவாகி நின்று
அகதிகளைக் காப்பார் யாருமிலர்

வன்முறையை வாழ்வாக்கி
வணங்காமண்ணை எரி நரகாக்கி மகிழ்ந்தவர்
வாழ்வில் இன்றும் வெற்றிக் களிப்பு நிலை?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# இடி மின்னல் தீமழை

---

காட்டிக்கொடுப்பும் மறுதலிப்பும்-காலமெல்லாம்
தொடரும் வரலாறாகக்-கல்வாரிப் பயணமே
விடுதலைப் போராட்டத்தின் தொடக்கமாக
வீழ்வதெல்லாம் விதைகளாய் முளைத்தெழும்
எரிந்ததெல்லாம் புரட்சியாய் உயிர்த்தெழும்

இடி மின்னல் தீமழையில் எங்கள் தாயகம் கருகும்
ஒப்பாரி- அழுகை புலம்பலில் அப்பாவிகளின்
இறுதி யாத்திரை அவலமாய்த் தொடரும்.

இங்கே விண்ணை மறைக்கும் வெடிகுண்டுகளின் புகைமூட்டங்கள்.
மண்ணை அதிரவைக்கும் எறிகணைகளின் அதிர்வலைகள்.
வானில் வட்டமிடும்  விமானப் பருந்தும் உயிர்களை களவாடிச் செல்லும்
ஊனும் உதிரமும்-செந்தணலில் வெந்து கருகி உயிர் மூச்சை உறையவைக்கும்.

காலடியில் மண்ணும் மனைகளும் மிதிபட்டு அழிந்திட
கண்ணில் பட்டதெல்லாம் தீயில் வெந்திட
அதிர்ந்துவரும் தாங்கிகள் அச்சத்தைக் கூட்டும்

இதயங்கள் சோக இமயத்தை சுமக்கும்.
இரத்தம் நதிபோல் ஓடி நந்திக் கடலை சிவப்பிக்கும்.
பதுங்கு குழிகளே கல்லறைகளாகும்
ஓதிமகிழ்ந்த ஆலயங்களே புகலிடம் தேடி ஓடியவர்க்கு
ஆவி ஒடுங்கிட அடைக்கலமாகும்

வானுயர்ந்த சோலைகளும், வயல்வெளிகளும் தீக்கிரையாகும்
இடிந்த மனைகளிலும், எரியும் சடலங்களிலும்
ஒலிக்கும் ஒப்பாரி வானையும் ஏழ்கடலையும் அழவைக்கும்.

சிதறிக்கிடக்கும் உடலங்கள் செந்தமிழுக்கு உரமாகும்
சிங்கம் மூட்டிடும் தீயில் செம்மொழியும் தீக்குளித்தே
சிவப்பாகும்.-நாம் சிவந்த மனிதர்
அடிமை விலங்குடைக்கப் பிறந்த மறவர்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# ஈச்சமர நிழல்

---

வேரோடு பிடுங்கி-ஆணி வேரறுத்து
வேர் கொண்ட விழுதுகள் மண்ணில் சரிந்திட
20,000 முதல் 70,000 முஸ்லீம் மக்களை-வாழ்ந்த
யாழ் மண் நின்றே விரட்டியடித்தார்





கூடு கலைத்து, குஞ்சும் தாயும் பரிதவித்திட
கிளை கொண்ட விருட்சத்தை-போராளிகள்
ஈவு இரக்கமின்றி வெட்டிச் சாய்த்தார்.

வாங்கொலி கேட்டு வல்ல அல்லாவை-நாளும்
ஐவேளை தொழுத வடபுலத்து முஸ்லீம்கள்,
செம்மண்ணோடு கலந்த மழைநீராய்
தமிழ் உறவோடு கலந்த உறவுகள் நாங்கள்

தமிழ் துரோகிகள் என்றே மனம் புண்படத் தூற்றி
வாழிடமிழந்து, வாழ்வாதாரம் துறந்து
தென்புலம் நோக்கி நாதியற்ற அகதிகளாய்-எம்மை
அஞ்சி ஓடிட விரட்டியடித்தார்

It was in October 1990 that the tiger organization (LTTE) forcibly expelled the Tamil speaking Muslim people from the Northern Province in an atrocious act amounting to ethnic cleansing. Within a few days the Muslims were chased out of their homeland where they had lived for many, many centuries.

ஐவேளை தொழுத பள்ளிகளும் -ஒருவேளை
தொழுதிட ஒரு முஸ்லீம் இன்றிப் பாழ்பட
அமுதூட்டி அன்னை காட்டிய
வடபுலத்து வான் நிலவும் தேய்ந்து மறைந்ததே



பனம் பழமும், பனங்குட்டானும், ஒடியலும்,
எள்ளுருண்டையும், நல்லெண்ணையும்
விட்டுப் பிரிந்து-ஓர் நாளில் எல்லாமிழந்து
ஓலைக் குடிசையில் வாழும் ஏழைகளானோம்



வெள்ளி தோறும் பிரியாணி உண்டு விருந்தாடிய இனம்
கிழிந்த கூரைவழி தெரிந்த பிறையும்
பிய்ந்த பாய்விரித்த மணல் தரையும்-நெஞ்சில்
நெருப்பை அள்ளிச் சொரிய அகதிகளானோம்

குடம் நீருக்கு பல காத தூரம் நடந்து தள்ளாட
பிடி சோற்றுக்கு தினக்கூலிகளாய் அல்லாட
நெஞ்சில் அலைமோதும் சோகம்-
அழுகையிலோ மாறாத முகாரி ராகம்

Tamil and Muslim activists called for both communities to "forge new paths of activism", as they marked 30 years since the expulsion of Muslims from Jaffna by the Liberation Tigers of Tamil Eelam (LTTE).

In October 1990, amid hostilities between Tamils and Muslims and growing paramilitary activity, the LTTE expelled some 20,000 Muslim families from the Northern Province – up to 75,000 people in total.

"The war had been cruel, and both our communities had been torn apart," said a letter signed by the activists. "Both the communities had been uprooted from their domiciles repeatedly, in the bombing and shelling, in the brutality of state militarisation and in the brutality of militancy. 30 years later, we are still looking for answers to all our concerns and feel the need for solidarity."

மூடிய அபாயாவுக்குள் கிழிந்த உள்ளாடை-
கிழிந்த முக்காட்டுக்குள் பாயும் கண்ணீர் ஓடை
நரையும் திரையும் சட்டென்று வர பட்டுப்போன மனம்
இளமையில் பூத்திட்ட முதுமையில் மாறாத சோகம்

அழுகை துடைத்து மனதை தேற்றிட யாருமில்லை
அழுக்கு ஆடைக்கு மாற்றுத் துணியில்லை
உயிர் பிழைக்க உழைத்ததெல்லாம் கப்பமாய் செலுத்தி
ஓடிக்கடந்த ஓர் கொடிய "**மதினா யாத்திரை**"



விடாமல் ஒலித்த துப்பாக்கிகள்-எம்
விம்மலையும், அழுகையையும் மறைக்க,
சொறி நாய்களாய் எம்மை விரட்டியடிக்க
எம் துயரம் யார் நெஞ்சை தொடும்
எம் அழுகை எந்தச் செவியை சேரும்.?



சோகக்கறையான் நெஞ்சை அரிக்க
வறுமைப் புயல் வாழ்வைச் சிதைக்க-வாழ்ந்த
வடபுலத்து ஏதேன் வனமும் மறைந்துபோனது-
வசந்தகாலமும் கனவாய் கலைந்துபோனது.

கனவுகளை கலைத்துக்-கூடுகளைச் சிதைத்து,
தொழுத பள்ளிகளைப் பாழாக்கி-அகதிகளாய்
கண்ணீரில் வாழ-இழைத்த குற்றம்தான் என்னவோ?

பனையோடு நாம் கொண்ட பாரம்பரிய உறவு முறிந்திட
முறிந்த பனைாய் எம் வாழ்வு உருவழிந்திட
முக்காடும், தொப்பியும் அணிந்த-கூலிகள்
கூரையும், வேலியுமில்லாப் பள்ளியில்-இன்றோ
முழுநாளும் தொழுகின்ற அகதிகள்





வாங்கொலியாய் நெஞ்சம் குமுற
கண்ணீரில் வுழு செய்து-கரம் நீட்டி "துஆ" கேட்டு
சலாம் சொல்ல தமிழ் சகோதரர் இன்றி
வல்ல அல்லாவை அனைவரும் நலம் வாழ
அமைதி தருவாய் என்றே தினம் வேண்டுகின்றோம்

அலை அழித்த காலடித் தடயங்களாய்
ஒரு நொடிக்குள் அழிந்த வாழ்வு-எறிகணை
முறித்த பனையாய் கலைந்த உறவு
பிள்ளைகளின் படிப்போ கலைந்த கனவு

முப்பது வருட அகதி வாழ்வோ தூக்குக் கயிறு
வாழ்ந்த மண்ணுக்காய் ஏங்கிய மூதிய உறவுகளோ
அகதி மண்ணில் புதைந்த அவல நிலைப்பாடு

வாழ்ந்த மண் நின்று -எம்மை
ஆயுதவாதிகள் விரட்டியடித்தார்
உடுத்திய ஆடையோடு ஓடிட –ஏழையாய்
துரோகியாய் எம்மைத் துரத்தியடித்தார்



the New York Times, Mohammed Ibrahim, a 40-year-old businessman said:

> "I was kneeling down and praying when the rebels started shooting. The firing went on for 15 minutes. I escaped without being hit and found myself among bodies all over the place."[1]

Mohammed Arif, a 17-year-old student who also survived the massacre told the New York Times:

> "Before I escaped from a side door and scaled a wall, I saw a Tiger rebel put a gun into the mouth of a small Muslim boy and pull the trigger."[1]

அலைமோதும் கடலோரம் அமர்ந்து
அழுத விழிகளோடு -எம் கதை சொல்கின்றோம்-
நண்டுகளுக்கு குழிகளிருக்க, நரிகளுக்கும்,
எலிகளுக்கும் வளைகளிருக்க
பறவைகளுக்கும் கூடுகளிருக்க
அகதிகளாய் தீய்ந்த எம் வாழ்வில்
புதைகுழிகள்தான் இனி எம் புகலிடமோ?

எங்கள் வண்ணக் கனவை ஆயுதங்கள் கலைத்திட
வாழ்ந்த வீடும், பொருளும் கொள்ளைபோயிட
அகதிகளாய் மாறிட்ட வாழ்வில்
***புதிய "ஹச் யாத்திரிகளாய் நாம்"***



மனுநீதிச் சோழனின் வாரிசுகளே-மணிக்கயிறு
எங்கள் கழுத்தை நெரிக்க-உயிர் சுவையால்
கதறுகின்றோம் -தமிழன் நீதி இதுதானோ?
எம் தாய் மொழியும் தமிழ்தானே



முறிந்த பனையில் இளைப்பாற நிழல் இல்லை-
பசியாற்றி இளைப்பாற-இம் மண்ணில்
ஈச்சமரங்கள்தானுமில்லை-



மண்ணுக்காய்- மண்ணாலான மனிதனின்
போர்கள் தொடர்ந்திட-அழிவுகளும்
ஆறாத் துயரின் ஒப்பாரிகளும் மாறாது ஒலித்திட
எரி நரகாய் மாறிடும் உலகில்-
இனி எதற்கு இன்னோர் நரகு இறைவா?
***யா அல்லா! ஹே ராம்! ஓ ஜீஸஸ்-***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra- 24-5-2023*

# ஈகைச் சுடர்

ஈழத் தாயகம் மீட்கத் தம்மையே சுடராக்கினார்-
சிங்கள அடிமை மாயையை முறியடிக்க
விடம் சூடி களமாடும் விடுதலைப் புலியாகினார்

இன்னுயிர் ஈந்த வேங்கையிவரிற்காய்
கண்ணீர் மாலைகட்டி-
கருத்தில் சோகத் தீச்சட்டி சுமந்து-
என்றும் நிலைக்கும் நினைவாய்
ஈகைச் சுடரை ஏற்றி வணங்கி நின்றோம்

வீரம் விளைநிலத்தில் வித்தாய் விழுந்து-தமிழ் ஈழத்தே
வைரமுத்தாய் விளைந்து விடுதலைச் சொத்தாகும்
மாரனும், சிங்கள வீரனும் கண்டஞ்சும் மாவீரர்

விழுந்தால் வித்தாய் விழுவோம்
எழுந்தால் வீர வேங்கையாய்  எழுவோம்
இறப்பென்பது எமக்கு இன்னோர் பிறப்பே.
என முழங்கும் ஈழத் தமிழ் மறவர்

# நம் கதை

கருத்தாங்கி கனியும் உதரம்
குண்டு தரித்து கரும்புலியாய் உருமாறிட,
துடுப்பேந்தி விளையாடும் சிறுவர்களும்-துப்பாக்கியேந்தி
மழலையர் படையணியாய்ப் போராடிட
வெற்றுக்கோப்பைகளும் அட்சயபாத்திரங்களான
அதிசயமும் இங்கே-மீண்டும் சிறுவன் தாவீது
அசுர கோலியாத்துக்களை
வீழ்த்தும் விடுதலைச் சரித்திரங்களுமிங்கே.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

Pax Ravichandra-27.3.2023

# ஜனநாயகம்?

---

மைத்திரேய புத்தரும், மகிந்த தேரரும் வெட்கிட
சோபிததேரர் ஆவி துக்கித்திட
ஈழ ஜனநாயகத்தை கொள்ளையிட்ட
வெள்ளை வேட்டி அரசியல் கொள்ளையராய்
மகிந்த, மைத்திரி கூட்டணி

விதையடித்த அண்ணக ஊடகங்கள்-அதில்
சக்தியிழந்த ''சக்தி'', அஸ்தமித்த ''சூரியன்''
சோபை இழந்த பாலையாய் ''வசந்தம்''
அரசியல் சாக்கடை நாறிடும் ''தென்றல்''.

நரிக்கூட்டத்தின் ஊளையாய் நாறிடும் பொய்மை செய்தியாக
உண்மையைச்-சிலுவையில அறைந்த
ஊடகங்களின் கொடுமை-நாடறிந்த உண்மை

சர்வாதிகாரியாய் குடும்ப அரசியலை வளர்த்த கும்பல்
கோடி கோடியாய் தேசிய சொத்தை கொள்ளையிட்டு மறைத்து
சட்டத்தின் பிடி நின்ற தப்பிக்க, பிரதமர் பதவியை பறித்த சதி
எட்டப்பனாய் மாறிய ஜனாதிபதி மைத்திரி

பெரும்பான்மைப் பலமில்லாத-சதிகாரர் நாடாள-
மக்கள் ஆணையை அவமதித்த மைத்திரி
ஜனாதிபதி மகிந்தாவுக்கு முடிசூட்ட
பாதை மாறிய சர்வாதிகாரி

நீதிபதியை மாற்றி-ஊழல் ஒழிப்பு விசாரணை
அதிகாரியை இடம் மாற்றம் செய்து
நல்லாட்சியைக் கவிழ்த்து, வல்லாட்சியை அரியணை ஏற்றி
மக்கள் ஆணையை மறுதலித்து காட்டிக் கொடுத்த
எட்டப்ப-யூதாஸாய்-மைத்திரி.-வெள்ளை
வேட்டி கொள்ளையர் தலைவனாய் மகிந்தா

நல்லாட்சியைக் கவிழ்த்து-நாடாளக,
பெரும்பான்மை இன்றித் தடுமாறிய கொள்ளையர்
சபாநாயகரை அவமதித்து, காவல் துறையைத் தாக்கி
நாடாளுமன்றத்தில் நடத்திய அடாவடித்தனங்கள்
ஜனநாயகத்தை இழிவுபடுத்திய அரசியல் வேசித்தனங்கள்

நாய்களாய்க் குரைத்து-நரிகளாய் ஊளையிட்டு,
ஓநாய்களாய்ச் சண்டையிட்டு -ஜனநாயகத்தை
கொள்ளையிட்ட கும்பல் வாக்கெடுப்பில் தோற்றிட
சத்தியம் வெல்லும் இன்றும் உண்மையானது

சட்டம் இருட்டறையாக, சமயங்கள் வெற்றுச் சடங்குகளாக
ஏழைகள் பேதலிக்க-நாளும் வானைத் தொடும் விலைவாசி
நாணயம் நலிந்த அரசியல்வாதிகளால்
நாணி மண்ணைக் கவ்விடும்-ஈழ நாணயத்தின் பெறுமதி

அரசியல்வாதிகள் கரங்களில்
கொள்ளையிட்ட ஜனநாயகத்தின் கறை
பேச்சிலோ பொய்மை குடிவந்த அவலநிலை

ஓதிய பிரித்தும், கட்டிய நூலும் ஒப்புக்குப்
பௌத்தராய்க் காட்ட-கொள்ளையர்
ஆடிய வேசித்தன அரசியல் நாடகம்
தேவதத்தன் சீடர்களைக் காட்டிக் கொடுத்திட
பௌத்த பெருமான் விழிகளிலும் காயாத ஈரம்-
வெள்ளரசு மரத்திலும் வாடலின் சாரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-25-5-2023*

# ஈழம் என் தாயகம்

---

புலம்பெயர்ந்து உலகின், கடைக்கோடி போனாலும்-
பிறந்த மண்ணை மறப்பது தாயை மறப்பதற்கு ஒப்பானதே
காலத்தே தாய் மொழியை துறப்பது தமிழனுக்கு இழிவானது

பாடும் மீனும், பச்சை வயல்களும், கானம் பாடும் வானம் பாடியும்
கம்பீரமாய் உயர்ந்து நிற்கும் கல்விக்கண் தந்த கல்லூரியும்
சொந்த பந்தங்களும்  இங்கிருக்க -மருந்தும், கல்வியும்
விருந்தாய் தந்த தாய் மண்ணை மறப்பது துரோகமே

புகலிடம் தந்த மண்ணை-அந்நியப் பெண்ணை
தாய் எனக்கொள்வாரோ? தொப்பிள் கொடி உறவை
துறப்போரும்-மானிடரோ?

பனிக்காலப் பறவைகள் இடம்பெயர்ந்தாலும்-பருவம் மாறிட
பிறந்த இடம் நாடியே விரும்பி- திரும்பிப் பறக்கும்.
திசை காட்டும் ஊசியும்-திசை மாறுவதில்லை
வான் நட்சந்திரங்களும்-இடம் மாறுவதில்லை

நிலை மாறும் உலகில்- பேரினவாதம் தழைத்தாலும்
ஒரு நாள் எல்லாம் மாறலாம், என் தேசமும்
ஏதேனாய் மீண்டும் மாறலாம்-ஒரு நாள்
கமுனுவும், எல்லாளனும் நண்பனாய் உறவாடலாம்.

ஈழமே! என் இனிய தாயகமே! எழில் கொஞ்சும் பேரழகே
மும் மொழியும், நால்வகை மதமும் வாழும் என் தேசமே
இந்துவின் எழில் குன்றாத முத்தே
என் உயிர் ஒருபோதும் உன்னை மறவாது.
என்றும் நீயே என் தாய் எனச் சொல்ல மறவாது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-6-2023*

# இளமைக் கனவுகள்

---

இளமைக் கனவுகளும்-நெஞ்சுற்ற இனிய நினைவுகளும்
கல்லூரிகளில் முடிபுபெற,-கனவு கலைந்த உள்ளத்தோடும்
கனத்திடும் மனச்சுமைகளோடும்
வேலை தேடி நாளுமலைகின்றோம்-தார்மிக அரசின்-
தரப்படுத்தற் கொள்கைகளால்-பாதிப்புற்ற
தமிழ் இளைஞர்கள்- நாம்

கல்வித் தடையும்- கருநிழலாய் தொடரும் வறுமையும்
இளநெஞ்சை வாட்டிட-கையூட்டும்,
ஆளும் கட்சி அரசியல்வாதியின் சிபார்சும்-வேலைக்குத்
தாரக மந்திரமாயிட, ஊழல் நிறை உலகில்-தமிழ்
ஏழைகளுக்கு யார் தருவார் வேலை?

தரப்படுத்தலால் உயர் கல்வி இழந்தோம்
தாயக பூமியல் சிங்கள குடியேற்றங்களால்
காணி நிலமிழந்தோம், ஆட்சி மொழி சிங்களம்
என்பதால் தமிழர் மாட்சி இழந்தாம்
எல்லாம் இழந்தபின் இழப்பதற்கு
தன்மானம் ஒன்றைத் தவிர வேறேதுமில்லா
நிலையில் போராட விழைந்தோம்

மானமிழந்தபின் வாழ்வுதான் எதற்கு?-அடிமையாய்
சிங்களத்தை தொழுது வாழ்வதைவிட
ஆயதமேந்தி உரிமைக்காய்ப் போராடுவது மேல்
உயிர் தமிழுக்கும் உடல் மண்ணிற்குமாய்
மறவனாய் மடிந்து வீழ்வது மேல்

பறையரல்லோம் பாவிகளல்லோம்-சிங்களத்தை
தொழுது வாழ அடிமைகளல்லோம்-தேய்ந்து
மறையக் கறைகொண்ட பிறையுமல்லோம்-
கல்தோன்றி, மண் தோன்றாக் காலத்த பிறந்து
ஒன்றே குலம், ஒருவனே தேவன்
யாதும் ஊரே! யாவரும் கேளீர் என முழங்கிய மூத்த குடி
எமை நாமாள இறைமை கொண்ட தமிழ்குடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-4-4-2023*

# ஈழத்துப் பரணி

---

கொட்டட்டும் போர் என்றே கொடும்பறைகள்-குமுறி
அனல் கக்கட்டும் எரிமலையாய்க் கரும்புலிகள்-கொடுந் தீ
மூட்டட்டும் குண்டுகளின் ஓயாத அலைகள்- திக்கெட்டும்
கேட்க்கட்டும் விடுதலைப் புலிகளின் ஜயபேரிகைகள்.

துளைக்குமோ எஃகு நெஞ்சை நெருப்பு ரவைகள்-மனம்
களைக்குமோ நெருப்பாற்றில் தினம் நீராடும் புலிகள்-அடிமைத்
தளையுடைக்குமே நாளும் அனல் கக்கும் எரிமலைகள்,
களம் விழுந்தும் முளைக்கும் புது விதைகள் -வாழியவே

உண்டு குடித்து கலவி செய்து உறங்கி எழுகின்றோம்
ஓவ்வொரு நாளும் இறப்பதற்காய்,
மண்ணில் புதைந்து, தீயில் எரியும் வாழ்வும் வாழ்வோ?

பிணங்களுக்கும், அடிமைகளுக்கும் தேவை
ஆறடி நிலமும் அடிமை வாழ்வும்-
தனி நாடும் தம்மை ஆளும் இறையாண்மையும்
உரிமைக் குடிமக்களுக்கே தேவை

***ஈழக்கனவினை என் ஈரக் கருவிழிகள்***
***களிப்புறக் காணுமுன் வாடித் துயருறுமோ?***
***உடல்தான் மூச்சடங்கிப் பேச்சடங்கி***
***பிணமாய் வாடித் துயருறுமோ?***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-4-4-2023*

# இருள் பூத்த ஞாயிறு

---

இருள் பூத்த ஞாயிறன்று-இராணுவம்
சுற்றி வளைத்த தமிழ் கிராமமொன்று
ஈழத்தில் காணாமற்போனது -உயிரெல்லாம்
விதையாகிட-உடலெல்லாம் உரமாகிட
குருதிச்சேற்றில் ஒரு கோர விதைப்பு நடந்தேறியது

பார்த்த மனம் சோகத்தில் வாடிக்கருகிட,
அன்பு மனையாளோடும் மழலைகளோடும்
மரணத் துயில் கொள்ளும் உறவுகள் ஒருபுறம்

வெள்ளித் தலையோடும், பொக்கைவாய்ச் சிரிப்போடும்
சில்லிட்டு கற்சிலையாய்ப்போன மூத்த சொந்தங்கள் மறுபுறம்.
மூச்சடங்கிப் பேச்சடங்கி முற்றுமடங்கிக் குருதியில்
மூழ்கி கிடந்த முன்னறி தெய்வங்கள் வாயிற்புறம்

இல்லங்களே தீயில் கருகி சாம்பலான அவலங்கள்
பிள்ளைச் செல்வங்களையிழந்து பித்து மனங்கள்
கல்லாகிப்போன துயரங்கள்

விழிவடிக்கும் கண்ணீரோடும், மொழியிழந்த அழுகையோடும்
அக்கினி வளர்த்து உறவுகளை ஆகுதீயாக்கி
இளந்தலைமுறை யாத்திடும் சுதந்திர யாகம்
ஒற்றுமையே மந்திரமாக நூற்கும் கர்மயோகம்

கருகி எரியும் டயர்களே சிதையாய் மாறிட-கொலையுண்ட
இளைஞர்களின் அகால அஸ்தமனங்கள்-சுவாசமே
பிண வாசமானதினால்-வனவாசம் போன இளைஞர்கள்
விடுதலைப் போராட்டத்தின் உதயங்கள்

நீறுபூத்துக் கிடந்த அணையாத நெருப்பூ-
நெஞ்சில்  எரிமலையாய் விழிக்க-
கண்ணி வெடிகளால் நில நடுக்கங்கள்
கரும்புலிகளால்-அனல் சூறாவளிகள்

இடியாய், மழையாய், மின்னலாய்த்
துப்பாக்கித் தீபங்களை ஏற்றி
புதிய தீபாவளிகள் கொண்டாடி
விடுதலைப் போராளிகள்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-3-04-2023

# எம் மண்

---

ஏர் உழுது காயமாகாத எம் மண்-போர் எழுதும்
யுத்தத்-தாங்கிகளால் காயமானது
வாழ்ந்து கனிந்தவர் ஆழ்ந்து உறங்கிட
தாய்மடி ஈந்து தாலாட்டுப் பாடும் எம்மண்
பூவும் பிஞ்சுமாய் போரில் உதிர்ந்தவர்களுக்காய்
ஒப்பாரியின்றி ஊமையாய் கண்ணீர் வடிக்கின்றது.

பூவாசம் சுமந்து-மணந்த தென்றல்
புகையும், பிணவாசமும் கலந்திட
மூச்சுத்திணறி நாறி மணக்கின்றது.

உலை கொதிக்கும் தீயினால் உள்ளம் மகிழும் வான்
ஊரை எரிக்கும் தீயினால்
கண்கலங்கி மழையாய் உருகுகின்றது.

தாகம் தீர்த்த நீரோடைகள்
உதிரத்தாலும் உடலங்களாலும்-நாறிச் சிவந்து
நாவரண்டு தாகம் என்றன

தீமழை காணாத எங்கள் தாயகத்தில்
எறிகணைகளும், குண்டு வீச்சு வீமானங்களும்
பொழியும் தீமழை -இடி மின்னல்,
மழையில் நடனமாடிய-இனம்-எறிகணைக்கும்,
குண்டு வீச்சு விமானத்திற்கும் அஞ்சி
குழிமுயல்களாய் பதுங்கு குழிகளில்
வாழும் அவல நிலை

தீ சுட்டு நீர் கூட தீயானதுமிங்கே-குருதி பட்டு
நந்திக்கடலும் சிவப்பானதுமிங்கே
அலை கடல் கரையில் ஒதுக்கும் பிணம்
ஆவலாய் வானில் வட்டமிடும் கழுகு இனம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.3.2023*

# என் நாடு

---

என் நாடே, என் தாயத்திரு நாடே
ஏதேன் தோட்டத்து பேரழகாய்
இந்து சமுத்திரத்தின் வெண்முத்தாய்
இறைவன் படைத்த எழிலே

இனவாத எரிமலைகளும், பயங்கரவாதச் சூறாவளிகளும்
நாலுமுனைத் தாக்க, துன்புறும் பாஞ்சாலியே
தினம் உன்னைப் பகடையாக்கி அரசியல்-சூதாட்டம் ஆடும்
புதிய பாண்டவர்களும், கௌரவர்களும்
இனவாத அரசியல் வேசித்தனத்தின் புதிய வாரிசுகளோ?
விடுதலைப் போரின் விகாரத்தில் பிறந்த அரக்கர்களோ?

கத்தியின்றி இரத்தமின்றி தேசபிதாக்கள் வென்றெடுத்த சுதந்திரம்,
கனவாய், பழங்கதையாய் போயிட, நித்தமும் கோர யுத்தமிங்கே
இராக்கேலின் ஓயாத ஒப்பாரியுமிங்கே.

மூவினமும் ஒன்றுபட்டு தேடிய ஒப்பில்லாச் சுதந்திரம்
உப்பில்லாப் பண்டமாதே-ஒற்றுமையிழந்து தம்முள் போரடி அழிய
இனவாதத் தொழுநோய்க்கு இரையானதே

தம்ம போதனையோ பௌர்ணமி பன
மலைப்பொழிவோ ஞாயிறு மறை உரை- என மாறிட
யுத்தமிங்கே தொடர் கதையானது
இரத்தகறையால் தேசமிங்கு சிவப்பானது.

ஈழ அன்னையே இன்னோர் சீதையாய் இங்கே சிறையிருக்க
தமிழ் ஈழமே (அ) சோகவனமானதோ? அசுரர் பூமியானதோ?.
அன்றும் உன்னில் இனவாத தீ எரிந்ததால, சிவனும்,
கௌதம புத்தரும், ஆதாமும் உன் உச்சி மலையில்
ஒரு கால் பதித்து அச்சத்தோடு உன்னைக் கடந்தார்

மனிதன் வாழ முடியாத யுத்த பூமியாய்
இனவாத சுனாமி தினம் அலைவீசும் இரத்த பூமியாய்
ஏன் உருவழிந்தாய் என் நாடே என் தாய்த்திரு நாடே.?
ஈழத்தமிழர்க்கு என்றும் நீ எரி நரகோ
உயிர்பலி கேட்கும் யுத்த பூமியோ?-தாயே சொல்

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***

*Pax Ravichandra- 3.04-2023*

# என் தேசமே ஓ என் நேசமே



அரசன் அன்று கொல்வான்-
தெய்வம் நின்று கொல்லும்-ஈழத்தில்
இன்று நிதரிசனமானது

ஆட்சியைப் பிடித்து அரியணை ஏறியதும், அடங்காத்
தமிழனின் போரட்டத்தை, அராஜகத்தால் வேரறுத்தாய்
அநாதை, அங்கவீனர், விதவை, அகதி என்றே-தமிழினம்
சீரழிய கங்கையாய் குருதியை ஓடவிட்டாய்



தேசியக் கொடியிலும், சீவர ஆடையிலும்-
அப்பாவி ஈழத்தமிழனின் குருதிக்கறை படிய
சரணடைந்தவர்களையும் சாம்பலாக்கி
பிணமேட்டில் வெற்றிகொடி நட்டாய்

காணாமற் ஆக்கப்பட்டோருக்காய்-துளி
கண்ணீர் சிந்தாத உன் கல்நெஞ்சிலோ
ஆலகாலத்திலும் கொடிய இனவாதம்
பேரினவாதம் கக்கும் மனதிலோ தீராத சுயநலம்

நதிகள் பாயாத வடகிழக்கில் நாளும் தாய்குலத்தின் கண்ணீர்
பாய, பல்லாண்டு போனபின்பும் பதவி மோகம் தணியாத
இனவாத அண்ணன் தம்பிகளோ அரியணையில் வாழ-நீதி வழங்காத
கரங்களில் இறைவனை நிந்திக்கும் கறையாய் செந்நீர்



நாளும் விண்ணைத் தொடும் விலைவாசியால் ஏழைகளின் வாழ்வோ
மண்ணைத் தொட, உணவு, மருந்து, பால்மா, எரிவாயு,
எரிபொருள் சந்தையில் மறைந்திட.-ஆளும் இனவாத ஆட்சியில்
நாளும் பஞ்சம், போராட்டம் வலுக்க நீங்களோ இராணுவத்திடம் தஞ்சம்




இந்தியா, சீனா, பங்களாதேஷ் நாடுகளில் பிச்சைகேட்கும்
பதவி மோகம், உன் இனமே உன்னைத் தூஷித்துப் பழிக்க
என்றுமுள்ள தர்மம் உனக்களிக்கும் தண்டனையோ
ஏழ் ஏழ் ஜென்மத்திலும் எரிநரகாய் உன்னை வாட்டும்

வளமான திட்டங்களின்றி வறுமை செழிக்க-நாட்டை சீனருக்கு
வாரிக் கொடுத்தாய், அம்பாந்தோட்டை துறைமுகமும்-மத்தளை
விமான நிலையமும்-கொழும்புத் துறைமுக நகரும் வெறிச்சோடிக் கிடக்க-
கடன் பளு விண்ணைத் தொட, காசை அச்சிட்டு மக்களை ஏமாற்றினாய்

விலைவாசி விஷமாய் ஏழைகளை வாட்ட
கும்பி கொதித்த ஏழைகள்-உங்கள்
உருவப் பொம்களை எரித்து, சவப்பெட்டிகளை
உன் அலுவலகத்தில் வீசிட, நீயோ ஓடி ஒளிந்தாய்?




நாடோ வறுமையில் மூழ்கிட, நாளும் ஆர்ப்பாட்டங்கள்
தொடர்ந்திட, புத்தம் சரணம் கச்சாமி மறந்து
யுத்தம் சரணம் கச்சாமி என்ற முழங்கி அரியணை அமர்ந்த
யுத்த வெறியர்கள் மனதில் அமைதி என்றும் இல்லை

அரச மரநிழலில் அமர்ந்தவரும் அடைகலம் தர-
***மனம் திருந்திய அங்குலிமாலாவாய்*** அண்ணன் தம்பி,
நீங்களுமில்லை-ஊழலால் கோடிகளைக் குவித்த
கேடிகள் உங்களுக்கு நிம்மதி இல்லை



சஹரான் குண்டு வெடிப்பில் பலியான அப்பாவிகளின்
இரத்தம் , நீதி கேட்டு ஆண்டவனைக் கதறியழைக்க
பத்து கொள்ளை நோய்களாய் பல பொருட்களும்
சந்தையில் மறைந்திட பஞ்சத்தால் வாடிய தேசம்

மின்துண்டிப்பால் நாளும் ஸ்தம்பிக்கும் நாடு, காகிதமின்றி
பரீட்சைகளை பின்போட, பள்ளி மாணவர் வாழ்வோ சுடுகாடு,
பணவீக்கம் உச்சி வானைத் தொட, அச்சகமாய் மாறி காசை
அச்சிடும் திறைசேரி, அரசோ ராஜபக்ஷாக்களின் சூதாட்டக் கச்சேரி




உன் மக்களே நித்தம் உன்னைச் சபித்திட
இழிந்த வாழ்வாய் விடியாத உன் பொழுது
கொரோனா நாளும் அச்சுறுத்த-பதவியிழந்து
நாடு கடந்ததோ தெய்வ நீதியான நிகழ்வு

***நடப்பதோ தர்ம யுத்தம்***
***அரசியலைத் துறந்து மகிந்த தேரோவாய் மாறிடு***
***மக்கள் நிம்மதியாய் வாழட்டும்***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
Pax Ravichandra-22.3.2022

# இன்றைய ஈழம்

எரிமலையில் பூத்த குறிஞ்சிப்பூக்களோ?-நெருப்பாற்றில்
நீராடும் அக்கினிக் குஞ்சுகளோ ஈழத்தமிழினம்.?
குண்டுவீச்சும் எறிகணைகளும் உயிர்களைக் கொன்றழிக்க
தப்பித் பிழைத்தவை மரநிழலிலும் மதகுகளிலும் கூடு கட்டி
பசியிலும் பிணியிலும் படைத்தவனை தேடிப் பரிதவிக்கும்
புதிய பரிணாமக் காலமிது

எட்டாத உயரத்திலோ அமைதிப் புறா
பற்றறுத்த பார்வையாளர்களாய் ஐ.நா.சபை

நீண்டு செல்லும் காணமற்போனோர் வரிசையில
பொதுமக்கள்-ஊடகவியலாளரோடு-பிந்திய இணைப்பாய்
அருட்தந்தை ஜிம்பிரவுணும் அவர் உதவியாளரும்

கற்பழிக்கப்பட்டு கொலை செய்யப்பட்டோர்
வரிசையில்-நேற்று பேசாலையில் ஒரு இளம்தாய்
குண்டு வீச்சில் குடைசாய்ந்து
கொலையுண்டவர்களோடு வெற்றி நாயகி ஆலயம்

கடத்தலும், கொலையும், கப்பமும்ஆயுதக் கலாச்சாரங்கள்
காவியுடைகளின் இனத்துவேஷ கோஷங்களோ தேசியவாதங்கள்

பசிக்கு எதிரான அமைப்பின் பதினேழு தொண்டர்களை
இராணுவம் கொன்ற கொ஥ூரம்-உலகை உலுக்கிய துயரம்.

அலிகளாய் நீதிவிசாரணைக் குழுக்கள்
நாளந்த நிகழ்ச்சி நிரல்களாய் நாற்சந்திகளில்
தமிழ் முண்டங்களின் கண்காட்சி

கொலைகள் குறிப்பேடுகளில் எண்ணும் எழுத்துமாகிட
பேரினவாத்திடம் சோரம்போய்
பொய்மையின் பிரச்சார பீரங்கிகளான ஊடகத்துறை

ஆடி 83 பின் அலையலையாய் நிகழ்ந்த
இனவாத அழிவின் இன்னோர் சுனாமிப்பேரலை
முல்லைப் பூக்களைப் பலிகொண்டு
செஞ்சோலையைப் பிணக்காடாக்கிய கோரக்கொலை

பாக்கு நீரிணையை கடக்கும்-
புதிய இஸ்ரேயலரின் பரிதாப யாத்திரைகள்-
மூழ்கிப்போனவரும்-பார்வோனின்
கடற்படைக்கு இரையாகிப்போனவரும்
கணக்கில் அடங்காத எண்ணிக்கை-தொடர்ந்தும்
தமிழகக் கரைசேரும் அகதிகளின் கண்ணீர்க் கதை

செந்நீர் சிந்தி உயிரிழந்த உறவுகளுக்காய்
கண்ணீரோடு கடல் கடந்த உறவுகள்
புகலிடம் தேடும் அகதிகள்
உலகின் புதிய தீண்டாத ஜாதி?

கலைந்த கூந்தலும் கண்ணீர் விழிகளும்
புழுதி படிந்த ஆடையும், தொழுது இறைவனை அழைக்க
துச்சாதனன் கையில் பாஞ்சாலியின் சேலை
அசோகவனத்தில் கண்ணீர்த் தவத்தில் சீதை
ஈழ மங்கையரின் அவல நிலைமை

ஆயுதப் போராட்டமும் பயங்கரவாதச் சூதாட்டமானது
கதறிக் கண்ணனை அழைக்கும் திரௌபதியாய் தமிழ் ஈழஅன்னை
ஊமைகளாய் மௌனித்து அவையலங்காரப் பேடிகளான
உத்தம பீஷ்மரும் குரு சிரேஷ்டர்களுமாய் இந்திய

அலிகளின் ஆயுதமோ அஹிம்சை
கோழைகளின் போதனையோ சமாதானம்
பரபாஸை விடுவித்து-இயேசுவை சிலுவையில் அறைந்திட
யுத்த வெறியர்களைத் தூண்டிவிடும் சீவர ஆடைகள்

கண்ணுக்கு கண், பல்லுக்கு பல் என்றால்
அங்கவீனச் சமூகம்தான் மிஞ்சும்
பகைமையை பகைமையால் வெல்ல முயன்றால்
தீராப் பகைமைதான் நிலைக்கும்
பகைமையை அன்பினால் வெல்லுதலே தர்மம்

அன்பின் வேதங்கள் தீட்டாக,
இனவாதம் பயங்கரவாதம் புதிய வேதமாக
கார்ல் மாக்ஸ்-மாவோவும், லெனினும்-சேகுவரா
கடவுளராகத் தொடரும் யுத்தம்-எங்கும் இரத்தம்

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***

Pax.Ravichandra-3-04-2023

# ஏனிந்த அவலம் ஈழத்தமிழா

---

எரியும் டயர்களில் தீ அணையவில்லை
ஈர விழிகளில் கண்ணீர் காயவில்லை
குண்டுச்சத்தங்கள் ஓயவில்லை
ஆயுதக் கலாச்சரம் அரசோச்சும் கொடியநிலை

ஈழத்தமிழன் பயணத்தில் நாளும் தீராத கெடுபிடிகள்
ஊரிலிருந்து கொழும்பிற்கும் திரும்பி ஊருக்கும் பயணிக்கும் போது
சாலைகளில் உள்ள எல்லாச் சோதனைச் சாவடிகளிலும்
இறங்கி ஏறிட ஆரோக்கிமான உடற்பயிற்சியான நிலை

"தமிழா நீ புலி" என்று சிங்களம் சொல்லிட
அச்சம் தவிர் என்று உள்மனம் கெஞ்சிட
நாளும் நடக்கும் நடைப்பயிற்சி

அடையாள அட்டை, பொதி சோதனை முடித்து
உடல் தடவி, முகமுடிகளின் விழிதடவிடும் வடிகட்டல்கள்
மோப்ப நாய்கள் வாகனத்தை முகர்ந்து பரிசோதிக்க
காத்திருக்கும் பயணிகளோ பறை நாய்கள்

பயணிக்கலாம் என்ற உத்தரவு கிடைத்திட
மனம் வெந்து, நடந்து மீண்டும் பஸ் ஏறி
பல தடவைகள் இறங்கி ஏறும் பயணம்
கல்வாரிச் சிலுவையின் துயரம்.

மழையோ வெயிலோ, இரவோ பகலோ
ஆணோ பெண்ணோ முதியவரோ, குருவானவரோ
கர்பிணியோ, கன்னியாஸ்திரியோ-புத்த பிக்குகளை தவிர
யாருக்கும் சோதனை விதி விலக்கல்ல

***நாளும் நடக்கும் தீ மிதிப்பு –
உயிர் பிழைக்கும் பெருஞ்சடங்கு***

பொலிஸ் நிலையத்தில் தங்குமிடம் பதிவு செய்து
பயணநோக்கம் தெளிவாக்கித் -இரவோ, பகலோ
இராணுவ சோதனைக்காளாகி, இடர்தாங்கி
சிங்கள சகோதரர் சந்தேகம் போக்குதல் தமிழர் கடன்

செந்தமிழ் தவிர்த்து மௌனம் காத்திட-நடைபாதையும்
இரயில் நிலையங்களும் திடீர்ச் சோதனைக் களமாகும்
அக்கினிப் பரீட்சைகளில் சித்தி பெற்றால்
வீடு இல்லையேல் சுடுகாடு விதியாகும்

மழைக்கால இராப்பயணங்களில் தூக்கம் துறந்து,
துக்கம் மறந்து, விழிப்போடிருக்கும் புத்த நிலை-
ஞானமோ கிட்டாத அவல நிலை

பாதையில் இறக்கப்பட்டு, பரிதவிக்க காணாமற்போனோர்
கதை பயமுறுத்த, எரியும் டயர்களும்,
பத்திரிகைச் செய்திகளும் கனவிலும் அச்சுறுத்த
பயம் மனதை அலைக்கழிக்கும்

ஒவ்வொரு சோதனைச்சாவடியிலும்- மீண்டு வருவது
புதுப்பிறப்பே என மனம் அக்களிக்க
இதயம் இறைவனைத் துணைக்கழைக்க
என்னே எங்கள் இறை வழிபாடு

ஓ தமிழா! ஈழத் தமிழா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-14-05-2023*

# எங்கே போகுது என் தேசம்?

மகிந்த சங்கமித்திரையால் மதம்மாறி
பௌத்தத்தை தழுவிய தேசம்,
மகிந்தாவின் குடும்ப அரசியலால் நாறி
இன்று, நடுத்தெருவிற்கு வந்த நாசம்



வற்றித் திறைசேரி-வளமிழக்க, வறுமைத்தீ
எரிநரகாய் சுட்டுத்தீய்க்க எரிபொருள், எரிவாயுவிற்காய்
இரவு, பகலாய் தெருக்களில் மக்கள் தவம்
மருந்தும், உணவுமின்றி வாழ்வோ எரிநரகான சாபம்




மின்வெட்டு அமுலாக மூடிக்கிடக்கும் தொழிற்சாலைகள்-
எரிபொருளின்றி முடங்கிப்போன நெடுஞ்சாலைகள்
கல்லூரிகள், அரச, தனியார்அலுவலகங்கள்

உரமின்றிக் களை முளைத்துப் பாழான கழனிகள்
உழைப்பிற்கு பலனின்றி -ஒரு பிடி சோறின்றி
உண்ணா நோன்பிருக்கும் விவசாயிகள்

விற்றுப்பிழைக்க கண்ணகியிடம்-கற்பைத்தவிர-
காற்சிலம்பில்லை-சந்திரமதியும் தாலியை விற்றிட-ஸ்ரீராமனை
மறந்து இராவணனிடம் மயங்கிய சீதை-நளனைப் பிரிந்த
புதிய சுயம்வரத்திற்கு தயாராகும் தமயந்தி






பிள்ளைகளின் பசி தீர்க்க-துச்சாதனனுக்கு
முந்தானை விரிக்கும் புதிய திரௌபதி
துஷ்யந்தன் கணையாழியை-சோற்றுக்காய்
அடகுவைக்கும் சகுந்தலை

கற்பும், மானமும் கடைத்தெருவிற்கு வந்திட
பாலும், மருந்தும் தேவர் அமுதாகிட
பஞ்சத்து ஆண்டிகளாய் ஈழவர்
குபேரர்களாய் ராஜபக்ஸா குடும்பத்தினர்

நாணயத்தாள்களை அச்சிட்ட திறைசேரி
பணவீக்கத்தால் -விலைவாசி விண்ணைத் தொட
ஜனாதிபதியின் ஆட்சியோ
சுரம் தப்பிய நாயனமான கச்சேரி

பேரினவாத குடும்ப அரசியலை முறியடிக்க
விழிப்படைந்டைந்த மக்கள் புரட்சி
நாட்டை விட்டோடிய ஜனாதிபதி

கண்காட்சியான அரசமாளிகை
கோபத்தீயில் வெந்த அடிவருடிகளின்
கோடிச் சொத்துக்கள்





பௌத்த சிங்கள-பேரினவாதம் முழங்கி
பதவிக்கு வந்த மகிந்த சிந்தாந்தம்
பல்லாயிரம் கோடிகளை கொள்ளையிட்டு
நாட்டை பிச்சை எடுக்கவைத்த
அரசியல் வேசித்தன பௌத்த இனவாதம்

எரிபொருள் வரிசையிலும் அகால மரணங்கள்
எரிவாயு, விறகின்றி மாடி வீட்டு மக்கள்
ஏழைகளான அவலங்கள்



எண்ணெயின்றி குடிசைகளும், மாடிகளும் இருளில் மூழ்க
எரிபொருளின்றி சாலைகள் வெறிச்சோடிக் கிடக்க
கடன் சுமையால் தள்ளாடும் தேசம்-கண்ணீர்ப்
புகையோடு போராடும் போராளிகளின் சுவாசம்



பாராளுமன்றமோ-துரியோதன் அவை
அரசியல் சூதாட்டத்தில் இன்றும்
தருமனுக்குத் தோல்வி-சகுனிக்கு வெற்றி
காடாளும் பாண்டவர்-நாடாளும் கௌரவர்

மக்கள் வாக்குகளை விற்றுப்பிழைக்கும்
அரசியல் வேசித்தனம்-நா நயமின்றி
நாணயத்திற்கு விலைபோகும்
அரசியல்வாதிகளின் பச்சோந்தித்தனம்

என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்
இனவாதச்சேற்றில் புதையுண்ட தர்மச்சக்கரம்
கல்வாரிச் சிலுவையில் தொங்கிடும் சத்தியம்

குபேரன் ஆண்ட பூமி-ராஜபக்ஸா
குடும்பத்தினர் கொள்ளையடித்துச். சூறையாட
சாரமிழந்த உப்பாகி-சப்பித் துப்பிய
கரும்புச் சக்கையாய் மாறிய எங்கள் சாமி

ரணில் ராஜபக்ஸ அரியணை அமர
கட்டவிழ்ந்த அராஜகம்-கண்டித்த சர்வதேசம்
பகைமையை பகைமையால் வெல்ல முடியாது
பகைமையை அன்பினால் வெல்லுங்கள், தர்ம நீதி

கண்ணனின் கீதை என்றும் மாறாத வேதம்
ஈழவர் வாழ்க்கை இன்றும் குருஷேத்திரம்
அருச்சுனா வில்லை எடு-அம்பைத் தொடு
இது புதிய குருஷேத்திரம்.





சீவர ஆடை போராட-செந்தீ ஆழிக்கூத்தாட
கண்ணீர்ப் புகை கண்ணீரை வரவழைக்க
கன்னியரும், இளைஞரும் களம் காண
தொடரும் மக்கள் போராட்டம்.

நாளைய தலைமுறை வாழ-இன்றைய
இளந்தலைமுறையின் அறவழிப் போராட்டம்
வெல்லுமோ சத்தியம்!-வீழுமோ அராஜகம்
நண்பா எழுந்து வா-தூங்கியது போதும்

இனவாதம், மதவாதம் பௌத்த தேரர்களின் கீதை
அதிகாரப் பகிர்வோ கண்ணி வெடிகள் நிறைந்த பாதை
பிரிவினையோ எம்மை வாட்டும் தீராத பெருவியாதி
இன ஒற்றுமையே எமை குணமாக்கும் சஞ்சீவினி



ஒன்று பட்டால் உண்டு வாழ்வு-நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவருக்கும் தாழ்வு
கூடி வாழ்ந்தால் கோடி நன்மை
பிரிவினையோ நம் அனைவருக்கும் தீமை

ஒற்றுமையே திருமந்திரம்- அதுவே
நம் உண்மைச் சுதந்திரம்
புத்தம் சரணம் கச்சாமி-தம்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி
பௌர்ணமி காலத்து வெற்று மந்திரம் சாமி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-24-08-2023*

# இன்னும் கொஞ்சம் தா தமிழா



ஓதும் பிரித் பொருளிழக்க,-உடுத்திய காவி வெளிறி நிறமிழக்க
தோகை என விரிந்த போதி வாடிச்சோர-தேசமெங்கும்
ஓங்கி ஒலித்த பௌத்த பேரினவாதம்-இனக்கலவரம் மூள
உலகெங்கும் அகதியாய் ஓடிய ஈழத் தமிழினம்.



முப்பது ஆண்டுகால தமிழ் ஈழ விடுதலை யுத்தம்
கங்கையாய் ஓடிய இரத்தம்-ஊரும், வீடும், கழனியும்
காடாய் மாறிட-அங்கவீனர், அகதி, விதவை,
அநாதை என உருவழிந்த ஈழத் தமிழினம்

உரிமை கனவானது, இடிந்த இல்லங்களும்,
எரியும் கோயில்களும்-முறிந்த பனைகளும் -யுத்தத்தின
கோரம் சொல்ல-மறைக்கப்பட்ட புதைகுழிகளுக்குள்
காணாமற் ஆக்கப்பட்ட உறவுகள் நினைவாயினர்

வெட்கிச் சீவர ஆடையும் வெளிறிட
வெள்ளரசும் துக்கித்துக் கருகிட-பிக்குகள்
கக்கிய காங்கையில் இனத்துவேஷம்
பெருமான் மொழியாத உபந்நியாசம்






மறவர் குலமே குருதி கொஞ்சம் தா
வெளிறிய சீவர ஆடை சிவக்கட்டும்-செந்தமிழ்
மாதர்குலமே கண்ணீர் கொஞ்சம் தா
வாடிய வெள்ளரசு துளிர்க்கட்டும்

கொன்றழித்த தமிழரை தீ உண்டழிக்க
வான் எழுந்த புகை காரோடு கலக்க
வான் பொழியும் மழையிலும் தமிழர் கண்ணீர்
செமண் கலந்த நீரிலும் தமிழர் செந்நீர்

சீவர ஆடை தேவதத்தர்களுக்கு வெற்று அலங்காரம்-
புத்தம், தம்மம், சங்கம் கடந்த சிங்கள பௌத்தம்
ஈழ அரசியலின் பேரினவாத அரியாசனம்,
இனவாதம் தம்மபதம் கடந்த நிதரிசனம்

வெந்து கருகியவர் போக-இன்றும்-வெஞ்சிறையில்
வாடும் அரசியல் கைதிகளும் -நொந்து,
காணாமல் ஆக்கப்பட்ட உறவுகளுக்காய்
கண்ணீர்த் தவமிருக்கும் தாய்க்குலமும் தமிழினம்




போதி மரத்தடியில் புத்தபெருமானின் தம்ம உபதேசம்
இழந்த பிள்ளைகளையும், கணவனையும் மீட்டிட
இன்றும் ஒருபிடி கடுகு பிச்சை கேட்டு தெருத் தெருவாய்
அலையும் கீதகோசமியாய் தமிழ்த் தாய்களின் பாசம்

பிடி கடுகு ஈயச் சாவில்லா வீடில்லை,
பிறந்தவர் இறப்பது இயற்கையின் நியதி
அனுபூதியில் புரிந்தவருக்கே அமைதி
உண்மை விடுதலையளிக்கும் மாறாத நீதி

இரந்திடும் தானமே தவமாக-உண்மை வரமாக-
கீதகோசமிக்கு, கருணாமூர்த்தி காட்டிய பாதை
தூய மனங்களுக்கே சத்திய தரிசனம் மாறாத கீதை

உலகெங்கும் யுத்தம்- சாரமற்ற உப்பான மதமோ
வெற்றுச் சத்தம் உன்னதங்களில் இறைவனுக்கு
மகிமையும், உலகில் நன்மனத்தவருக்கு அமைதியும்-
யுத்தம் கடந்த ஆனந்தச் சந்தம்?




என்று மடியும் எங்கள் சுதந்திர தாகம்?
என்று மடியும் எம்மவர் பிரிவினை வாதம்?
மூவேந்தர் காலத்திலும் ஒற்றுமை இல்லாத மூத்த இனம்
இயக்க மோதல்களால் சின்னா பின்னமான இனம்

சிங்களம் மூட்டிய இனவாதத் தீ, செந்தமிழரை வாட்டிய
நரகத் தீ, கண்ணீரால் அணையாத கோரத் தீ
காலவெள்ளத்தில் செந்நீர் நெய்யாக
தேசத்தை சுட்டெரித்த கோரத்தீ

**புத்தம் சரணம் கச்சாமி**
**தம்மம் சரணம் கச்சாமி**
**சங்கம் சரணம் கச்சாமி**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra- 24.-0-2023

# இறகொடிந்த பறவைக் குஞ்சுகள்

---

ஈசான மூலையில் -ஒரு ஏழைக்கிராமம்
மதியம் தாண்டிட்ட நேரம்-வானில்
மப்பும் மந்தாரமுமாய் மழைக்கோலம்

ஓலை குடிசைகளிலிருந்து கசியும் புகை வானில் கோலமிட
உறங்கிக்கிடந்த நாய் ஒன்று மெல்ல குரைத்து மீண்டும் தூங்கிட
தொலைவில் மெதுவாய் ஊர்ந்து நகர்ந்த பிக் அப் வாகனம்

பள்ளி மணி ஓசை ‘‘டாண்’’ ‘‘டாண்’’என்றொலிக்க
வெள்ளைப்புறாக்களாய் வெளிவந்த பள்ளிச்சிறார்கள்.
கதையும், பேச்சும் களை கட்ட ஒன்றாய் நடந்து
வீடு நோக்கிப் பின் பிரிந்து சென்ற உறவுகள்

ஒற்றயைடிப் பாதையில் ஒரு குழுவாய் தோழியரோடு
கதைபேசி நடைபயின்ற கூட்டம்.
சிரிப்பும், பேச்சும், கதையுமாய் ஒரே கொண்டாட்டம்

வறுமைக் காட்டில் வளர்ந்த செடிகளிலும்
வண்ணமலர்களின் தோற்றம்-
பருவம் பூத்திட பாடித்திரியும் வானம்பாடிகளாய்,
ஆடி மகிழும் கோல மயில்களாய்- பள்ளிப்புறாக்களின்
ஆட்டம் பாட்டம், ஆனந்தக் கொண்டாட்டம்

தூறலாய் தொடங்கிய மழை சற்று வலுத்துப் பெருந்துளிகளாய் விழ
ஓட்டமும் நடையுமாய் நடந்தவரைத் தாண்டி வந்து நின்ற பிக்அப் வாகனம்
சிரித்த முகத்தோடு அக்கை ஒருத்தி ‘‘வாருங்கள்
கொண்டு விடுகிறோம் அன்போடு என்றழைக்க’’
வாகனப்பயணம் காணாத ஏழைகள் முகத்தில் வற்றாத முறுவல்

அப்பாவித்தனமாய் மெல்லச் சிரிக்க சட்டென்று திறந்த கதவுகள்
பட்டென்று பள்ளிப் புறாக்களை உள்ளே தள்ளிக் கதவைச் சாத்திட
அஞ்சித்தவித்து அழகு மயில்கள் கேவிக் கரைய
ஊரைத்தாண்டி வேகமாய் பறந்த வாகனம்

புத்தகப் பைகளும்,-பாதணிகளும் -பாதையில்
தேடுவாரற்றுக் கிடக்க வெறிச்சோடிப் போன பாதை
பதறித் துடித்து. உறவுகளை கதறி அழைத்த
எஞ்சிய பிஞ்சுகள்-

தாய்களும் உறவுகளும் விம்மிக் கதறியழ
கடத்தப்பட்ட சிறுமிகளோ-
பெண் போராளிகளாய் விகாரம் பெற
கண்ணீர் மழைக்காட்டில் சிறையுண்ட கலைமான்கள்

ஆடல் மறந்திட்ட ஊன மயில்கள்
களத்தில் ஆடப் பழகின
பாடல் மறந்திட்ட ஊமைக் குயில்கள்
ஈழக் கீதம் பாடிப் பழகின

சீருடையும், இராணுவப் பயிற்சியும்
துப்பாக்கியும், சயனைட் குப்பியும்
துர்ப்பக்ாகிய சிறுமிகளுக்கு சிலுவையாக
குழந்தை இயேசுவின் தோளில் சிலுவை
தமிழ் போராளிகளே
அன்னாஸ், கைபாஸ், யூதாஸாய் மாறிய
பயங்கரவாதச் சிறுமை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-15-5-2023

# இருண்ட காலத்தின் இரத்தச் சுவடுகள்

---

ஆயுதக் கலாச்சாரத்தின் இருண்டகாலம்
கண்ணீர் மழையும், இரத்த ஆறுகளும் கரைபுரண்டோடிட
நெருப்பாற்றில் நீந்திக், கண்ணீர் மழையில் நனைந்து
உயிர் காக்க கோயில் முற்றங்களைத் தேடும் யுத்தகாலம்

இராணுவம் தமிழர்களைப் புலிகளாய் வேட்டையாடிட
இராணுவத்தை வெறிகொண்ட சிங்கமென இயக்கங்கள் சுட்டுத் தள்ளிட
மனித வெடிகுண்டுகளும், நிலக்கண்ணிகளும், கார் குண்டுகளும்
விமானத் தாக்குதல்களுமாய் வெறிகொண்டு இரத்தம் சிந்திய கொடுங்காலம்

தாய்குலம் கண்ணீர்த் தவமிருக்க
தாலிகள் -நூலாம் படைகளாய் அறுபட-
வேரறுந்து, விழுது தளர்ந்து விழுந்த குடும்பங்கள்-
நாளும் வெலிக்கடை, பூஸா நோக்கி
திருத்தல யாத்திரை செய்யும் கைதான சொந்தங்கள்

எரியும் டயர்களில் தமிழர் தகனப்பலிகளாக
மனித வெடிகுண்டுகளில்
சிங்கள தலைமைத்துவங்கள் நரபலிகளாக
விளக்கு கம்பங்களில் பிணங்களும்
வீதிகளில் சவங்களும் கிடந்திட்ட கொடுங்காலம்

அடையாள அட்டை, திடீர் சுற்றி வளைப்பு-
முகமூடிகளின் வடிகட்டல்கள், தமிழினத்தை வேட்டையாடிட
சிங்கமும், புலியும் நாட்டில் நடமாடிட நாளும் கொலைகள்,
கற்பழிப்புக்கள் கப்பங்கள், ஆட்கடத்தல்கள்
மனித மாண்பை அழித்திட்ட இருண்ட காலம்

சட்டென்று ஓயும் நாய்களின் குரைப்பொலியும்-நடுநிசியில்
பட்டென்று அணையும்-தெருவிளக்குகளும் பயமுறுத்திட
அரவமாய் ஊரும் கவசவாகனங்கள்-பாயப்
பற்றறைக்குள் பதுங்கிக்கிடக்கும் இராணுவம்

கொலைவெறி கொண்டு உயிர்பலி தேடி
மனிதம் கொன்று மனிதம் அழித்து
பிணந்தின்னிப் பேய்கள் வாழ்ந்த காலம்
உண்மை, கருணை ஒழிந்த காலம்

துப்பாக்கிகள் ஒலிக்கும் போதெல்லாம்
துர்ப்பாக்கியவதிகளின் வயிறுகள் பற்றி எரியும்
தாலிகள் அறுந்திட-தாரங்களின்
ஆடைகள் நிறம் மாறி வெளுக்கும்

தாய்மை தள்ளாடித் தீக்குளிக்க,
தந்தை மனம் ஊமையாகித் தள்ளாமை சூடும்
ஒற்றைக் குயிலாய் உள்ளம் கரையும்
இது மனிதநேயம் மடியும் காலம்.

தர்மச் சக்கரம் -அதர்மச்சேற்றில் புதைந்திட
இனவாத அரசியலோ பிரிவினையைத் தூண்டிட
மதவாதக் காவிகளும் இனவாதம் கக்கும்-வெள்ளரசை
வழிபட்ட அப்பாவிகளை துப்பாக்கிகள் வீழ்த்தும்

அடுப்பெரியாத வீடுகளில்- அன்னையர் வயிறுகள் எரியும்
மழை பெய்யாத ஊர்களில் கண்ணீர் வெள்ளமிடும்
இழவுகாணாத இளைய தலைமுறை இளந்தளிரில் கருகி-
இல்லங்களில்'' மாலை சூட்டிய படங்களாய்த்'' தொங்கும்

நம்பமுடியாத் கதையாய் ஊரும், உறவுகளும்
நள்ளிரவில் காணாமல் போகும்
விமான தாக்குதல்களால்
கோயில்களும், குடியிருப்பும் தீக்குளிக்கும்

கப்பம், ஆட்கடத்தல், கொலை, காட்டிக்கொடுப்பு, இயக்கமோதல்,
''பிள்ளை பிடித்தல்'', தடுப்புக் காவல், கைதாகிக் காணாமற்போதல்
பாலியல் வன்முறை, குண்டு வெடிப்பு அழுகை. கண்ணீர் ஒப்பாரி
அகதி, வறுமை, விபச்சாரம், கள்ளச் சாரயம்-
மனிதம் அழிந்து இறை நம்பிக்கை குலைய
சட்டம் ஒழுங்கு சீர்கெட அதர்மம் ஆண்ட கலிகாலம்.

சிலுவைகளில் அப்பாவிகள் தொங்கிட
அறைந்தவரும், அறையப்பட்டவரும்
சகோதரரான- காயீன் ஆபேல் காலம்

அரசமரத்தில் அடைக்கலம் தேடிய வெள்ளைப் புறா
குண்டடிபட்டு வீழ்ந்திட-
ஒலிவமரத்தில் சிலுவை செய்யும் பயங்கரவாதம் ஓங்கிட
அதர்மம் அரசோட்சும் அராஜக காலம்
ஆயுதக் கலாச்சாரம் நீதி தேவதையான அந்தக யுகம்

மாரியோ ஊருக்கு மழைக்காலம்
அன்னையர், தங்கையர் விழிகளிலோ
என்றும் மாறாத கண்ணீர்க் கோலம்

குஞ்சுகளைக் கவ்விச் சென்ற பருந்தை எண்ணி
தாய்குலம் கோழிகளாய் சோகத்தை,
அடைகாத்திடும் தபசு காலம்.

என் தேவனே என் தேவனே- ஏன் எம்மை கைநெகிழ்ந்தீர்?
இறைமகன் கதறும் துயரக்காலம்

இளந்தளிர்கள் சிறையில் வாடிச்சிதைய
இளந்தாய்கள் கைமையால் சீரழிய-
வேண்டாத வரமாய் இல்லந்தேடிவரும் இழவு
ஒப்பாரியும், புலம்பலும் இனம், மொழி, மதம் கடந்த உறவு

கொடுங்கோல் ஆட்சி அரியணை அமர்ந்திட
தேசமெங்கும் காட்டுத் தீயாய்க் கொடிய யுத்தம்
அப்பாவி ஆபேலின் இரத்தம் இறைவனை கூவி களைக்க
கங்கையாய் பாயும் இரத்தம்

சுதந்திர தின விழாவில் இராணுவத்தின் போர்க்கோலம்
மாவீரர் தினத்தில் போராளிகளின் புரட்சிக்கோலம்
அன்னையர், தங்கையர் கண்களிலோ கண்ணீர்கோலம்
அகதி, அங்கவினரோ ஆண்டிக்கோலம்

முள்ளான நெஞ்சங்களில் மலர்களுக்கும் பஞ்சம்
பேரினவாதமோ, இனவாதத்திடம் தஞ்சம்
நீதிக்கும், அமைதிக்கும், இன ஒற்றுமைக்கும்
நிலையான தீர்வின்றி நாளும் அச்சம்

அமைதி கண்டவர் அரசமர நிழலில் அமர்ந்திட
சத்தியத்தின் சாட்சியம் சிலுவையில் தொங்கிட
சத்தியத்தின் பாதையோ- தேடுவாரற்று
உருவழிந்து காடாகிப்போனது-அமைதியோ
முடவனுக்கு எட்டாத மலைத் தேனானது

**தர்மம் வெல்ல-இது குருஷேத்திர யுத்த மல்ல**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-15-05-2023

# இருண்ட நீதி

---

பேரினவாதமும், பயங்கரவாதமும் ஈழத்தை ஆக்கிரமித்த கொடும் காலம்
வானிலே போர் முகில்கள் சூழ, மண்ணிலே குருதிக்கங்கைகள் பெருகியோட
தாய் குலத்தின் கண்ணீரும் ஒப்பாரியும் வானைத் தொட்ட நேரம்
வசந்தம் உலாவிய தேசத்தில் பாலையின் கொடுவெப்பம்
அமைதிப் புறாக்களின் சரணாலயத்தில் சிங்கம், புலிகளின் அட்டகாசம்

புனித அந்தோனியாரை வணங்கியபோது-வாழ்த்தாய்
வீழ்ந்த செவ்விரத்தை மலர் மனதை அச்சுறுத்த
தேவதாயின் ஆனந்த முகத்தில் வருத்தம் படர்ந்து
வரும் ஆபத்தை முன்னறிவிக்க வாடிய நெஞ்சம்-
இறைவனிடம் கோரியதோ தஞ்சம்

மதிய உணவிற்காய் வீடு வந்தவனை வரவேற்ற-பதிவுத்தபால்
அறியாத இடத்திலிருந்து அறிமுகமில்லாத மனிதன் அனுப்பிய
விடுதலைப் புலிகளின் அபாய அழைப்பிதழ்

வந்து சந்திக்கவும், வராது உதாசீனம் செய்தால்
முடிவு வருத்தமளிக்கும், அழைப்பிதழே அச்சுறுத்தலாக
ஆயுதமே ஆட்சி மொழியானவரோடு உரையாட
அஞ்சுவ தஞ்சாமை பேதமை அறிவுறுத்த
துஞ்சுதல் ஒருமுறைதான் துணிந்து செல் என்ற நெஞ்சம்

அதிகாலையில் ஆலயம் சென்று-ஆண்டவனைத் தொழுது
வீடு வந்து தேனீர் அருந்தக்-கைநழுவி
விழுந்து சிதறிய தேனீர்க் கோப்பை-மனதிலோ
ஜெஸ்தமனியில் இயேசு பட்ட மரண அவஸ்தை

செல்லும் இடத்தை தாயிடம் சொல்லி
வரத்தாமதித்தால்-அஞ்சவேண்டாம்
பதறவேண்டாம்-எல்லாம் அவன் செயல்
என்றே-நண்பனோடு சென்ற பயணம்

இருள் கவிந்த அறையில் திகிலும், தீமையும் சூழ்ந்திருக்க
கம்சனாய் இயக்கத்தை ஆண்டவன் -கண்டதும்
கோபத்தால் கொதித்து சிறையிலிடுங்கள்
விடுதலைப் போராட்டத்தை கொச்சைப்படுத்தியவனை
அச்சம் அறியாதவர் அறிந்திட-வழங்கிடும்
கொடுந்தண்டணை இது என்றான்

ஒரு ஓலைக் குடிசை-என் சிறையாக-வீட்டுத் தலைவி,
ஏழைக் கைம்பெண்ணோ, வசைமாறி-ஆயதவாதிகளைச் சாடி
என்னைப் பார்த்து பரிதாபத்துடன்-"அஞ்சாதே மகனே
அன்பும், இரக்கமும் அறியாத அரக்கர் கூட்டம் இது"
-
பாதை மாறிய விடுதலைப்போராட்டம்
பயங்கரவாதமாய் உருமாறி
சொந்த இனத்தை சூறையாடிய காலமது.

களிமண் குடிசையில் குடியிருந்த மகளும், மருமகனும்
என்னை வேதனையோடு வரவேற்க-விருந்தாய்
விறாந்தையில்-விரித்த பாயில் நானும்-வெளி முற்றத்தில்-
அவர்களும் வாழ்ந்த கொடுங்காலமது.

மாலையில் வந்த ஆயுதவாதிகள் தூக்கி எறிந்த சாரம்
உடை மாற்றி ஓய்வெடு கேலியோடு சொல்லிச் சிரிக்க
நான் கலங்க- என் அன்னையோ இறைவனை வேண்டி
கண்ணீர் தவமிருந்த இரு இராப்பொழுதுகள்

மலசலம் கழிக்க-ஒதுக்கிடம் இன்றி-மெய் வருந்தக்
பக்கத்து வீட்டில் நீராடச் செல்ல-ஆயுதவாதிகளின்
அராஜகத்தை பழித்துச் சிறையிருந்து -கப்பம் செலுத்தி மீண்ட
பலரின் பரிதாபக் கதையைக் கேட்டுத் துவண்ட மனம்.

மூன்றாம் நாள் காலையில்-காலையுணவாய்-பழைய
செய்தித்தாளில் சுற்றிய பான்-நான் விரித்துப் படிக்க
"உண்மை உனக்கு விடுதலை அளிக்கும்"
வாக்கியம் ஆச்சரியம் தர-உணவு தந்த தாயோ
"மகனே யாரும் உன்னைப் பார்க்க வராவிட்டால்
பாதகர் உன்னை விடுதலை செய்ய மாட்டார்"
இயலாமையோடு உரைத்து விம்மினார்

என் அம்மைக்கோ வயது எழுபத்தி மூன்று-விதவை
இதய நோயாளி எப்படி வருவார் என நான் உரைக்க
ஓசையின்றி மனம் அழ -செய்ய ஏதுமின்றி உறங்கியவன்
விழித்திட-அருகே உட்கார்ந்திருந்த நண்பன்

நான் புலிகளோடு பேசியுள்ளேன் ஐந்து இலட்சம் அபராதம்
வாரும் கதைக்கலாம்-ஏழை எம்மிடம் அத்துனை பணம் ஏது?
எல்லாக் கேள்விகளையும் புறந்தள்ளி
"ஒரு இலட்சம் தந்தால் விடுதலை"
"ஒப்பமிடு-இல்லையேல் சிறையிரு" -பதிலானது

வழியின்றி-வன்முறைக்கு பயந்து கையொப்பமிட்டு
பாதை கடந்து மறுகரை சேர, மனம் சோர்ந்து
விழிகள் அலைபாய , விழிநீர் வடிய-பயணிகள் ஓய்விடத்தில்
சுவரை வெறித்துப் பார்த்து இறைவனை வேண்டி
கண்ணீர் தவமிருக்கும் தாய்

“அம்மா” எனக் கதறிய மகன்
“மகனே என் மகனே” என அழுத தாய்
தாயும் சேயும் சந்தித்த போது
கண்ணீரைத் தவிர கதைக்க ஏதுமில்லை.

கட்டியணைத்து என்னை முத்தமிட்ட தாயின் மெய்யில்
முதுமை கூடிய அவலம் கண்ணில் நீரை வரவழைக்க,
பயணிக்க வாகனமில்லாப் பாதையில் மோட்டார் சைக்கிளில்
பயணித்து வந்தவர் காலை சிலிண்டர் சுட்ட கொடூரம்

நாமழக் காவலில் நின்ற விசேட அதிரடிப்படை வீரன்
விரைந்து வந்து என்ன ஏது என்று விசாரிக்க-
சொல்ல முடியாத கதையை, சொல்லாமல் புரிந்து
சோகத்தில் வாடியவன், அம்மா பத்திரம் கவனமாய்
வீடு போய் சேருங்கள் என்ற நல்ல சமாரித்தன்

கப்பப் பணம் செலுத்தி, நன்கொடையெனப் பற்றுச் சீட்டு வழங்கி
கணக்கை முடித்த வேசித்தனம்.-விடுதலைப் பாதையெல்லாம்
பயங்கரவாதத்தின் கொடுமை, அப்பாவிகளின் கண்ணீர்
அநாதை, விதவைகளின் புலம்பல் மாறாத சிறுமை

மனித உரிமையும்- மானிட மாண்பும் துன்புற
நேசித்த தமிழ் மக்களை அச்சுறுத்தி ஆண்ட ஆயுதவாதிகள்
சிங்கள பேரினவாதிகளிலும் இழிந்த பயங்கரவாதிகள்

அன்புருவாகி தம்முயிர் ஈந்தவரை இறைமகனாய்
உலகம் போற்றி வணங்கிட
தமிழ் ஈழத்தின் மீட்பராய் வந்த விடுதலைப் போராளிகள்
பாதை மாறிய பயணத்தில் உருமாறிய பயங்கரவாதிகள்

**சத்தியமே வெல்லும்- என்றுமுள்ள தர்மத்தின் நீதி**
**காலம் சொல்லிய என்றுமே மாறாத நியதி**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-25-5-2023

# இறுதிக்கட்ட யுத்தம்

---

ஈழ விடுதலையின் இறுதிக் கட்ட யுத்தத்தில்
ஊர்களும், உறவுகளும் ஒன்றாய்த் தீக்குளிக்க-ஆறாய்
ஓடும் குருதியும், ஒழுகும் கண்ணீரும் சோகம் சொல்ல
இறைவனை கூவி கேவிக்கரையும் மனம்
எல்லாம் மாயையான தினம்.

காயாத கண்ணீரும், குருதியும் உறவாக
சோகத் தீ அணைக்க வழியின்றி திகைக்க
காடாய் போன வீடு
கண்ணி வெடிக்காடாய் கழனி

ஏழை, அகதி, அங்கவீனர்,
விதவை, அநாதை என யுத்தம் படைத்த
தமிழ் ஈழத்தின் புதிய சந்ததி
தமிழ் ஈழமோ கனவாய்போன சங்கதி

தணல் ஆறுமுன், குண்டுச் சத்தங்கள் ஓயுமுன்
மாலையிட்ட படங்களாய் மாறிட்ட உறவுகள்
கண்ணீர் மாலை தொடுக்கும் நிகழ்வுகள்

ஏற்றி வைத்த தீபங்கள் காற்றில் அல்லாட
ஒப்பாரி, புலம்பல் ஓயாது கேட்டிட
புதைந்து மறைந்து எரிந்து சாம்பலான உடலங்கள்
மறைக்கப்பட்ட மனித உரிமை மீறல்கள்

காணாமல் ஆக்கப்பட்ட எண்ணற்ற சொந்தங்களுக்காய்
கண்ணீர்த் தவமிருந்து நீதி கேட்கும் உறவுகள்,
விடுதலையின்றி வாடும் அரசியல் கைதிகள்-பிரித் ஓதி
சில் எடுத்து, நாட்டை ஆளும் ஆளும் பேரினவாதிகள்

கொலைகள் என ஏதுமில்லை, கொல்வதெல்லாம் வெல்வதற்கே
இரத்த வெறியரின் யுத்த கோஷங்கள், கொலையாளி
என யாருமில்லை போராளிகளும், சிப்பாய்களும் மா வீரர்
என்ற பொய்மைகள், உலகை ஏமாற்றிடும் கயமைகள்

இனவாத, மதவாத, மொழிவாத மனநோயாளிகள்
மலிந்த உலகில் உண்மையை தேடுவோர் யாருமிலர்
ஆயுதப்புரட்சி எல்லாம் அழிவில் முடிய-தூய மனத்திற்கே
சத்திய தரிசனம், நல்மனத்தவருக்கே அமைதி

யுத்தங்கள் சாதித்தது ஏதுமில்லை மகாத்மாவை,
மார்ட்டின் லூாதரைக் கொன்றும் தீராத இன, மத வெறி,
மண்ணோடு மண்ணாய்போன மகா அசோகரும்,
அலெக்ஸாண்டரும், சீஸரும் வென்ற சாம்ராஜியங்கள்

புத்தர் பெருமானோ தியானத்தில்-பெருமான்
இயேசுவோ சிலுவையில்-கண்ணனோ குருஷேத்திரத்தில்
மோஸேயும், நபியும் போர்க்களத்தில்.
மனம் மாறிய அசோகரோ தம்மத்தில்

அமைதி வெறும் கனவு நிஜமோ?
ஆயுதம்தான் அன்றும், இன்றும் என்றும்
பலம் என்பது மானுடப் பலவீனமோ?

மண்மீது கொண்ட மகத்தான காதலும்,
தமிழ் மீது கொண்ட பக்தியும் மடிந்து மண்ணாகுமோ?
ஊரும், உறவும் அழிந்திட சோகம் சொந்தமாக,
தமிழ ஈழம் கலைந்த கனவோ?
நாளை நிஜமாகும் நனவா? காலமே நீ சொல்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28-07-2023*

# எதை இழந்தோம் ?

---

உயிரைக் கொடுத்து, உயிரைப் பறித்து, உடைமையை எரித்து,
ஊர்களை அழித்து, அகதி, விதவை, அங்கவீனரைப் படைத்து
நடத்திய யுத்தம் கயிறறுந்த பட்டம், கல்லில் எழுதிய
எழுத்தா? கடலில் வீசிய முத்தா? நாம் கற்ற பாடம்

அமைதியைப் பறித்து-அழுகையைக் கொடுத்து
குண்டு மழையும், குருதிப் புனலும் மண்ணைச் சிவப்பாக்க
வென்றவர் யாருமிலர், வீழ்ந்தவருக்காய் அழ-எஞ்சிய
சொந்தங்களோ அகதிகளாய்ச் சிலர்

ஊர் அழிந்து பாழ்பட-தாலியறுந்து விதவையாக
பெற்றோர் இழந்து அநாதையாக
சொத்திழந்து ஏழையாக, நாடிழந்து அகதியாக
அங்கமிழந்து ஊனமாக ஈழவர் வாழ்வு

விடியலுக்காய் கூவிய சேவலும்
குண்டு மழையில் மாண்டு போனது
மடிந்து உறங்கிய மாவீரர் துயிலிடமும்
வெறும் மண்மேடாய் ஆனது

புல்லில் உறங்கும் பனியும், கல்லில் உறங்கிய தேரையும்
குருதியில் குளித்து சிவந்திட, அமைதிப் புறா பறந்தோடிட
மண்ணிழந்து அகதியாக-மாண்பிழந்து அடிமையாக-
நட்பிழந்து பகைவராக மனிதமிழந்த போராட்டம்.

குருதியும் சிவப்பு, குமுறும் எரிமலைக் குழம்பும் சிவப்பு
எரியும் நெருப்பும் சிவப்பு-ஆறாத எம் நெஞ்சத்து
காயமும் சிவப்பு-ஈழத் தமிழர் வாழ்வோ
ஏழ்கடல் உப்பிலும் கசப்பு, இதற்கு நாமே பொறுப்பு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28.07.2023

# எத்தனை கொடிகள் எமக்கு

---

இனவாதம், மதவாதம் அரசியலை ஆட்டுவிக்க
தேசிய ஒற்றுமைக்காய் குரல் கொடுக்க
ஜனநாயகவாதியாய் யாருமில்லை-இன
மதவாதிகளுக்கோ-கொஞ்சமும் பஞ்சமில்லை

சுந்தரச் சூரியனைக் கொடியில் பொறித்தும்
தமிழர் வாழ்வில் ஒற்றுமையின் விடியலில்லை
வீட்டு கொடி பறந்தும்- தமிழ்
அகதிகள் வாழ்வில் மாற்றமில்லை

வீணை கொடி பிடித்து வீழ்ந்தவரும்
விபீஷணனாய் வீழ்தியவரும் தமிழர்களே
நட்சத்திர கொடி பிடித்தும்-
நமக்கோர் தேசமில்லை.

புலிக்கொடி பறந்தும்-அமைதியில்லை
தமிழ் ஈழக் கொடி ஏற்றியும் உலக அங்கீகாரமில்லை
விழிகளில் நிரந்தரமாய் கண்ணீர்க் கொடி பறக்க
விடியலுக்காய் தவமிருக்கும் ஏழைகள் நாம்

மாறிடும் கொடிகளால் தமிழர்க்கு விடிவில்லை
அறுப்புண்ட தொப்பிள் கொடிகளுக்கும்
தாலிக் கொடிகளுக்கும் கணக்கில்லை

பிரிவினையை ஏற்றிய கொடிகள் சொல்ல, விடியலின்றி,
வீடின்றி, ஏரின்றி, வீணையின் இனிய நாதமின்றி,
ஈழ வானில் நட்சத்திரமின்றி-புலி வீரமின்றி
ஒற்றுமை குன்றி வீழ்ந்திட்ட தமிழினம்

அகதிகளான ஈழத் தமிழருக்கு, அயல் நாட்டிலும்
பல கட்சிக்கொடிகள்-நமக்கெதிரி
நாமன்றி வேறு எவருமில்லை-தமிழா
சேர, சோழ, பாண்டியர் வரலாறு அறிந்தும்
ஒற்றுமையின்றி வாழ்வதேனோ ?
நம் வாழ்வும் என்றும் இப்படித்தானோ?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-25-5-2023*

# குருஷேத்திரமல்ல இது கொலைக் களம்

கூகையும், கேட்டானும் அலறிப் புடைத்து எழுந்து பறக்க,
நாகம் படமொடுங்க, நச்சரவங்களும் நடுங்கிக் குழியொடுங்க,
உறங்கிக் கிடந்த காக்கை கூட்டம்-உறக்கம் கலைந்திட
அச்சத்தில் கரைந்து அறியாத் திசை நோக்கிப் பறந்தது

வெட்டும் மின்னலும், வீசும் காற்றும்
கொட்டும் இடியும், சோவெனப் பெய்யும் மழையும்
ஊழிக்காலத்த உணர்த்திட
பார்வையிழந்த தெருவிளக்குகள் -பயத்தில்
வாலை ஒடுக்கி, வாயை மூடிச் சிறுநீர் ஒழுக,
உறங்குவதுபோல் நடித்த தெருநாய்கள்

அலையலையாய்ப் பதுங்கி வரும் விடுதலைப் புலிகள்
தெருக்களிலும் நாற்சந்திகளிலும் வியூகம் வகுத்திட,
பயப்பிராந்தியில் நடுங்கித் தவித்து, மது போதையில்
மயங்கிக் கிடந்த தமிழ்த் தேசிய இராணுவம்

சுற்றி வந்த ரோந்து வாகனங்களும்
இனம் புரியாத அச்சத்தால் மயங்கிச் சோர-திடீரென
இடியை மிஞ்சும் வெடிச் சத்தங்கள்-மின்னி
மழையெனப் பொழியும் துப்பாக்கி வேட்டுக்கள்

ரோந்து வாகனங்கள் வெடித்துச் சிதறிட
வானிலே தீ மழை, காவலரன்கள் சிதைந்து அழிந்திட
கோரமாய்ச் சிதறி வீழ்ந்த போராளிகள்?

திசை மாறிப் பகை வளர்த்துப் பதவி நாடிய ஈழப்போரளிகள்,
புலிகளுக்கு வசைமாறிப் பொழிந்து-கொள்கை பிறழ்ந்து
வல்ல இந்தியருக்கு கூலிப் படையாகிட-
ஒன்று பட்டால் உண்டு வாழ்வு- ஒற்றுமை
நீங்கில் அனைவருக்கும் தாழ்வு-நிதரிசனமானது

பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினாலே தணிக்க முடியும் -
உண்மையை மறந்து பகைமையைப்
பகைமையால் வெல்லப்-பகைவனுக்குப்
பகைவன் நண்பன் யுத்த தந்திரமாகிட
உறவுகளுக்கிடையே ஓயாத போராட்டம்
நாளும் வற்றாத கண்ணீர்க், குருதி நீரோட்டம்

புள்ளினத்தின் பூபாளம் இன்றி -பூவினம்
காலைப் பனியில் கண்ணீர் துடைத்திட
விடிந்த காலைப் பொழுது

குனிந்த தலையும், கலங்கிய விழிகளுமாய்க்–கைகள்
பின்புறம் கட்டப்பட்ட நிலையில் -கைதிகளாய்
உயிர்ப் பிச்சை கேட்டு மன்றாடி நின்ற
தமிழ்த் தேசிய இராணுவம்

ஊரும், தெருவும், வானும் வெறிச்சோடிக் கிடக்க
மண்ணின் விடாய் தணிக்க மழை தூவித் தவிக்க,
கண்களும், கைகளும் கட்டப்பட்ட கைதிகள்
கபாலம் துளைத்திடக் காலனுக்கு நரபலியாக
சூனியமான வாழ்வில் மரணம் சுதந்திரமானது

கூப்பிய கரங்கள் இரக்கத்தை இரைஞ்சிட
கூம்பிய விழிகளில் கசிந்த கண்ணீர் இறைவனை வேண்டிட
விடியாத இரவாய் மாறிய பொழுது-விடுதலைப்
போராளியின் வாழ்வோ கலைந்த பகல் கனவு

அஞ்சிய நெஞ்சம் வாய் குழறி அன்னையையும்,
ஆண்டவனையும் அலறி அழைக்க-
கெஞ்சியும் இரக்கமோ எட்டாத வானில் உலவும் நிலவு
துஞ்சிடக் கபாலம் துளைத்த குண்டும் உறவு

கண்களும், கைகளும் கட்டப்பட்ட கைதிகள்
விண்காண இனி ஒரு நாளில்லை-மண்ணிற்காய்
ஏற்ற வாழ்வு- மண்ணின் விடுதலையின்றி
மண்ணிற்கே உரமாக கொடிய சாவு

ஈழத்தாயும் கண்ணீர் வடிக்க-எங்கோ
ஏங்கித் தவிக்கும் பெற்றவள் வயிறும் பதறித்துடிக்க,
மண்ணில் அநாதைப் பிணமாய்க் கிடக்கிறான்
அன்று நிமிர்ந்த நெஞ்சும், நேரிய பார்வையுமாய்
ஈழ விடுதலைக்காய் களம்போன முன்னாள் மறவன்

அச்சம் துறந்து, ஆயுதம் ஏந்தி-அஞ்சாமையோடு
விடமாலை சூடிக் களமாடும் விடுதலைப் புலிகள்
சத்தியமும், சர்வதேசமும் மனம் நொந்திட
சகோதரரைச் சுட்டழித்த கொடுமை
யுத்தக் குற்றமான வன்முறை

வடிந்த குருதி மண்ணைத் தொட்டுப்
பாவ மன்னிப்பு வேண்டிட- களையெடுப்பான
தமிழ் ஈழ விடுதலைப் போராட்டம்
களங்கமுற்றுத் திசைமாறி உருமாறிய பயங்கரவாதம்

உயிர் குடிக்க உடலைத் துளைத்த குண்டுகளும் நாணித் தயங்கின-
இது நம் உடன் பிறப்பென்று -ஈழக் கனவை மறுதலித்த குருதியில்
மது நாற்றம் மணக்க -மனம் கசந்து, உயிர் குடித்த குண்டுகளும்
மயங்கின மதுபோதையில் இன்று

கண்ணீர் பெருகத் தமிழ் மூதாட்டி ஒருத்தி
தலைமாட்டில் குந்தியிருந்து-பிணம்
மொய்க்கும் ஈக்களை கைகளால் விரட்டி
மாய்ந்து மனம் நொந்து அழுகின்றார்.

பிணவாடை வயிற்றைக் குமட்டி வாந்தியை வரவழைக்க,
மன்னன் அசோகரை மனம்மாற்றிய
கலிங்கத்துப்போரை மனம் நினைத்துப் பார்த்திட
பிணங்கள் நடுவே நடந்து பார்த்தேன் பிரக்ஞ்சை ஒளிபெற.
கொடிது கொடிது யுத்தம் கொடிது.

நரிகளும், பேய்களும் உலவும் நடுக்காட்டில்,
சுற்றி நின்று அழ ஒரு சொந்தமின்றி, சொட்டு கண்ணீரின்றி
மலர் மாலையின்றி, மணி விளக்கின்றி உடல்கள் புதைய
புழுதியில் பிறந்தவர் புழுதியில் புதைந்தார்.

யுத்தத்தின் அகோர சத்தத்தில்
அழுகையும், கண்ணீரும் அநாதையானது,
ஆறாய் இரத்தம் ஓடிட, குன்றாய்ப் பிணங்கள் குவிந்திட
மறவராய் ஆயுதம் ஏந்தியவர்
கொடியவராய்த், துரோகிகளாய் மாண்டிட,
ஆயதவாதிகளின் கரங்களில் அழியாத இரத்தக்கறை
அப்பாவிகள் முகங்களில் கண்ணீர்க் கறை

**இது குருஷேத்திரமல்ல கொலைக் களம்!**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30-04-2023

# கங்கை முதல் ஈழம்வரை

---

கங்கையும்  கடாரமும் வென்று வாழ்ந்த தமிழனுக்கு
உண்டென்று இன்று சொல்ல உலகில் ஒரு நாடில்லை.
ஈழத்தில் அவன் உரிமை என்று இன்று சொல்ல
அடிமை என்ற நிலை தவிர்த்து வேறு நிலையேதுமில்லை.

நன்றோ தமிழா? நாடுகள் வென்ற வாழ்ந்த தமிழா
உண்டென்று நீ சொல்ல-உலகில் ஒரு நாடு கொள்ள
வெறிகொள் புலியே-நெஞ்சில்
சுதந்திர விடாய் கொள் தமிழே

எம் முன்னோர் பெருமை பழங்கதையாகுமோ?
மானம் பெரிதென்ற எம் நிலைமை
என்றும் பழிக்காளாகுமே?

ஆண்ட பரம்பரை அடிபணிந்து தொழுது வாழ்வதோ?-
நெஞ்சில் மூட்டிய சுதந்திரக் கனலும்
அடிமை விலங்கை உடைக்கும் முன்னர்
அச்ச இருளில் அணைந்து போவதோ?

அக்கினி ஆற்றில்- தமிழா உன் விடுதலைப் பயணம்.
எரிமலைத் தீக்குழம்பு நெஞ்சில் நீ பூசிடச் சந்தனம்,
விடமாலை உன் கழுத்திற்கு வாடாப் பூமாலை
ஆயுதமோ சூலமாகிட ஆடும் நடனமோ ருத்திரதாண்டவம்

அடக்கு முறையின் அராஜக வடிவங்களுக்கோ
என்றும் நீ நடமாடும்  வெடிகுண்டு
அமைதி தேடும் வெண்புறாவிற்கோ-நீ
அடைக்கலம் தரும் ஒலிவ மரம்

உன் ஈகைச் சுடரில் தமிழ் ஈழம் ஒளிரட்டும்
உன் வாகைப் பூமாலையால்
ஆண்டபரம்பரை அரியாசனம் அமரட்டும்.
புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம் தாரக மந்திரம்-
உண்மை, அன்பு, கருணை மனிதனை
மனிதனாய் வாழவைக்கும் வேதமாகட்டும்

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***

*Pax Ravichandra-3.4.2023*

# ஞான மனிதர்கள்

---

ஆற்றோடுபோவதற்கு  நாமொன்றும் மரக்கட்டையல்ல
காற்றோடுபோவதற்கு நாமொன்றும் காய்ந்த சருகுமல்ல
தீயுண்டு சாம்பலாகிட நாமொன்றும் குப்பையுமல்ல
மண்ணுள் புதையுண்டுபோவதற்கு
நாமொன்றும் மண்ணாங்கட்டியுமல்ல

ஞான மனிதர்கள் நாங்கள்
மண்ணில் விழுந்தாலும்-மழையாய் வளமூட்டி
விதையாய் முளைத்தெழுவோம்
காற்றில் கலந்தாலும் தென்றலாய்க களிப்பூட்டி
பூவாசமாய் மணமூட்டுவோம்

நதிபோல் கடலில் கலந்தாலும்
கடல் அலையாய் கூத்தாடுவோம்
தீயோடு கலந்தாலும் குளிரில் அனல் கூட்டி
ஒளியாய் மகிழ்வூட்டுவோம்
எமக்கு மரணமில்லை

## வாழ்வு-

சித்தம் நினைப்பு செய்கையெல்லாம் இருளாகிட
புரிந்த யுத்தங்கள்தான் எத்தனை?
கடலும் மண்ணும் சிவப்பாக்கிட
சிந்திய இரத்தம்தான் எத்தனை?

நித்தமும் உறவுகள் கண்ணீரில் வாழ்ந்திட
நினைவுகளோ மீளாத சோகத்தை மீட்டிட
சொந்த பந்தங்கள் அகாலமாய்க் கண் மறைந்திட
அநாதைகளாய், அகதிகளாய், விதவைகளாய்
அங்கவீனராய் எம் வாழ்வு
நாதியற்ற அநாதையாய் எம் சாவு

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# ஞானப் பயணம்

உள்ளம் குமுற, உருகி எரியும் டயரில் காதல் கருக
வெள்ளமாய் வடிந்த கண்ணீரைத் துடைத்து
விடமாலை சூடிய வனிதை-நடமாடும் வெடிகுண்டாய்
தன்னை உருமாற்றிய விடுதலைப் பறவை

காத்தான் தாள்பணிந்து காலமெல்லாம்
மூத்தான் படைப்பிற்குத் தொண்டாற்றி,
நீத்தார் உயிரெல்லாம் நினைவில் -பூத்த
புத்தம் புதுமலராய் வாழுமே நாளும்

முன்சென்றார் அண்ணண்மார் மடிந்திட்டார்
பின் செல்வாய் கண்ணே களம்நோக்கி,
விண்சென்றாயினும் வென்று வாவென்ற-தாய்
என்றும் சரிதையில் குன்றா இளமை

சிறைப்பட்டு சித்திரவதைப்பட்டு-செந்தணலில்
வெந்தாலும் என்னுயிர் என் தமிழை மறவாது
வான்மதியும், ஏழ்திரைக் கடலும் வாழும்வரை
சுதந்திரம் எம் உரிமை என்றே முழங்கும்

பயங்கரவாதச் சட்டமும், அவசரகாலச் சட்டமும்
அடக்குமுறையும், சுற்றிவளைப்பும்,
சோதனைச் சாவடிகளும்,-ஏனென்று
ஈழத் தமிழா பகுத்தறிவால் ஆய்ந்துபார்

குண்டு கொத்திய காதலன் மார்பில் குருதிப்பூ பூத்திருக்க
குவளை விழிகள் நீர் சிந்திச் சிவந்திருக்க
மெய்விட்டு உயிர்மூச்சு இருப்பதா போவதாவென மருகிநற்க
கொய்யாமற் கொய்தணைத்தாள் புதுவாழ்வைக் கோதை

கார்கூந்தல் அமர்ந்து களித்திருந்த மல்லிகையே
ஆர்செய்த வஞ்சத்தால் அல்லலுற்றாய்
போர்முனையில் புகழ் சூடி பூச்சூடவரும்-புலியன்
மார்பில் பூச் சூட தானில்லை என்றோ?

பூத்தாள் பூவை பெண் புலியெனச் சீறிச் சினந்தாள்
தமிழர் விடுதலை உணர்வைக் காத்தாள்
தன்னுடல் சிதறிடச் சாவைச் சாய்த்த
பூவை மேலெத்தனை குருதிப் பூ

யாழினிது குழழினிது மழழை மொழியினிது
குமுத வாயில் அமுது சொட்ட செப்பும்-காதல் இனிது,
தாயின் தாலாட்டினிது இனிதிலும் இனிதே
வேங்கை கரம் நின்று கர்ச்சிக்கும் விடுதலை வேட்டின் ஒலி

மண்ணெங்கும் நிலக்கண்ணி, மாநீர்ப்பரப்பெங்கும் கடற்கண்ணி
விண்ணெங்கும் ஏவுகணை, வீசும் தென்றலிலோ காலன் கணை
சேல்விழியே கலங்காதே-செந்தமிழர் இழிநிலை கண்டு மயங்காதே
வெல்லுந் திராவிடத்தை வேரூண்ற என் உடலெங்கும் வெடிகுண்டு

காயங்கள் ஆறவில்லை கண்ணீர் மழை ஓயவில்லை
மாய்ந்தவர் தொகையும் எண்ணிலடங்கவில்லை-அழுது
ஓயாதவர் வாழ்வோ கண்ணீரில் மூழ்கும் நிலை
எஞ்சியவரும் அஞ்சி அடிமையாய் வாழும் நிலையோ
நெஞ்சில் இட்ட நெருப்பு.

விடமாலை சூடி களமாடும் மாவீரரை-அடக்கிட
இந்திய அமைதிகாக்கும் படை முனைந்த சேதி கேட்டு
அஞ்சித் தழிழ் ஈழவன்னை கண்ணீர் சிந்திய நிலை
நெஞ்சிலே இட்ட பெருநெருப்பு

தீயுண்ணும் தமிழனின் தேகவாசம் நாசிக்குப் புரியவில்லை
மாவீரரை வேட்டையாடும் வெறியோசை கேட்கவில்லை
இன்று பேயுண்ணப் பெருவிருந்து யாரென்று தெரியவில்லை
தென்றலே, தீயுண்டு, நாயுண்டு, பேயுண்டு மீந்த மீதியை
நீயுண்ணவோ வந்தாய் செப்பு

வாட்டிடும் வறுமையினை வாட்டிட வளர்த்த மகனை,
ஊட்டிய தாய்ப்பாலினும் தமிழ்ப் பற்றை
ஊட்டி வளர்த்த ஒரே செல்வனை
ஈழத் தமிழ் அன்னைக்குப் பூட்டிய விலங்கொடிக்க
புயலென எழுந்தது புலிப்படை எனக்கேட்டதும்
போர்முனைக்கே தன்மகனை வார்த்த சேதி-
செவி தொட்டாலும் தோன்றும் சுகம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
*Pax Ravichandra-27.3.2023*

# விடுதலை

விடுதலைக்காய் ஏந்திய துப்பாக்கிகளே
தமிழ் தலைவர்களை படுகொலைகள் புரிந்தன
ஆயுதமோதல்களால் விடுதலை இயங்கங்களே
தம்முள் போரிட்டு அழிந்தன



உலகெங்கும் அகதிகளாய் தமிழன் நிலை
நாதியற்ற தமிழனுக்காய் குரல் கொடுக்க
யாருமற்ற நிலை? தர்மம், நீதி கேள்வியான நிலை,
தாய்க்குலமோ கண்ணீர்த் தவத்தில் நிலைத்த நிலை

தாய்களின் விழிகளில் கண்ணீர் மாலை
ஊரோ மயானமான சோக நிலை
அமைதிக்காய் ஏங்கும் நல் இதயங்கள்
துப்பாக்கியால் விடியும் துர்ப்பாக்கிய பொழுதுகள்

சொந்தங்களை சொந்தங்களே அழித்த கொடுமை
பகைமையைப் பகைமையால் தணிக்க முடியாது
பகைமையை அன்பினால் தணியுங்கள்
பெருமான்கள் புத்தர், இயேசுவின் போதனைகள்

இழவில்லாத வீடில்லை, மரணத்திற்கு
இனபேதங்களில்லை, என்றுமுள்ள
தர்மம் மாறாத நிலை-அராஜகமோ
அசுர நிலை, அன்போ தெய்வ நிலை

கண்ணீரும், குருதியும் நிறம் மாறவில்லை
சிங்கள தமிழ் குருதியில் பேதங்களில்லை
இருவர் DNA க்களும் ஒன்றான நிலை
பின் ஏனிந்த அவல நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-15-01-2024

# ***அச்சமில்லை அச்சமில்லை***

---

வெஞ்சினம் பூண்டெழுந்த அஞ்சாத் தமிழினம்
அடிமையாய், பேடியாய் அஞ்சி வாழ்வதோ?-இல்லை
நெஞ்சினில் விடுதலை நெருப்பேந்தி
அஞ்சாது தமிழ் ஈழ விடுதலைக்காய் போராடி வீழ்வதோ?

அடிமை விலங்கறுத்து எம் இறைமையை நாம் பெறும்வரை
எமக்கோர் சுதந்திர தாயகம் அமையும்வரை
அணையாது எரியட்டும் விடுதலை வேள்வியின் ஹோமத்-தீ
தணியாது ஒலிக்கட்டும் சுதந்திரயாகத்தின் மந்திர ஒலி

அஞ்சிவாழும் அலிகளுக்கும் பேடிகளுக்கும் வாழ்வில்  சாவு பலமுறை
அச்சமறியா வீரர் மாள்வதோ வாழ்வில் ஒருமுறை-தமிழா
தமிழ் ஈழ விடுதலைக்காய் துஞ்சிடல் பெரும்பேறே-சிங்களத்தை
தொழுது பேடிகளாய் அஞ்சி வாழ்ந்திடல் வெட்கக்கேடே

அறிவாய்  தமிழா பாராண்ட பேராண்மைத் தமிழா
கரும்புலியாய் எழுந்து எரிமலையாய்க் குமுறு-
எரி நரகே நீ விளையாடும் பூமி
விடம் சூடி ஆடும் ருத்திர தாண்டவமே
உன்தன் ஓயாத விடுதலை வேள்வி

***ஆண்ட பரம்பரை  மீண்டுமொருமுறை***
***தம் ஆளுமுரிமை பெறும்வரை-நெஞ்சினில்***
***மூண்ட சுதந்திர நெருப்புத்தான் அணையுமோ?***
***உயிர் பூண்ட பெருந்தவமும்தான் கலையுமோ?***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# அச்சம்

அதிரடிப்படையின் வருகை சொல்ல
தெரு நாய்கள் குரைக்கும்-
நடுநிசியில் நடுங்கி பேய்கள் கனைக்கும்-
காரிருளில் கண்மூடி
சாலை விளக்குகள் உயிரிழக்கும்

நாளை பேறுடையாள் யாரென்று
பேதைகளின் கண்ணீர் சொல்லும்,
ஊளையிட்டு நாய்கள் சொந்தம் சொல்லும்

கதிரவன் வருமுன் கரையும் காகங்கள் சொல்லும்
கருகிய உடலும், கரியாய் கிடக்கும் டயர்களும்
எம் துயரம் சொல்லும்

தமிழ் ஈழத்தில் எங்கள் தேசத்தில்
காலைப்பொழுது அழுது விடியும்
வீசும் தென்றல் கருகி மணக்கும்
வெண்மேகமும்
தூறல் மழையாய் கண்ணீர் பொழிந்தே
எம் துயரம் பகிரும்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# ஆடை

தேசமெங்கும் ஆடைத்தொழிற்சாலைகள்
அகதிமுகாம்களிளோ மாற்றுத்துணியின்றி
அழுக்கு கந்தையோடு நாளும்
அல்லாடும் தமிழ் அகதிகள்.

## விடிவு?

விடிவுக்காய் ஏந்திய துப்பாக்கி வெளிச்சத்தில்
விட்டில்களும் விளையாடி மடிந்த துயரமுமிங்கே
அடிமை மோகத்தின் சரசசல்லாபத்தால்
கண்ணகிகளும் கணிகை மாதவிகளான அவலமுமிங்கே

குண்டு துளைத்த உடலங்களும்-குற்றுயிரோடு
சித்திரவதையால் நொந்த காயங்களும்-தீ
உண்ணத் தெருக்களில் காட்சியானதே?
கைதும், கப்பமும் தொடர் கதையானதே

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# அன்னையர் தவம்

கங்கைகளும், காட்டாறுகளும் பொங்கிப் பாயும் ஈழத்தே,
அன்னையர், விதவைத் தங்கையரின் அழுகைச் சத்தங்கள்
கண்ணீர் பிரவாகங்கள், கணவனையும்-காணாமற்போன
பிள்ளைகளையும்- தேடி கண்ணீர்த் தவமிருக்கும்
தாய்குலத்தின் துயரங்கள், கல்மனதையும்
கரையவைக்கும் நிகழ்கால நிஜங்கள்

வீடு வாசல்களும் வாழ்வாதாரமும் இழந்து
நாதியற்ற அகதிகளாய் வறுமையில் வாடி-நாளும்
கண்ணீரில் எரியும் கற்புரதீபங்கள்

இறைவனும் மௌனித்திருக்க-இதயமோ
சோகச் சுனாமியால் இடிந்து கிடக்க
யார் தருவார்-இந்தப் பேதைகளுக்கு அமைதி.?

முறிந்த பனைகளும்- அடர்ந்த காடும் வாழிடத்தை
மூடி மறைக்க-இராணுவத்தின்-முட்கம்பி வேலியோ-
உரிமையை முற்றாய் மறுத்துரைக்க, அறுந்த தாலியும்-
கலைந்த குங்குமம் அமங்கலத்தை சுட்டி நிற்க
பசி வாட்டிட – அழும் குழந்தைகளுக்காய்
பிடியரிசி கேட்டு யாரிடம் போவாள் பேதை.

மின்னும் கோபுர கலசங்களும் ஒளிரும் சிலுவைகளும்
எட்டாத உயரத்தில் நிற்க ஒளிரும் வண்ண
விளக்குகளோடும், அதிரும் வாண வேடிக்கைகளோடும்
கோயில் திருவிழாக்கள்

புண்பட்ட இதயங்களோடும் பசிவாட்டிடும்
வயிறுகளோடும் ஏழைகள்-இன்றும் இலாசர்களாய்
செல்வர் வீட்டு வாயில்களல் இரந்துநிற்க
சத்துணவால் கொழுத்த செல்லப் பிராணிகளோ
ஏழைகளை குரைத்து விரட்டிட தேவாலயங்களில்-ஏழை
இலாசரின் கதைகேட்டும் இரங்காத மதவாதச் செல்வர்கள்

காற்றில் சிலுவைகள் வரைந்து கண்ணீர்த்
தவமிருக்கும் ஏழைகளுக்கு ஆசிவழங்கும் அருட் தந்தையரும்
-தம்ம உபதேசமாய் கீசகோசமியின் கதை சொல்லும்
பிக்குகளும் மலிந்த தேசத்தில் ஆலயமணிகளும்,
பிரித் ஓலிகளும் ஆண்டவனை அழைத்து களைத்திட-
“இறைவனும்” காணமற்போன அவலமிங்கு
நல் இதயங்களும் நம்பிக்கையிழந்த துயரமிங்கு.

கண்ணகி இருந்திருந்தால்
காற்சிலம்பை உடைத்து நியாயம் கேட்டு
ஈழத்தை எரித்திருப்பாள்

சீதை இருந்திருந்தால்-ஸ்ரீராமனும்
படை திரட்டி, போர் தொடுத்து
கண்ணீர் துடைத்திருப்பார்.

ஈழம் எரிகின்றது-யுத்தம் தொடர்கின்றது.
கண்ணீரில் தவமியற்றும்
கண்ணகியும் இங்கே- சீதையும் இங்கே

காவியம் போற்றிப் பாடாத ஏழைகள் தம் பிள்ளைகளுக்காய்-
நெஞ்சில் பாரச்சிலுவை சுமக்கும் அன்னை மரியாள்கள்
இன்றும்-ஞானத் தேடலாய், ஒரு பிடி
கடுகுக்காய் கதவைத் தட்டும் கீசகோசமிகள்

***இது காவியப் பெண்களின் கதையல்ல***
***கண்ணீரில் வாழும் தேவமாதர்களின்***
***உண்மைக் கவிதை***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# ஆண்ட பரம்பரை

---

ஆண்ட பரம்பரை மீண்டும் தம்
ஆளுமுரிமை பெறும்வரை-நெஞ்சில்
மூண்ட சுதந்திர நெருப்பு அவியுமோ?
கண்டம் பூண்ட விட மாலையின்
விடுதலைச் சுவையும் குறையுமோ?

அண்டம் நடுங்க ஆடிடும்-கரும் புலிகளின்
-உருத்திர தாண்டவமும் ஓயுமோ?
கடலும், மண்ணும் தீப்பிடிக்க, நெய் வார்த்த தீயில்
நீராடும் நிலைதான் மாறுமோ?
சொல் தமிழா சொல்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-27.2.2023*

# ஆண்டவன் கட்டளை

---

**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**

ஈழத் தமிழினத்திற்கு ஒன்றே இயக்கம்-மாவீரன்
பிரபாகரன் ஒருவனே என்றும் தலைவன்.
தலைவரையும், இயக்கத்தையும் போற்றிப் புகழ்ந்து பணிவீராக

பொருள் கொடுத்தும், வீட்டுக்கொரு பிள்ளை கொடுத்தும்
எம் இயக்கத்தை காப்பது உம் தலையாய கடனாகும்

அஞ்சி பணிதல் உம்மை வாழ்விக்கும்,
அடங்காமை இன்னுயிரைப் பறித்துவிடும்

எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் இயக்கம்
உரைப்பதே மெய்பொருளாகும்.-மற்றவை
எதிரிகளின் பொய்ப் பிரச்சாரமாகும்.

பேச்சு சுதந்திரம். எழுத்துச் சுதந்திரம், மாற்றுக் கொள்கை
என்று ஏதுமில்லை.நாமே உம் சுதந்திரம்-
புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம்
இதுவே தாரக மந்திரம்.

நாமே சட்டம், நாமே நீதி. நாமே உம் சிந்தனை
நாமே வேதம்-மற்றவை சாத்தானின் கீதம்

கட்டாய இராணுவப் பயிற்சி உயிர் காக்கும்
கப்பமாய் பொன்னும், பொருளும் கொடுத்தல்
உம் வாழ்வாதாரத்தை மீட்கும்.
இயற்றலும், ஈட்டலும், கப்பம் பெறலும் நம் கடனே

தலைவரை இகழ்தல், இயக்கத்தைப் பழித்தல்,
காட்டிக்கொடுத்தல் தலையாய குற்றங்கள்-
மரணமே தண்டனை
கொலையிற் கொடியாரை வேரறுத்து
தலைமை காப்பது நம் தலையாய கடனாகும்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-05-2023

# அந்த அமாவாசை இரவு

---

அந்த அமாவாசை இரவு தீடிரெனத் தீப்பற்றிட
அழகிய மௌனத்தை வல்லாங்கு செய்த துப்பாக்கிகள்,
அழகிழந்து அம்மணமாகிக் கூனிக் குறுகிய இரவு
கண்ணீரில் மூழ்கிய பல நூறு உறவு

கொடிய வன்புணர்ச்சியால் இருளின் வனப்பும் புண்பட
கொகூரச் சப்தங்களால் குரைக்கும் நாய்களும் வாலை ஒடுக்கி
சிறு நீர் ஒழுக மறைவிடம் தேடி ஓடிட, தீயில் விழுந்த மெழுகாய்
உணர்வுகள் உருகிக் கரைய அணையும் உயிர்ச் சுடர்கள்

ஓசைகள் அடங்கி-மௌனம் நிலைக்க தீயும்
ஒடுங்கிப் புகையாய் அலைய
சோகம் சொல்லி கண்ணீர் தூவும் மழை,
இன்றும் சுனாமியாய் தாக்கும் சோக அலை

குருதியும், மழையும் புழுதியில் சங்கமிக்க, அழுகையும்,
கண்ணீரும் மௌனத்தில நிலைக்க, மண்ணில் கிடந்த சடலங்கள்
மண் சிவந்து யுத்தத்தின் கோரம் சொல்ல, மகனே என் மகனே
கதறும் தாய்களின் அழுகை, கண்ணீராய் வைகை.

ஊரும், தெருவும் வெறிச்சோடிக் கிடக்க, உலாப்போகும்
புள்ளினங்கள்-அஞ்சி கூடுகளில் முடங்கிக்கிடக்க
பூக்களும் கண்விழிக்க மறுக்க, நீர் வடியும் விழிகள்
நிலைக்குத்தி வானை வெறிக்க, தீப்பற்றிய இரவு

ஆழிப்பேரலையாய் சோகம் ஆவியை நொருக்க
சொல்லியழ வார்த்தையின்றி நெஞ்சம் தவிக்க
அழவும் முடியாமல், அழவும் தெரியமல் கண்ணீர் கட்டி நிற்க
சொந்தம் சொல்லி தெருவில் குந்திக்கிடந்த மூதாட்டி

நீண்ட நெடுஞ்சாலையோரம் கொசுக்கள் மொய்க்க,
குருதி உறைய, உள்ளடையோடு, ஒரு துண்டோடு, சாரத்தோடு
கைகள் கட்டப்பட்டு-கபாலம் துளைக்கப்பட்டடு
கட்டைகளாய் வீழ்ந்து கிடந்த உறவுகள்

விழிகளுக்குள் மறையாத அச்சம் -இமைகளுக்குள்
உறைந்த கண்ணீர், மெல்ல நடக்கையில் கால்களும் தடுமாற-
கண்ட காட்சியில் இதயம் நொருங்கிச் சுக்கு நூறாக
சத்திய தரிசனம் தேடி, விழி நீர் கசிய நடக்கின்றேன்

கொண்டாடிப் பிறந்த உறவுகள், கோலாகாலமான நினைவுகள்
கனவாய்க் கழிந்து, கோர நிகழ்வாய் முடிந்திட, விறைத்துக் கிடந்த
போராளிகள், கலைந்து போன தமிழ் ஈழக் கனவு
பிணவாடை சுவாசத்தை நெரிக்க யுத்தம் மாயை என்ற உணர்வு

கொன்றழிக்க கொடிய விலங்குகளாய், சுட்டழிக்க எதிரிகளாய்,
உறவுகளின் நினைவுகளில் மாலையிட்ட படங்களாய்
மறக்கமுடியாத கொடிய நினைவுகளாய், மனிதப்படுகொலைகள்
ஈழ வரலாற்றின் குருதிக் கறைபடிந்த பக்கங்கள், புரட்டிப் பார்க்கவும
திரும்பிப் படிக்கவும் மறக்கடிக்கப்பட்ட நிகழ்வுகள்

நடந்தபாதையின் இரு மருங்கிலும் நாறிக் கிடந்த பிணங்கள்
இயக்க மோதல்களின் தீராத பழி சொல்ல
நம்மை நாமழித்த உணர்வுகள் நெஞ்சில் தீயாயப் பற்றி எரிய
அலை அலையாய் வந்து மோதும் அழியாத சோகங்கள்.

அலையும் கடலும் தரையில் தலை மோதி அழ,
வானில் கழுகுகள் வட்டமிட, காகங்கள் கூடிக் கரைய,
மூதாட்டியின் விழிகளில் வெறுமையின் குடியிருப்பு-இதயத்தில்
ஆறாத சோகத்தின் ஓயாத படையெடுப்பு

குண்டு மழையில் நீராடி, நெருப்பாற்றில் தினம் நீந்தி
வெல்வோம் இல்லை வீழ்வோம் எனப் போராடும் வேங்கை,
விடம் தரித்த நெஞ்சில் வீறாப்பு, எட்டப்பர் கூட்டத்தை கொல்வதில்
பாவமில்லை, அமாவாசை இரவில் அரங்கேறிய கொடிய நிகழ்வு

சரணடைந்த போராளிகளுக்கும் மரணம்,
நற்கதி என்றோ சரணம், அனுபல்லவி, பல்லவி இன்றி
கலம்பகமாய் ஒலித்த துப்பாக்கிச் சத்தம்-அறம்பாடி
மறவர் வாழ்வை அழித்திட ஒழுகிடும் இரத்தம்

உறவுகள் கண்ணீர் மழையில் நீராடப், போரடிக்
குருதிப் புனலில் நீராடி-விழுந்த வித்துடல்கள்தான்
எத்தனை? ஈழ மண்ணின் விடுதலைக்காய்
நடத்திய வீரவிதைப்போ சத்திய சோதனை?

வீழ்ந்தாலும் வித்துடலாகி மீண்டும் முளைப்போம்
எரிந்தாலும் காற்றில் கலந்து சுவாசத்தில் நிறைந்து
வாழ்வோம் என்றவர் வாழ்வும் வீணானதோ?
தமிழன் ஒற்றுமையும் இன்றும் வெறும் கனவானதோ?

பிள்ளைச் செல்வங்களை, யுத்தம் கொள்ளையிட
வெள்ளைப் புறாவைப் பருந்து பறித்துச் செல்ல
கலைந்த ஈழக் கனவு, கண்ணீராய்க் கரைந்து
மாலையிட்ட படமாய் சுவரில் தொங்கும் உறவு

உரிமைப்போராட்டம் அறம் பிறழ-அதிகாரச்
சூதாட்டத்தில் தம்மைத் தொலைத்த வீர மறவர்
முறிந்த பனையும், தென்னையும் சாட்சியாய் நின்றிட
உலகெங்கும் அகதிகளாய்ப் புலம் பெயர்ந்த ஈழவர்

விடுதலைப் போராட்டத்தின் காயங்கள் ஆறவில்லை
கண்ணீரும், குருதியும் காயவில்லை, மறைக்கப்பட்ட
புதைகுழிகளில் மறக்கடிக்கப்படட உறவுகள் மறைந்திட
எரியும் டயர்களில் தகனப்பலியான வண்ணக் கனவுகள்

அவசர அழைப்பாய் சோகம் சொந்தம் சொல்ல,
அகால மரணங்கள், அணையுடைத்து
அன்னையர் கண்ணீர் ஓடிட, ஓயாத அழுகை ஒப்பாரி
உறவுகளின் நெஞ்சுக்குள் இன்றும் அணையாத் தீ

பகை கொண்ட நெஞ்சம் துயரத்தின் இல்லம்
அன்பு வாழும் உள்ளம்-என்றும்
அமைதி வாழும் இல்லம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-22-7-2023*

# ஆறாத காயம்

---

ஈழ யுத்தம் முடிந்தும் எம் மனக்காயங்கள் ஆறவில்லை
ஆயுதங்களின் சத்தங்கள் ஓய்ந்தும் நீதி கிடைக்கவில்லை
உறவுகளின் அழுகையும், கண்ணீரும் இன்றும் ஓயவில்லை

நீறணிந்த நெற்றி-நடந்த கொடு நிகழ்வை நினைந்து விம்மிட
மார்பிலணிந்த சிலுவை-பெற்றோர் மனச்சுமைகளை
எண்ணித் துடித்திட, ஐவேளை தொழுதும்- ஆறாத சோகம்

மழித்த சிரசும், சீவர ஆடையும், இனவாதம் மறக்கவில்லை
காலவெள்ளம் அள்ளிச் சென்ற ஈழக்கனவுகளில்-
எதிர்நீச்சல்போட்டு கரையேறியவர் யாருமில்லை

யுத்தம் கற்றுத் தந்த பாடங்கள் ஈழத்தமிழனுக்கு
ஒற்றுமையைக் கற்றுத் தரவில்லை, இழிந்த, இனவாத
அரசியல்வாதிகளுக்கு தன்னலம் தடையான நிலை
ஈழத்தமிழினத்திற்கு விடிவோ வான் நிலவான அவல நிலை

கார்கால் மேகங்களாய் எம் வானில் சோகம் குவிந்திட
விழி பொழியும் கண்ணீர் மழை, மறைக்கப்பட்ட புதைகுழிகள்
விழித்தெழ, காணாமல் ஆக்கப்பட்டவர்களுக்கு நீதி
கிட்டுமோ? உண்மையை உலகறியுமா கேள்விக் கணை?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-21-7-2023

# ஆறாத மனம்

---

மண்ணும் தணலாற, விண்ணும் புகையாறத்
தீயணைத்து நீலக்கடலும் இளைப்பாற
அனல் தணித்து தென்றலும் உறவாட
அணையாத அன்னையர் அடிவயிற்று நெருப்பு
கண்ணீரிலோ அறுந்த தாலிகளின் மிதப்பு

கடல் கடந்து புகலிடம் தேடும் அகதிகளாய்
ஈழத்தமிழினம் திண்டாட-என் தேசம்
இனவாத தீயில் வெந்து நெருப்பாக
ஆறாத மனமும் ஆறிட, யார் தருவார் நிம்மதி?

ஆறாத காயமும், தீராத சோகமும்
ஈழத்தமிழ் நெஞ்சங்களில் உறவாட
மடிந்தாலும் விதையாய் முளைத்தெழுவோம்
உயிர் துறந்தாலும் மனங்களில்
புரட்சி எரிமலையாய் விழித்தெழுவோம்.
நம்பிக்கையாக- நாளை நமதே மந்திரமாக
நாமும் வாழ்வோம்- வாழவைப்போம்.

ஆறாத கோபத்தின் அனலும் ஆறும் வரை
மாறாத சோகத்தின் வடுவும் மறையும் வரை
தீராத நெஞ்சத்து சுதந்திர தாகமும் தணியும் வரை
ஓயுமோ? எம்தன் உரிமைப் போராட்டம்-

ஓயாது ஒருநாளும் எம்தன் உரிமைக்குரலும்
ஊமையாகி மௌனிக்காது.
தமிழே என் உயிர் மண்ணே-உன்னை
என் உயிர் நெஞ்சம் ஒருபோதும் மறவாது

மடிந்து மண்ணாகிப்போனாலும்
மரமாய், புழுவாய் உயிர்ப்போம்
மறத்தமிழன் யாத்த விடுதலை யாகத்தை
மறுபடியும் தொடர-
அகிம்சையின் கீதை இசைப்போம்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-5-2023*

# அறுந்த கொடிகள்

---

தொப்பிள் கொடியறுத்திட
சொந்தமும், சுற்றமும் மகிழ்ந்து வாழ்த்திட
அழுது குரல் எழுப்பி வாழ வந்தவர்கள்
அடங்காத் தமிழர்களாய் ஆயுதம் ஏந்தி
இடியெனச் சுதந்திர கீதம் இசைத்தார்

விட மாலை சூடி சிவனாய் மாறி-ருத்திரதாண்டவமாடி
பகையறுத்து வீழ்ந்த போதிலும், விடமாலை அறுத்து
விடம் சுவைத்து, வீரனுக்கு மரணமில்லை
இனவாத சிங்களத்திற்கு அடிமையில்லை என்றே
எரியும் டயர்களில் ஆகதியாகி வரலாறு படைத்தார்.

மணமாலை சூடியவரும், மனைவியின்
மாங்கல்யம் அறுந்திட களப்பலியானார்
தமிழ் தாயின்-அடிமை விலங்குடைக்க
தம்பிகள் புரிந்த தியாகத்தை யார் மறந்தார்?

ஈரவிழிகள் சிவந்திருக்க-இளமுல்லையும்
கொழுகொம்பின்றி விதவையாய் இளைத்திருக்க-
நிழலாய் விடமாலை சூடிய வீரபுருஷர்கள்
நிஜமாய் மணமாலை இழந்த இளம் விதவைகள்!

அமாவாசை இருளில் வாழ்வும் அலைக்கழிய
வாழ்வாதாரமின்றி கைமை தவிக்க
விழிகளில் ஏந்திய கண்ணீர் கொடி
தமிழ் ஈழ வீடுதலைக்காய் அறுத்த தாலிக்கொடி

வறுமை -சிங்களத்திலும் கொடிதாய் வாட்டிட
தமிழ் தலைமையோ பேசியே காலம் கழித்திட
எங்கும் பறக்கும் சிங்கக்கொடி-இளம்
விதவைகளின் விழிகள் ஏற்றிய கண்ணீர் கொடி
வீழ்ந்த ஈழ விடுதலையின் வெற்றிக் கொடி?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-23-5-2023*

# அச்சம் என்பது மடமையடா

---

போராடி மடிவோம்-எதிரியின்
குருதிப்புனலில் நீராடி மகிழ்வோம்-
கொதித்தெழுந்த ஈழத்தின் இளைய தலைமுறை
ஆயுதமேந்திப் போராடி மடிந்தார்
இனவாத சிங்களத்திற்கு அடிபணியாது
வீழ்ந்தே வீர சொர்க்கம் புகுந்தார்.

கங்கையாய் பாய்ந்ததோ மாவீரர் குருதி
தமிழ் நெஞ்சங்களில் கனலாய் எரிந்ததோ
அடிமையல்ல உரிமைத் தமிழ் மகன்
என்ற உயர் நீதி

உரமாகிப்போன வித்துடல்கள்
உருமாறி ஒரு நாள் முளைக்கும்
நமக்காய் ஒருநாள் தமிழ் ஈழம் பிறக்கும்
எமக்காய்ச் சுதந்திரச் சூரியனும் உதிக்கும்

வெற்றி இல்லையேல் வீரமரணம் என்றே
வீழ்ந்தும் வாழ்கின்றார் வீரபுத்திரர்

துஞ்சுவது ஒரு முறைதான்
அஞ்சுவோர்க்கு வாழ்வில் ஆயிரம் மரணம்
அஞ்சா நெஞ்சத்து ஆடவர்க்கு ஏது மரணம்?

மானமே பெரிதென்ற மறத்தமிழருக்கு
மரணம் இனிதாய் ஆனது
இறப்பும் புதுப்பிறப்பாய் ஆனது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-23-5-2023*

# அடையாளம்

---

வாதைகள் செய்த-பாதகர்
முட்டியில் சுட்டு -எரியும் டயர்களில்
சுட்டெரித்த உன் மகன் பிறப்பானம்மா
ஈழவிடுதலைக்காய் மீண்டும் ஒரு முறை
யுத்தம் புரிவானம்மா

என்னை அடையாளம் காண
சுட்டெரித்த பகைவர் என் முட்டியில்
இட்ட சூடு போதாதம்மா-தாய்பாலோடு
தமிழ்பால் ஊட்டிய தெய்வமே
நெற்றியில் பகைவர் நெருப்பினால் இட்ட பொட்டு
நெற்றிக்கண்ணணாய் என்னை உனக்கு
அடையாளம் காட்டும் அம்மா

உன் மகன் மீண்டும் பிறந்தானென்றே
அகமகிழ்வாய் அம்மா?
நாளை பிறக்கும் ஈழத்தில்
நாமும் ஒன்றாய் வாழ்வோம் அம்மா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30.03.2023

# 157-அகதிகளின் படகு

---

எண்ணெய்யும் எரிபொருளுமின்றி ஆழ்கடலில் அல்லாடும்
அகதிகளின் படகு-வாழிடமும் வாழ்வாதாரமும் இன்றி
புகலிடம் தேடி சோககடலில் தவித்திடும்
தமிழ் அகதிகளின் மனது.

நெருப்பாற்றில் நீந்திப் பிழைத்தவர்கள்
அலைகடல் ஓடிப் புகலிடம் தேடிட
அவுஸ்திரேலிய ஆழ்கடலில் மூழ்கிடும் நிலையில்
ஈழத் தமிழ் அகதிகளை ஏற்றிய படகு

காரிருளும் கடல் நீரும் அச்சம் சொல்ல
காயும் வயிறும் கண்ணீரும் சோகம் சொல்ல
கரைகாணாத அவலத்தில் கயிறறுந்த காற்றாடியாய்
பழுதடைந்து அல்லாடும் தமிழ் அகதிகள் படகு

கொல்லும் வெயிலும் கொட்டும் மழையும்
கொந்தளிக்கும் கடலும், குளிர்காற்றும், அச்சமூட்ட
ஒட்டிக்கிடந்த வயிற்றில் உறங்கிக்கிடந்த பசியும், பயமும்
ஒன்றாய் விழித்தெழ -நன்றாய் வாழ்ந்த நாட்கள்
கனவாய்க் கழிந்த பழங்கால நிகழ்வுகள்

இன்றோ புகலிடம் தேடிடும் அகதிகள் ஆழ்கடலில்
அநாதைகளாய் வாடித் தவிக்க, விடிவு வரும் திசையினில்
விலங்கிடப்பட்டு கைதிகளாகும் அவல நிகழ்வு
விம்மியழுதார்-வேதனை பெருகிட மானிடராய் பிறந்த
இழிநிலைக்காய் விதியை நொந்தழுதார் அகதிகள்

அகதி அமைப்புகளின் அபயக்குரல்கள்
செவிடன் காதில் விழுந்த சங்கொலியாயக
நியாயமும் தர்மமும் நெஞ்சுக்கெட்டாத நீதியாக
இரும்பான அரசின் மனதில்-இரக்கம் கானல் நீரானது

அவுஸ்திரேலிய அரசு ஆழ்கடலில் தத்தளித்த
அகதிகளை, சிறைவைத்தே மௌனம் காத்திட
ஏழ்கடலும் குமறியழுதது மானிடமும் வெட்கி
மனச்சாட்சி முன் மௌனம் காத்தது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29.3.2023*

# அக்கினி ஆறு

---

அக்கினி ஆற்றில் தினம் நீராடும்- கரும்புலிக்கு
கத்தும் கடழேலும் முழங்காலலவே
கடும்புயலும் தென்றல் காற்றே

செந்தணலாழியில் மூழ்கி செம்முத்தாய்
தமிழீழத் தாயகத்தை மீட்டெடுப்போம்
எத்திசையும் ஒலிக்க -சுதந்திரம்
ஈழத் தமிழன் பிறப்புரிமையென்றே
சத்தமாய் முழங்கிடுவோம்

நாம் பிறந்தபோது ஆடிடத்தொட்டிலில்லை
எம் ஆவி அடங்கும்போது -உறங்கிடப்
பாடையோ-சவப்பெட்டியோ இல்லை
குண்டுகள் எம்முடலைக் கொத்தி  வீழத்திட-
கொட்டிய குருதியை வண்டுகள் குடித்து
சுதந்திர கீதம் பாடின.

தீயாடும் டயர்களுக்கு பெருந்தீனியானோம்-இனவாத
பேய்கள்அஞ்சி நடுங்கிடப் போராளியானோம்
நோயுற்று எம்முடல் நொந்ததில்லை-உறவுகள்
அகாலமாய் மாண்டதை எண்ணும்போது
நெஞ்சம் கலங்கி, விழிகளும் அழுததுண்டு

அமைதிவேண்டும் -ஆயுதக் கலாச்சாரம் அகல வேண்டும்,
நீதியும், சமாதானமும் நம்மை ஆளவேண்டும்
உயிரனைத்தும் நம் உறவென்னும் இன்பம் வேண்டும
சாந்தி வேண்டும், சகோதரர் நாமெனும் ஞானம் வேண்டும்
சிங்களமும், செந்தமிழும் ஒன்றுபட்டு வாழவேண்டும்.

ஆயதங்களுக்குச் சமாதி கட்டிப் பிரிவினையை
சமநீதியால் குணமாக்குவோம்
அடக்குமுறைகளுக்கு  சாவுமணியடித்தே
மனித உரிமைகளை நிலை நிறுத்துவோம்.

***ஒன்றே குலம் அன்பே தெய்வம்-ஒன்றே சாதி ஒன்றே நீதி***
***உலகப் போராளிகளே ஒன்று படுங்கள்***
***வன்முறையில் நீதி இல்லை- அன்பு என்றும் தோற்றதில்லை***

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# அக்கினி பூமி

---





***இறைவன் படைத்த இன்ப உலகில்***
***இறையாண்மையோடு வாழ உரிமை பெற்ற***
***இறை குடிமக்கள் நாம் –நம்மில்***
***ஆண்டான், அடிமை –வெள்ளையன் , கறுப்பன்***
***சிங்களவன், தமிழன் எனும் பேதங்களும்,***
***மத, இன, நிற, மொழி வேற்றுமைகளும் ஏனோ?***

இங்கிருந்துதான்- உலகெங்கும்
அழகுகள் பிறந்தன என்பதற்குச் சான்றாய்
வளத்தில் நிறைவுற்று, நானிலமும் அழகுற
மண் பெற்ற வளத்தினை விண் காண-வானுயர்ந்த
பனையும், தென்னையும் தோரணமாய்க் குலையீன,
குதுாகலத்தால் புள்ளினங்கள் இசைபாட
பூவினங்கள் பூ மழை துாவி தென்றலில் அசைந்தாட
ஆவினங்கள் பால் பொழிந்திட-
இரத்தினங்கள் ஒளி வீசிட
வாசனைத் திரவியங்கள் சுகந்தம் வீசிட
காற்றாடும் நெல்லும், கூட்டமாய்
கூத்தாடும் வேழமும் நிறைந்த ஈழமெனும்
எமைப் பெற்றெடுத்த அன்னையவள்,
மங்கல ஒலி முழங்கிட
இந்துவின் வெண்ணீல அலை தாலாட்டி
சிப்பியும், வண்ணக் கிளிஞல்களும்
பொன்மண்ணில் கோலமிட்டு சீராட்டும் அழகுமகள்
ஆழியில் ஆடிடும் ஏதேன் வனமோ என
மாந்தர் வியப்புறும் பேரழகு மகள்
பேரினவாதத்தால், பிரிவினையால் வாட
கரைமோதும் அலையிலும் ஆழியின் கண்ணீர்
வான் எழும் புகையிலும் செந்தமிழன் செந்நீர்



## நாம் பிறந்த மண்

---

பாடல் பெற்ற திருத்தலங்களும்
பௌத்த விகாரைகளும் நிறைந்ததெங்கள்-
திருநாட்டில், ஆரியரும், திராவிடரும்
சகோதரராய் நூற்றாண்டு காலம்
ஒற்றுமையாய் வாழ்ந்து வந்தோம்








ஆரியரென்றும், திராவிடரென்றும்
இனப்பேதங்கள் இல்லை
ஆட்சிபுரிந்தோம் ஆண்டுகள் பல,
சிங்களவரென்றும், தமிழரென்றும்
இனத்துவேஷங்கள் இல்லை

**கி.பி** 1505

காலங்கள் கழிந்தன
பருவங்கள் வந்து போயின கடலிலும்
நதியிலும் புது வெள்ளங்கள் கலந்தன
கானகங்களில் புதுப்பண்கள் பிறந்தன
எம் உறவு முறையில் பேதங்களில்லை

சரித்திரமும் எம் வாழ்வை மறக்கவில்லை
சத்தியமும் எம் வாழ்வில் பொய்த்ததில்லை
தமிழரும் சிங்களவரும் தமக்கென
இப்புண்ணிய பூமியில் நாடு கொண்டு
தம்மைத் தாமாண்ட பொற்காலமது

புண்ணிய பூமியில்
கண்ணியமாய் வாழ்ந்த எம் முன்னோர்
தம் வளநிலத்தில்- கண்ணயர்ந்த நேரத்தில்
புயலால் கரை ஒதுங்கிய பறங்கியன்
வாசனைத் திரவிய வணிகனாய் மாறி
கண்ணின் மணி போன்ற எம் மண்ணில்
கோட்டையும், பண்டக சாலையுமமைத்து
தண்ணளி- மாந்தர், எம் முன்னோரை
தனக்கடிமையாக்கிக் கொண்டான்.
அன்னை பூமியில் அந்நியன் உரிமை கொண்ட
துன்பமிகு சரித்திரத்தின் தொடக்கம் அன்று

காலங்கள் கழிந்திட-எம் வாழ்வில்
காரிருள் சூழ்ந்திட-சுதந்திர வேட்கையுற்ற
எம் புண்ணிய பூமியின் சுந்திரப் புதல்வர்
உரிமைக்காய் போராடத் தொடங்கினார்

துப்பாக்கிகளும் பீரங்கிகளும்
குண்டு மழை பொழிந்திட
துர்ப்பாக்கிய ஈழமக்கள் யாம்
விற்கள், வாட்கள்,
ஈட்டிகளோடும், வீறு கொண்ட நெஞ்சோடும்

கண்மணி போன்ற எம் மண்ணின்
விடுதலைக்காய் போராட எழுந்தோம்
நவீன போர்க்கருவிகளின் முன்-எங்கள்
வாட்களும், விற்களும் நலிவுற்ற நேரமது



கங்கையாய் குருதி பெருக்கெடுக்க
காற்றிலே சொந்தங்களின் அழுகையொலி
கடவுளை கூவியழைக்க,
காட்டிலும், மேட்டிலும் போராடி வீழ்ந்தவர்
கழுகுக்கும், காக்கைக்கும் உணவான போதும்
சுதந்திர வேட்கை தணியவில்லை
உரிமைப் போர் ஓயவில்லை

மஞ்சளும், குங்குமமும் மலர்ச்சரங்களும்
உயிராய்ப் போற்றிய மாங்கல்யமும்
தாயாய், காதலியாய் வாழ்ந்திட்ட
எம் முன்னறிந்த தெய்வங்கள் நின்று
அழிந்து, உதிர்ந்து, கழன்று கண்ணீரோடு
கங்கைதனில் கலந்த காலமிது.

பாடல் பெற்ற திருத்தலங்களும்
பௌத்த விகாரைகளும் இடிந்திட-அந்நியர்
ஆதிக்கவெறி எம்மை அடிமை கொண்ட
இருண்ட காலமிது –
ஆயினும் எம் முன்னோரின்
உரிமை முழக்கங்கள் ஓயவில்லை
உதிர வெள்ளமும் வற்றவில்லை-
போராடினார்கள்
தம்மைத் தாமாள போராடினார்கள்.



போர்த்துக்கேயரும், டச்சுக்காரரும் .
சூரியன் அஸ்தமிக்கா இராச்சியம் கொண்ட
பிரித்தானியரும் களைக்கும் வரை
விழுப்புண் தரிக்க இடமின்றி
பொய் சொல்லா மெய்யோடும்-
சுதந்திரம் வேண்டி-
அறை கொள் அருவியாய்,
ஆர்ப்பரிக்கும் உள்ளமோடும்
அந்நிய ஏகாதிபத்தியத்திற்கெதிராய்
1504 முதல் 1948 வரை போராடினார்கள்
எந்நாளும் இந்நாட்டு மன்னரென
வாழ்ந்த எம் முன்னோர்கள்

பறங்கியனை விரட்டிட, டச்சுக்காரனை அழைத்து
பிரித்தாளும் பிரித்தானியனுக்கு அடிமையான
துயரமிகு வரலாறு தொடர்கதையாக,
நான்கு நூற்றாண்டுகளும்
நாற்பத்து மூன்று வருடங்களும்
இறைமை இழந்த ஈழ மண்ணின்
உரிமைப் புதல்வர்கள் -அந்நியனுக்கு
அடிமையான இருண்ட காலமது



காலம் கடந்தது, எம் வாழ்வு மலரவில்லை
மலரும் வாழ்விற்காய்-புலரும் காலம் பார்த்து
புண்ணிய பூமியின் புதல்வர்யாம்
நாளைய நம்பிக்கையோடு காத்திருந்தோம்

சிங்களவரும் தமிழரும்
தத்தம் இறைமைகளுக்காய்
போராடிப் பெற்ற விழுப்புண்களோடும்
புத்துணர்வோடும், மீண்டும் போராடிட
மகிழ்வோடெழுந்த காலமது

வெள்ளையனின் ஏகாதிபத்திய வெறிக்கெதிராய்
சுதந்திர வேட்கையுற்ற புண்ணிய பூமியின்
பிள்ளைகள் போராட்டத்தைத் தொடர்ந்தார்
எம் முன்னோரின் கனவுகள் நனவாகி
இருவினத்தின் இறைமைகளை மீள்றெடுக்க
ஒன்றுபட்டு நாம் போராடினோம்
அருமையாய் நாம் போற்றிய இறைமைகளுக்காய்
ஆரியரும் திராவிடரும் அணிதிரண்டு போராடினோம்



## 1948-மாசி-04

வெள்ளையன் வெளியேறி ஆட்சி கைமாறிட
ஆனந்த சுதந்திரம் மலர்ந்ததென
உரிமைக் குடிமக்கள் நாம் ஆர்ப்பரிக்க
அரசர்களானோம் என மனம் பூரிக்க
இம் மண்ணின் ஆட்சி முறைக்கான
அரசியலமைப்பினை வெள்ளையன் யாத்திட
அந்நியோன்னியமாய் வாழ்ந்த இரு இனத்திடையே
பேதங்கள் பிறந்தது -சிங்களம் அரியணையில் அமர்ந்திட
செந்தமிழோ கால் மனையில் மிதிபட
ஈழத் தமிழர் சுதந்திரம் கானல் நீரானது



***ஆண்ட பரம்பரை***
***மீண்டும் ஒரு முறை-ஈழத்தே***
***அடிமையான இழிநிலை தோன்றிட***
ஒன்றாய் வாழ்ந்த எம்மிடையே
உரிமையில் பேதங்கள் பிறந்தன
நன்றாய் வாழ்ந்த எம் உறவில்
நாளடைவில் பிளவுகள் தோன்றின

பாராண்ட பேராண்மைத் தமிழர் யாம்
முடியுடை முத்தமிழன் வாரிசுகள் நாம்
புண்ணிய பூமியில் தமக்கெனத்
தனியொரு இராட்சியம் கொண்டு
தம்மைத் தாமாண்ட தமிழர் யாம்,
இறைமை இழந்து-இம்மண்ணில்
ஆளுமுரிமையிழந்து அடிமையாகிட
***ஆண்ட பரம்பரை மீண்டும் ஒரு முறை***
***ஆளுமுரிமைக்காய் போராட***
ஈழத்தமிழரின் சுதந்திரப் பேரிகை முழங்கியது

எம்முரிமைக்காய், இறைமைக்காய்
எம் மண் சிவந்திட சிந்திய உதிரமும்
எழுப்பிய உரிமைக் குரலும்
புண்ணிய பூமியை ஊடறுத்து-ஏழ் கடலிலும்,
இமயத்திலும் இன்றும் எதிரொலிக்கின்றது

***மத்தியில் கூட்டாட்சி***
***மாநிலத்தில் சுய ஆட்சி கனவாகிட***
மறத்தமிழர் எமது உரிமைக் குரல்
***தனித் தமிழ் ஈழம் என்றே***
கத்தும் கடலேழின் அலைமுகங்களிலும்
உயர்ந்த மலை முகடுகளிலும்
மோதி ஆர்ப்பரித்து எதிரொலித்த காலமது

தமிழ் ஈழம் எனும் மாறாத முடிபோடு
புண்ணிய பூமியின் தமிழர் யாம்
அமிழ்தினும் இனிய தமிழிற்காய்-எமை
நாமாளும் உரிமைக்காய் குரல் எழுப்பி
தலைவனாய்
எமையாளும் இறைவனாய் என்றும் வாழும்
இறைமகன் இயசு கிறிஸ்துவை நோக்கி
ஏழைகள் எம் விண்ணப்பங்களை
ஒற்றுமையாய் ஒரே குரலில் மொழிகின்றோம்



In a controversy the instant we feel anger we have already ceased striving for the truth, and have begun striving for ourselves.

என்றும் வாழும் உயிருள்ள இறைவன்-தம் மக்களின்
அழுகையொலியைக் கேட்கின்றார் எனும் நற்செய்தி
எமக்கு ஊக்கமளிக்கின்றது-ஏனெனில்
முன்னொரு நாளில் தம் பணியாளன் மோயீசனுக்கு
ஓரேப் மலையருகில் மொழிந்ததையே
இன்றும் எமக்காய் மொழிகின்றார்

***அவர் தம் மக்களின் அழுகையொலியைக் கேட்டார்***
***அடிமைத்தனத்திலிருந்து***
***அவர்களுக்கு விடுதலையளிக்கவும்***
***பாலும் தேனும் நிறைந்தோடும் பெரும் நிலம்தனை***
***சுதந்திரமாய்க் கொடுக்கவும் சித்தமானார்*** (யாத் 03 08)

நம்பிக்கையூட்டும் நற்செய்தி
நலிந்த மனங்களுக்கு புத்தணர்ச்சி  தர
இறைவனை நோக்கி எம் குரலை
எழுப்புகின்றோம்-ஏனெனில்
ஆண்டவரும் எமை ஆள்பவரும் அவரே

உதிரமும், கண்ணீரும் ஒன்றாய்க் கலந்திட்ட
எம் உரிமைக் குரல்-பேரினவாததிற்கெதிரான
அறைகூவலாய் மாறிட-அடக்குமுறை ஒழிந்து
சமதர்ம சமுதாயம் உருவாகிட
ஈழத் தமிழர் இறைமைக்காய்
விடுதலைப் போராட்டம் உதயமானது

***தமிழ் ஈழம் தமிழர் தாயகம்***
எம் இலட்சிய கோரிக்கை கேட்டு
சீறும் எரிமலையாய் சிங்களம் மாறிட
நாளும் எம்மைச் சுட்டெரிக்கும் -பேரினவாத
அவியா நெருப்பு  எமக்கு எரி நரகானது

இறைவன் கண்களில் பேறுடையோம் நாம்
ஏனெனில் அவர் தம் தாயின் வாய்மொழியாக

***நெஞ்சிலே செருக்குற்றவர்களை சிதறடித்தார்***
***வலியோரை அரியணைனின்று அகற்றி***
***தாழ்ந்தோரை உயர்த்தினார்***
***பசித்தோரை நலன்களால் நிறைத்து***
***செல்வரை வெறுங்கையோடு அனுப்பினார்***
***என்னும் நற்செய்தியை***  கூறுகின்றார்
(லூாக்1.52-53)




தமிழ் மக்களாகிய நாம்
இப் புண்ணிய பூமியில் அனுபவிக்கும்
உரிமைப் பாதிப்பினாலும்
எமது இறைமைக்குச் சான்று பகிரும்
வரலாற்று உண்மைகளினாலும்
எம்மோடு வாழும்
உயிருள்ள இறைவனின் பலத்தினாலும்
எம்மைப் பற்றிய உண்மைகளை
உரைத்திட விழைகின்றோம்

ஈழத்தமிழர் எம்மில் இரு சாரார்
எனச் சிங்கள் மக்கள் கூறுகின்றார்கள்,
ஒரு சாரார் ஈழத்தில் பிறந்தவர்கள்
இம்மண்ணிற்கு உரித்தானவர்கள்
அவர்கள் ஈழத்தமிழர்கள்

மறு சாரார்
வெள்ளையரால்-கூலிகளாய்
தமிழக மண்ணில் நின்று-ஈழ மண்ணிற்கு
இறக்குமதியாக்கப்பட்ட இந்தியத் தமிழர்கள்-
ஏனெனில்
இவர்கள் தாயகம் பாரதம்
ஆயினும் பின்னைய கூற்று
இன்று பொருந்தாது -ஏனெனில்
இந்தியத் தமிழரென
அவர்கள் பழிப்போர்
ஈழத்தில் பிறந்தவர்கள்
அவர்கள் தாயகமும் ஈழம்
எனவே அவர்களும் ஈழத்தமிழர்களே

ஈழத்மிழர் நாம் இப்புண்ணிய பூமியில்
குறிஞ்சி, மருதம், நெய்தல், முல்லை நிலங்களில்
கூடு கட்டி வாழ்கின்றோம்
வசந்த காலத்தில் ஜோடிக்குயிலாய் கூவி
வரண்ட பொழுதில் ஒற்றைக்குயிலாய்
கரையும் இழிந்த வாழ்வு எமது

***இறக்கைகள் இருந்தும் -எமக்கு பறந்திட வாய்ப்பில்லை***
***இதழ்கள் இருந்தும்- எமக்கு மலர்ந்திட வழியில்லை***
***ஏனெனில்  நாம் கூண்டுப் பறவைகள்***
***சிங்கள இனவாத தீயில் நாளும்***
***கருகிடும் மொட்டுக்கள்***

# குறிஞ்சி மண்ணும் மாந்தரும்

---



இயற்கையின் அபரிதமான அழகுகள்
எங்கும் நிறைந்திட- பச்சை மலைகளும்
பாயும் கங்கைகளும் நிறைந்த-குறிஞ்சி
விண்ணவனைத் துதித்திட
மண் பூத்த கூப்பிய கரங்கள்-குறிஞ்சி

பசுமை தவழ்ந்து-நதிகள் பாய
அழகு ஆடிட இறைவன் கட்டிய
பச்சைத் தொட்டில்-குறிஞ்சி

இங்கு தான்-எங்கள் முன்னோர்கள்
வறுமை வாட்டும் தங்கள் வாழ்வு
மலரும் எனும் நம்பிக்கையோடு
வாழ்வைத் தொடங்கினர்.

குறிஞ்சித் தொட்டிலில் தேயிலை,
கொக்கோ, இறப்பர், மிளகு
குதூகலத்தோடு வளர்ந்தாட
எம் முன்னோர்களின் வாழ்வோ
அழுக்கு லயன்களுக்கள் அடங்கிக் கிடந்தது



*"அக்கரைச் சீமையில் அழகிய வாழ்வு"*
நம்பி ஏமாந்த எம் முன்னோர்கள்
உழைப்பிற்கேற்ற ஊதியம் கனவானது

மாடாய் உழைத்து- ஓடாய் தேய்ந்தவர்
வியர்வையும் குருதியும்
மலையகப் பயிர்களுக்கு உரமாக
மலிவான மலையக கூலிகளின் உழைப்பு
ஆளும் வெள்ளையருக்கு பெருவிருந்தானது

இந்நிலையில்-நாடு சுதந்திரம் பெற்றது ஆயினும்
எமக்கு சுதந்திரம் மலரவில்லை.

***காலங்கள் கடந்தன***
***தோட்டங்கள் தேசியமயமாக்கப்பட்டன***
தேயிலைக்கும், இரப்பர்க்கும் கூடவே
கொக்கோவிற்கும் இருந்த மதிப்பு
நட்டு, வளர்த்து, காத்த ஏழைகளுக்கு இல்லை

தோட்டப்பயிர்களுக்கு வியர்வையும், உதிரமும்,
எம்மவர் உடலங்களும் உரமாகிட
பிரஜா உரிமையும் , உழைப்பிற்கேற்ற ஊதியமும்
கனவாய், பழங்கதையாய் கலைந்து போனது



மலசல தோட்டிகள், நகரசுத்தி தொழிலாளிகள்
பெருந்தோட்ட கூலிகள், பணியாட்கள்
இந்தியத் தமிழன் என்னும் பெருநிலையை
சிங்கள மக்களும், ஈழத்தமிழினத்தின்
சிலரும் பழித்து, இழிவு செய்திட
வறுமை, அறியாமை எமைச் சிதைத்து
சீரழித்த இருண்ட காலங்கள் அவை

அடிமைத் தளையை உடைத்திட
நாம் போராடுகின்றோம்-ஆயினும்
வெற்றி எம் பக்கம் இல்லை
எமக்குத் தோள் கொடுத்திட
ஈழத்தமிழர்களைத் தவிர வேறுயாருமில்லை
ஆதலால் மலையகத் தமிழர்கள் நாம்
எம் தனித்துவத்தோடு
சிங்கள் ஏகாதிபத்தியத்திற்கெதிராய்
போராடத் துணிந்தோம்



இயற்கையின் எழிலை
கவிதைகளோடும் கானங்களோடும்
இரசிப்பவர்கள் நாங்கள்-ஆயினும்
எங்களில் பெரும்பாலானோர்-வக்கிரமான
ஏழ்மைச் சிறையில் ஆயுட் கைதியாய் வாடும்
படிப்பறிவற்ற ஏழைகள்

குறிஞ்சி மலைகளில்-எங்கள்
பசுமைக் கனவுகளை நனவாக்கிட
நாம் முயன்ற போது-அது அநீதியல்ல
என்றறிந்து தொடர்ந்த பொழுது-
சிங்கள ஆட்சியாளர்களால்-
எங்கள் கனவுகள் சிதைந்தன

ஈழப் பொருளாதாரத்தை கட்டி எழுப்பிய
குடும்பச் சோலைகள்
சிறிமா-சாஸ்திரி ஒப்பந்தத்தால்
ஈவு இரக்கமின்றி கலைக்கப்பட்டன



எம் குருதியையும்- உழைப்பையும் உண்டு
அட்டைகளும், முதலாளி வர்க்கமும் கொளுத்திட
ஒட்டிய வயிற்றோடும், கட்டிய கந்தையோடும்
பச்சை மலைமுகடுகளை நோக்கி
எங்கள் பரிதாபக் குரலை-நாங்கள் எழுப்பி
அதன் எதிரொலியை நாமே கேட்கும் அவலம்

ஈழப்பொருளாதாரம்
குறிஞ்சி மலை முகடுகள் போல் உயர்ந்திருக்க
இந்தியக் கூலியின் வாழ்வோ-விண்கல்
அகழ்ந்த பாதாளமாய் அச்சுறுத்த
யாமிழைத்த தவறுதான் என்ன?

குறிஞ்சியின் ஏழை மக்கள்
மந்தைகளாய் லயன்களில் அடையுண்டு
கந்தைக்கும், கூழிற்கும், கருமியின் கொடையான
ஊதியத்திற்கு தம் உழைப்பை ஈடுவைத்து
வியர்வையும், குருதியியும் சிந்தி-நாளும்
அடிமைகளாய் வாழ்ந்திடும் அவலம்
என்றுதான் தீருமோ?

விடிவை நோக்கிய வாழ்வில் என்றும் கலையாத இருள்
வற்றிய உடலும், மங்கிய விழிகள் நின்று
கங்கை போல் பெருகிடும் கண்ணீரும்
பற்றிய அட்டை போல் ஒட்டிய துன்பமும்
பச்சை மலைகளில் மோதி எதிரொலிக்கும்-எம்
அழுகையும் இறைவனை கூவியழைக்க,
ஒரு கண்ணீரின் சரிதையை
காலம் சொல்லும் காட்சியினை-வானுயர்ந்த
மலைமுகடுகள் கரைந்து நாளும் காண
எம் கண்ணீர் மழைக்காலத்திற்கு ஓய்வில்லை

எங்கள் மனங்களில் பூத்த கனவுகள்
விடியலின்றி கருகிட-நமக்காய்
நாளையாயினும் மலராதோ எனும்
பொய்யான நம்பிக்கையில்
விடிவேதென்றும், வழி ஏதென்றும்
அறியா இழி நிலையில்-முதலாளிகளுக்கு
உடல் வளைத்து-துண்டை இடுப்பில் கட்டி
தொர, சாமி என கும்பிட்டு
வணங்காக் கழுத்தோடு வாழ்ந்து போன
பேராண்மைத் தமிழர்களின் வாரிசுகள் நாம்

அறியாமை இருள் நின்று
எம்மை விடுவித்திட நாம் முயல்கின்றோம்
எமக்கென ஒரு நாடு மலரும் என்ற
உறுதியான நம்பிக்கையில்-அதில்
எம் இறைமைக் கனவுகள்
நனவாகும் நம்பிக்கையில்-நாமும்
தமிழ் ஈழமெனும் யாகத்தை உவகையோடும்
உற்சாகத்தோடும் யாத்திட விழைகின்றோம்



நாம் உண்மையை உரைக்கின்றோம்
உண்மை எம் பக்கமுள்ளது எனும் நம்பிக்கை
எமக்கு பலமாகின்றது -எம் இழிந்த வாழ்வு
எமக்கு கண்ணீரை வரவழைக்கின்றது
ஆதலால் நாம் வாய்விட்டு அழுகின்றோம்

ஏழைகளாகிய எம் அழுகையொலி
ஒரு நம்பிக்கையின் நற்செய்தியாக
இறைவனின் வாக்குறுதியாக
எமக்கு உறுதியளிக்கின்றது-ஏனெனில்
***உண்மை உங்களுக்கு விடுதலையளிக்கும்*** என்பது
இறைமகனின் வாய் மொழிகளில் ஒன்று
(யோவான் 8:32)

## மருதமும் மாந்தரும்

-------------------

நிலம் உழுது, நீர் பாய்ச்சி,
நெல் விதைத்து, களைபிடுங்கி-முற்றிய
கதிர் அறுக்கும் உழவர் நாங்கள்
சோறு படைக்கும்-உயர் தொழிழை
ஏழைத் தமிழர் நாங்கள்
சோர்வுறாமல் தொடர்கின்றோம்

வானம் பார்த்த எங்கள் வளநிலங்களில்
சிறுபோகமும், பெரும் போகமும் -எம்
வாழ்விலோ ஏழ்மையே மாறாத யோகம்

கவிகள் பாடிய எங்கள் உயர்தொழிழை
கந்தையுடுத்து, கலப்பையேந்தி
காலம் காலமாய்த் தொடர்கின்றோம்-ஆயினும்
காலம் எங்களுக்காய் இன்றும் மலரவில்லை
எங்கள் வளநிலங்கள் குழைந்திட

வளமான நீர்ப்பாசனத் திட்டங்கள் ஏதுமில்லை
தூர்ந்த குளங்களைத் திருத்திட
சிங்கள் அரசின் கரங்கள் ஏனோ நீளவில்லை
திசை மாறிய நதிகள் எம் நிலம்
நோக்கி பாயவில்லை-ஆயினும்
எங்கள் தொழிலை ஊக்குவிக்க ஆர்ப்பரித்து
ஆட்சியாளர்கள்-சட்டங்கள் இயற்றினர்

அணைகட்டி, கால்வாய்கள் வெட்டி
நதிகளைத் திருப்பினர்-ஆயினும் அவை
ஏர்பிடித்து கை கன்றிய ஏழைத்தமிழருக்கல்ல
ஆயினும் நாம்
விதைக்கின்றோம்-அறுக்கின்றோம்-வரட்சியும்
வெள்ளமும் பெருகி வரும் காலங்களில்
பெருங்குரலில் அழுகின்றோம்.
எங்கள் கூக்குரலிற்கு இயற்கை
செவிசாய்க்கும் என்னும் தளரா நம்பிக்கை
இன்றும் எம்முள்ளங்களில் உண்டு



நெல் எனும் பொன்னை விதைத்து-
நாமறுத்தாலும்-பொன் பெற்ற பெருவாழ்வு
ஏழை உழவர் எம் மத்தியில் இல்லை
நெல்லிற்கு உச்ச விலை அரசிடம் ஏனோ இல்லை
பட்ட உழைப்பிற்குப் பலனின்றி-
பல வேளை பாதி விலைக்கு
தனியார்க்கு விற்றிடும் நிலை மாறவில்லை
புண்பட்ட எம் பெருநிலைதான் என்ன?

நெல்லோடு, தானியங்களும்
மரக்கறி வகைகளையும் பயிரிட்டோம்,
எம் வாழ்வு சற்றே வளமாகிட-மிளகாயும்,
வெங்காயமும், உருளைக்கிழங்கும் நன்கு விளைந்திட
ஈழச்சந்தையில் நல்ல கிராக்கி நிலவிட
ஊக்கமோடு நாமுழைத்தோம்
வெளிநாட்டுச் செலாவணி குறைந்திட-
உள் நாட்டு உற்பத்தி அதிகரித்திட
வளமான எம் வாழ்வு கண்டு-ஆட்சியாளர்கள்
தம்மக்கள் மீதும் அவர்கள் தேவைகள் மீதும்
கூடிய அக்கறை காட்டினர் -
நாம் வாழ்ந்தாலென்ன மடிந்தாலென்ன-
எண்ணினரோ யாமறியோம் -ஆயினும்
எம் வாழ்வை அவர்கள் கடினமாக்கினார்




எம் விளைபொருட்கள் களஞ்சியமின்றி அழுகிட
உழைப்பிற்கு பலனின்றி பாதி விலைக்கு விற்றிட
வெளிநாடுகள் நின்று வெங்காயமும்,
செத்தல் மிளகாயும், உருளைக்கிழங்கும்
கப்பல்களில் வந்து ஈழக்கரை தட்டின.

நாம் செய்வதறியாது திகைத்து நின்றோம்
படித்த இளைஞர்களும் வேலையின்றி அல்லாட
எங்கள் விளைநிலங்களில்-வறுமை செழிக்க
சிங்களத்தோர்-இனவெறியின் பெருமை
களைகளை நாட்டியது-கண்ணீர் வெள்ளத்தில்
ஏழைகளின் வாழ்வோ மூழ்கியது.

## தரப்படுத்தல்

----------------------------

சிங்கள இளைய தலைமுறை
பல்கலைக்கழக பட்டங்கள் பெற்று-உயர்
அரச பதவிகளில் அமர்ந்து நாடாள
சிங்கள ஆட்சி வகுத்த வன்முறை தரப்படுத்துதல்

செந்தமிழ் இளைஞர் உயர்கல்விக்கு-
சிங்களம் கட்டிய இரும்பு முள்வேலி
தரப்படுத்தல்



கற்றோர் உலகில்
உயர் கல்வியெனும் தீபத்தை
ஏந்தி நின்று எங்கும் ஒளிபரப்பிய
ஈழத் தமிழனின் மாட்சி ஒழிந்திட
தமிழர் கல்விக்கோர் தரப்படுத்தல்
சிங்கள பேரினவாதிகளின் சட்டமானது.

கலைந்த கனவுகளோடும்
கண்ணீர் முட்டிய விழிகளோடும்
பாராளுமன்ற வாயில் நின்று
உயர்ந்த அதன் கோபுரங்களில்
உண்மையில்லையே எனும் வேதனையில்
வாடி நின்ற தமிழ் இளைஞர்
அடிமைகள் நாம்
உரிமைக் குடிமக்கள் அல்ல
எனும் கசப்பான உண்மையை
அறிந்த ஞானக் கலைஞர்

ஆற்றல் இருந்தும், அஞ்சாமைப் பெருநிலையிருந்தும்
காலம் மாறும் என்னும் நம்பிக்கையில்
கண்ணீர் வடிந்திட காத்திருக்கும் வாழ்வில்
எல்லாம் மாயை தானோ கேள்வியானது?

இளமைக் கனவுகளும், நெஞ்சுற்ற
இனிய நினைவுகளும் கல்லூரியில் கலைந்திட
களம் நிறைத்த சோகத்தோடும்-இரும்பாய்
கனத்திடும் மனத்தோடும்-கண்ணீர் முட்டிட
வேலை தேடி-இன வாத அலைமோதும்
ஈழக் கரையோரம் அலைகின்றோம்
தார்மீக அரசின் தரப்படுத்தல் கொள்கையால்
பாதிப்புற்ற தமிழ் இளைஞர் நாம்

## *வேலைவாய்ப்பு*

-----------------------------

எம் இளையதலைமுறையினருக்கு
திறமைகள் இருந்தும், தகுதிகள் இருந்தும்
வேலை வாய்ப்புக்கள் இல்லை
-
சிங்கள அரசியலமைப்பும்
இன, மொழி, மதவாத கட்சி அரசியலும்
ஊழல், அதிகார துஷ்பிரயோகங்களும்
சிறுபான்மைத் தமிழனை பலிக்கடாவாக்கிட
வேலையற்ற படித்த தமிழ் இளைஞர்
கடன் பட்டு பெருநிதி கொடுத்து-கூலிகளாய்
மத்திய கிழக்கை நாடிய அவலம்
கடன் பட்ட பெற்றோர் நெஞ்சிலோ
காவலன் இராவணன் உற்ற துயரம்
.




விபச்சாரத இனவாத அரசியல்வாதிகளும்
சிங்களத் தலைவர்களுக்கு பரிவட்டம் பிடித்து
அமைச்சராக இருக்கை மாறிய தமிழர்களும்
தமிழ் தலைவர்களாக
பதவிகளும் ஏலத்தில் விலைபோயின
தமிழ் தேசியமும் விபச்சாரமானது
ஏழைத் தமிழனுக்கு அரச பணி-முடவன்
கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதையானது
உயர் கல்வி தரப்படுத்தலோ-தமிழ்
இளைஞர் வாழ்வை முடமாக்கும்
போலியோ நோயானது

# தமிழ்

-------------------------



இந்து சமுத்திரத்தின்
இணையற்ற முத்து ஈழம் என போற்றிய தேசம்
எமக்கும் தாயகமான வடகிழக்கு பிரதேசம்
உரிமைக்குடிகள் தமிழர் நாம்-எம்
உயிரும், உணர்வும் தமிழாகி
ஒன்றே குலம் ஒருவனே தேவன்
யாதும் ஊரே யாவரும் கேளீர்
எங்கும் ஒலிக்க
அமுதிற்கு-இனிமைக்கு தமிழை
உவமை சொல்லலாமல்
அமிழ்தினும் இனிய தமிழ்
தமிழ்போல் இனிதாவது உண்டோ?
எனப் போற்றி வாழும் மக்கள் நாம்
கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே
முன் தோன்றிய மூத்த குடியின் வாரிசு நாம்

செம்மொழி எம் மொழி இருக்க
சிங்களம் பயின்றால் மட்டுமே அரச பணி
அரசு அலுவலகங்களில் அனைத்தும் சிங்களம்
ஆட்சிமொழியும் சிங்களம் அரசியலமைப்பாக
பொங்கியெழுந்த எம் முன்னோர் குருதி
1958,1977, -வாழ்ந்த மண்
சிவந்திட சிந்தப்பட்டது நீதியானதா?
எம் உரிமைக்கான அறப்போராட்டம்
அநீதியானதா? சட்டத்தில் குற்றமானதா?




மூன்று வருடங்களில் ஆட்சி மொழி சிங்களத்தை
தமிழர் பயிலல் வேண்டும்-இல்லையேல்-தமிழர்க்கு
அரச பணியில் ஊதிய உயர்வும் இல்லை
பணி நிரந்தரமாக்கலுமில்லை
சிங்கள் மொழியை எம் மத்தியில் பரப்பிட
வேலையற்ற தகுதியற்ற-சிங்களவர்
எமக்கு ஆசிரியர்கள்
பள்ளிகளில், மகாவித்தியாலயங்களில்
கல்லூரிகளில் சிங்களம் பாடமாக
ஆட்சி மொழியாய் சிங்களமும், செந்தமிழும் இருக்க
உறவுப்பாலமமைக்க ஆங்கிலம் கற்போம்
ஒலித்த எம் குரல்-செவிடன் காதில்
ஊதிய சங்கானது?

வறுமையும், வழியற்ற நிலையும்-சிங்கள
அரச மொழிக் கொள்கையும் வாழ்வை பறிக்க
நாம் விழித்துக் கொண்டோம்
எம் உரிமைப் பாதிப்புகளிற்காய்
எம் உரிமை முழக்கத்தை
சிங்களத்திற்கெதிராய் முழங்கினோம்
எம் உறவுகளைத் தட்டி எழுப்பி
எம் விழிப்புணர்வை நாம் காட்டிக் கொண்டோம்.
எம் உரிமை முழக்கங்கள் எங்கும் முழங்கிட
சிறைவாசம் எங்களில் பலருக்கு வாழ்வானது
சதந்திரம் உயிர் மூச்சானது

## சிங்கள குடியேற்றம்

-----------------------------

எம் உரிமைகளை புறந்தள்ளி
நாம் வாழ்ந்த மண்ணில்-நள்ளிரவில்
காளானாய் முளைத்த சிங்களக் குடியேற்றங்கள்

சிறிமாபுர-அனுராபுர, ஜெயந்திபுர-சேருவிலை
அம்பாறை-அல்ல கந்தளாய் என
எங்கள் தமிழ் மண்ணில்
சிறிதாய்ப் பிறந்து பெரிதாய் வளர்ந்த
பல சிங்களக் குடியேற்றங்கள்
இன்றும் தொடரும் அவலம்

எம் வளநிலங்களில் நாம் சிறுபான்மையினராகிட
சிங்கள பேரினவாதம்
அபிவிருத்தியின் பெயரால் புரியும் சதி
திட்டமிட்ட சிங்களக் குடியேற்றம்

பொறுத்தது போதும் தமிழா
பொங்கியெழு தமிழா நாம் அறை கூவிட
அராஜகம் கட்டவிழ்ந்தது.-தர்மிஷ்ட அரசு
தர்மிஷ்ட சமுதாயத்தைத் தோற்றுவிக்க
மலை மேடைகளில் கங்கணம் கட்டிட
தமிழர் வாழும் பகுதிகளில்-1983 ஆடி
இனக்கலவரம் உலகை உலுப்பியது
இனக்கலவரம் ஈழத்தமிழனின் உயிரையும்
வாழ்வாதாரத்தையும் திட்டமிட்டு தீக்கிரையாக்கிட
உயிர் தப்பி இடம் பெயர்ந்த இனம்
உலகெங்கும் அகதிகளான தினம்

We do not like to be robbed of an enemy; we want someone to hate when we suffer. It is so depressing to think that we suffer because we are fools; yet, taking mankind in the mass, that is the truth.
- Bertrand Russell
Get more on RelicsWorld.com

These incidents have changed the entire fabric of Sri Lankan society... Violence became a major tool of socio-political behaviour since then
Chandrika B. Kumaratunga, former Sri Lankan President

1983 ஆடிக்கலவரத்தில்
வாண வேடிக்கையாய் எரிந்த தமிழர் இல்லங்கள்
கொள்ளைபோன தமிழர் செல்வங்கள்

ஆயுதப்படையினரும், பொலிஸாரும் வாழாவிருக்க
எம் மழலைகள், முதியோர்
கனவு வளர்ந்த இறையதலைமுறையினர்
மங்கள வாழ்வு பெற்று இல்லறக் கூடமைத்த குருவிகள்
இனவெறியரால் ஈவு இரக்கமற்று கொல்லப்பட்டனர்.



இனவாத -சிங்களப் அரசியலமைப்பில்
எம் நம்பிக்கை பொய்த்துப் போனது
எம் அரசியல், பொருளாதார, சமூக,
ஆன்மீக, மொழி உரிமைக்காய்
எம் இறையாண்மைக்காய்
எம் பாதுகாப்பிற்காய், வளர்ச்சிக்காய்
எமக்கென ஒரு நாட்டை
தமிழ் ஈழமெனும் தனியொரு இராட்சியத்தை
கோருமளவிற்குத் தள்ளப்பட்டோம்.

இது வெறும் கோரிக்கையல்ல-
எம் எதிர்காலத் தலைமுறையின் வாழ்விற்காய்
நாம் ஏற்ற புனித இலட்சியம்
எம் தியாகங்களால் நாம் யாக்கும் புனித வேள்வி
விண்ணைத் தாண்டி எழும்-எம்
சுதந்திரப் பேரலை

பிறந்த மண்ணில் நாம் அடிமைகளானோம்
உரிமையிழந்து திறந்த சிறைகூடத்தில் வாழும்
அடிமைகளானோம்-
அடிமை விலங்கை உடைத்தெறிய
கண்ணீர் கங்கைகளில் உறவுகள் நீராட
அக்கினியாற்றில் எதிர்நீச்சல் போடும்
போராளிகளாய் நம் இளைஞர் மாறினார்


Fotografía de Gustavo Gutiérrez Merino, teólogo peruano de reconocimiento mundi

எங்கள் துயரங்களில்
எங்களுக்குத் தேறுதல் அளிப்பவரை நோக்கி
எங்கள் கூக்குரலை நாம் எழுப்புகின்றோம்
***வருந்திச் சுமை சுமந்து சோர்ந்திருப்பவர்களே***
***எல்லோரும் என்னிடம் வாருங்கள்***
***உங்களுக்கு இளைப்பாறுதல் தருவேன்***
என்கின்றார் தேற்றரவாளன்

எங்கள் இடுக்கன்களில்-நாம்
அவரை கூவி அழைக்கின்றோம்-ஏனெனில்
தம்மைக் கூவியழைக்கும் ஏழைக்கும்
திக்கந்ற எளியவனுக்கும் அவர் விடுதலை தருவார்
ஏழை எளியவர் மேல் இரக்கம்
கொண்டு அவர்கள் வாழ்வை மலரச் செய்வார்
கொடுமையினின்றும் துன்பத்தினின்றும்
அவர்களை விடுவிப்பார்-அவர்கள் இரத்தம்
அவர் முன்னிலையில் விலைமிக்கது



Leonardo Boff

ஒடுக்கப்பட்ட மக்கள் எம் குருதியால்
வெளிறிய சீவர ஆடைகள் சிவப்பாகின
இனத்துவேஷ நெருப்பில் எழுந்த சுவாலைகள்
போராளியாய் எம்மை புடம் போட்டன

ஆதலால் நாம் இறைமகனை இருகரம் நீட்டி
கண்ணீர் மல்க கூவியழைக்கின்றோம்
ஏழைகளுக்கு இரட்சிப்பளித்து வாழ்வு கொடுத்திட
அவர் மண்ணகம் வந்தார் தாம் பிறந்த ஊரில்
தம்மை வெளிப்படுத்திய போது-இறைவாக்கினர்
இசையாவின் வார்த்தைகளை-இறை
வார்த்தையான அவர் தேர்ந்தெடுத்தார்-




ஆண்டவருடைய ஆவி என் மேலே-ஏனெனில்
என்னை அபிஷேகம் செய்துள்ளார்
எளியோர்க்கு நற்செய்தி சொல்லவும்
சிறைப்பட்டோர் விடுதலையடைவர்
குருடர் பார்வை பெறுவர் என அறிவிக்கவும்
ஒடுக்கப்பட்டவருக்கு உரிமை வாழ்வு வழங்கவும்
ஆண்டவர் அருள் தரும் ஆண்டினை அறிவிக்கவும்
அவர் என்னை அனுப்பினார்
என தம்பணியை அறிவித்தார்




மோயீசனை போன்று மலையில் ஏறி
தம் திருச்சட்டங்களை அவர் கூறினார்
ஏழைகளே நீங்கள் பேறுபெற்றவர்கள்
ஏனெனில் விண்ணரசு உங்களதே
இப்பொழுது பசியாய் இருப்பவர்களே பேறுபெற்றவர்கள்
ஏனெனில் நிறைவு பெறுவர்கள்
இப்பொழுது அழுபவர்களே நீங்கள் பேறுபெற்றவர்கள்
ஏனெனில் அகமகிழ்வீர்கள்
ஆனால் செல்வர்களே உங்களுக்கு
ஐயோ கேடு-ஏனெனில்
உங்களுக்கு ஆறுதல் கிடைத்துவிட்டது

***இப்பொழுது திருப்தியாயிருப்பவர்களே***
***உங்களுக்கு ஐயோ கேடு ஏனெனில் பசியாயிருப்பீர்கள்***
***இப்பொழுது சிரிப்பவர்களே உங்களுக்கு ஐயோ கேடு***
***ஏனெனில் துயருற்று அழுவீர்கள்***
(லூக் 2,24-25)




அவர் மூலமாகவே-பேரினவாத
அடிமைத்தனத்திலிருந்து எம் மீட்பு
நாம் அவரை நாடிச்செல்கின்றோம்
நாம் அவரை தேர்ந்துகொள்ளுமுன்
எம்மை அவர் தேர்ந்துகொண்டார்
நாம் அவரை தொழுது சரணடைந்தோம்

இது நீதிக்கும், அநீதிக்கும்
இடையில் நாம் தேர்ந்தெடுத்த முடிபல்ல
வாழ்வுக்கும், சாவுக்கும் இடையில்-வாழ்விற்கயா
ஈழத் தமிழர் நாம் தேர்ந்தெடுத்த முடிபு
இறைமக்கள் நாம் என்ற புதிய கனவு

ஈழத் தமிழர் நாங்கள்
எங்கள் வளமார்ந்த வாழ்விற்காய்
எங்கள் நம்பிக்கையை
அவர்மேல் வைத்துள்ளோம்
எங்களுக்கென நாம் நம்பியிருக்கும்
தமிழ் ஈழ அரசுக்குமுன்-
இறையரசை நாம் தேர்ந்துகொண்டோம்

தம் அரசை அவர் இங்கு நிலை நிறுத்தினார்
அதன் பிரஜைகள் நாம் எமக்கென
தமிழ் ஈழமாய் மலரவிருக்கும் தனி அரசுக்கு
அவரையே தலைவனாகவும், முதல்வனாகவும்
நாம் தேர்ந்தெடுத்துள்ளோம்

எங்கள் தேவைகளை
அறிந்த அவர் அதற்காய் தம் பிதாவை
வேண்டும்படி மொழிந்தார்
ஆதலால்
***பரலோகத்திலிருக்கின்ற எங்கள் பிதாவே***
***உம் திரு நாமம் பரிசுத்தம் எனப்போற்றப்படுக***
***உம் அரசு வருக***
***உம் சித்தம் விண்ணுலகில் நிறைவேறுவதுபோல்***
***மண்ணுலகிலும் நிறைவேறுக***

***எங்கள் அன்றாட உணவை எங்களுக்கு அளித்தருளும்***
***எங்களுக்கு தீமை செய்தவர்களை நாங்கள் பொறுப்பதுபோல்***
***எங்கள் பாவங்களை பொறுத்தருளும்***
***எங்களைச் சோதனையில் விழ விடாதேயும்***
***தீமையிலிருந்து எங்களை இரட்சித்தருளும்*** ஆமேன் -(மத் 6,9-13)




எம் பரம தந்தையை நாம் வேண்டுகின்றோம்-இதில்
எம் தேவைகள் அனைத்தும் அடங்கியுள்ளன,
சிங்களச் சகோதரர்களை நாம் மன்னிப்போம்
எமை தீயோனிடமிருந்து காத்திட வல்லவர் ஒருவர்
எம் பக்கமுள்ளார் ஆதலால் நாம் அகமகிழ்வோம்

நீதியின்மேலுற்ற நீங்கா வேட்கையோடும்-வாழ்வின்
உண்மையைத் தேடும் அவாவோடும்
எம் உரிமைக்கு உரித்தான புது வாழ்வை
உம் அரசு வருக- உம் சித்தம் நிறைவேறுக
என்ற திரு மந்திரத்தோடும்
***அன்பே சிவமாக*** –
***சத்தியமே தெய்வமாக*** வாழ்வோம்-
என்னும் மாறா நம்பிக்கையொடு
கண்ணீரைத் துடைத்து புன்னகை பூக்கின்றோம்

# ஆயுதப் போராட்டம்

-----------------------------------

சத்திய கிரகமும், சாத்வீகப் போராட்டங்களும்
சாரமற்ற உப்பாகிட-தரப்படுத்தலால்
வாழ்விழந்து தளர்ச்சியுற்ற இளைஞர்
தமிழ் தலைத்துவத்தில் நம்பிக்கையிழந்து
இறைவனை மறந்து-
“பொன் கன்றுக் குட்டியை” தேர்ந்த நேரம்
ஆயுதபோராட்டம் ஆரம்பமான காலம்


The philosophers Søren Kierkegaard and Friedrich Nietzsche foreshadowed existentialism.

பறை நாய்களாய் சுடப்பட்ட இளைஞர்களுக்காய்
இராக்கேலின் அழுகையொலிகள் எங்கும் கேட்க
செந்தமிழ் மறவர் விடமாலை சூடி, ஆயுதம் ஏந்தி
ஆடிய ருத்திரதாண்டவங்களால் தேசம் எரிந்திட
யுத்தம் அனைத்தையும் அழிக்க
இரத்தம் விடுதலையை பழிக்க
கண்ணீர் கங்கைகள் பெருக்கெடுக்க
“பாபேல் வழிபாடாய்”
திசைமாறிய விடுதலைப் பேராட்டம்



பொன் கன்றாய் “ புலிகளை “ வழிபட்டு
காபேல் ஆபேலை கொன்ற கொடுமைகள் செய்து
இயக்க மோதல்களால் இனமழித்து
பயங்கரவாதிகளாய் பழி சுமந்து
இழிவடைந்த விடுதலைப் போராட்டம்

பாரோவுக்கு எதிராக-
யாவேயின் பத்து கொள்ளை நோய்கள்
சிங்கள இராணுவத்தின் அடக்குமுறைக்கெதிராக
போராளிகளின் வன்முறைகள்
மனிதக்கேடயங்களும், சிறுவர் போராளிகளும்
இன அழிப்பும், உச்சம் தொட
பயங்கரவாதம் என்று சர்வதேசம் கண்டித்திட
ஆண்டானும், அடிமையும் வல்லமைதான் நீதி
வன்முறைதான் விடுதலைக்கு நியதி என வழி தவறிட
குருதிக் கறை படிந்த விடுதலைப் போராட்டம்.
***கனவாய், பழங்கதையாய் மாறிட்ட தமிழ் ஈழம்***

To sing about freedom and to pray for its coming is not enough. Freedom must be actualized in history by oppressed peoples who accept the intellectual challenge to analyze the world for the purpose of changing it.

— James H. Cone —

AZ QUOTES

எரிநரகிலும் கொடுந்தீ தேசத்தை எரிக்க
கண்ணீரும், செந்நீரும் தீயணைத்து களைக்க
அகதி, விதவை, அங்கவீனர், அநாதை
விடுதலைப் போராட்டத்தின் விகாரங்கள்,
காணமல் ஆக்கப்பட்டோர் எண்ணிக்கை
இன்றும் சிங்கள அரசு ஏற்காத கோரிக்கை?

வாளேந்திய சிங்கமும், வாய் விரித்து
குமுறும் புலியும் வானில் பறக்கும் கொடிகளாக
கைப்பாஸின் கைதியாய் இயேசுவின் அலங்கோலம்
குளிர்காயும் பேதுரு வடிவத்தில்
கத்தோலிக்க திருச்சபையின் அண்ணக கோலம்
இறைவனும் மதமும் இணையாத எதிர் துருவங்கள்?
இரயில் பாதையின் இணையாத தண்டவாளங்கள்?

இறையாண்மைக்கும், ஆன்மீக, சமூக, பொருளாதார
விடுதலைக்குமான முப்பதாண்டு ஆயுதப் போராட்டமும்
வன்முறையால் பொருளிழந்து விழலுக்கிறைத்த நீராக
தீயில் வெந்தது தேசம்-செந்தணலில் மணந்தது தமிழன் தேகம்

தமிழ் ஈழமும் கலைந்த கனவானது
காணமற் ஆக்கப்பட்டவருக்காய்
கண்ணீர் தவமியற்றும் தாய்குலம்
மறையாத சோகத்தின் வடிவானது?






முறிந்த பனையும்,
எரியும் மனையும் சாட்சியம் பகிர
"***ஒடுக்கப்பட்டோருக்கு உரிமை வாழ்வு***"
முழங்கிய குருவின் சீடர்கள்-
கைபாஸின் மாளிகையில் குளிர்காய்ந்து
விடுதலை இறையிலை (Liberation Theology)
புரட்டிப் பார்த்து ஒதுக்கி வைத்தார்

இனவாதம் அரசாள-அகதிகளாய் தமிழினம்
உலக எங்கும் சிதறி ஓட
இயேசுவின் விலாவை துளைத்துப் பார்த்து
இனவாத அரசு இறப்பை உறுதி செய்தார்

வடிந்த ஒரு துளி நீரில்- ஓராயிரம்
தாய்குலத்தின் ஓயாத கண்ணீர் மழைகள்
சிந்திய ஒரு துளி குருதியில் மடிந்த -பல்லாயிரம்
மானுடத்தின் செந்நீர் அலைகள்

வாஸ்து பார்த்து கட்டிய இல்லங்களோ மணல் மேடுகள்
மூகூர்த்த நேரம் பார்த்து கட்டிய தாலிகளோ
நொந்து அறுந்த நூல் கயிறுகள்

வேதியப் பொய்களால் சாதியம் வளர்த்து
சமூகத்தை சீரழித்த நச்சு களைகள்
அடிமை, குடிமை என்ற பேதங்கள் மலிந்து
பள்ளர், பறையர், கரையார், நளவர்.
சக்கிலியர், அம்பட்டர். முக்குவர். வன்னான்
சண்டாளர், கோவியர் என குலம் கண்ட இனம்
இன்று உலகெங்கும் அகதியாய் சிதறி வாழ்ந்தும்
சாதியம் மதவேதம் எனும் ஈனமானுடம்

பகை கொண்ட உள்ளம்-துயரத்தின் இல்லம்
கண்ணிற்கு கண், பல்லிற்கு பல் நீதியாக
கண்ணீரும், செந்நீரும் சிந்தும் கொடிய போராட்டம்
யுத்ததில் கொலைகள் இல்லை
கொல்வது குற்றமில்லை நீதியான களியாட்டம்

பகைமையை பகைமையால் வெல்ல முடியாது
பகைமையை அன்பினால் வெல்லுங்கள்
புத்த பெருமான் போதனையும்
உங்கள் எதிரியையும் அன்பு செய்யுங்கள்

இயேசு பெருமான் வார்த்தைகளும்
-கேட்பார் இன்றி காற்றில் கலந்தன



சிலுவையில் அறைந்து யூதமதவாதம் கொன்றவருக்காய்
கத்தோலிக்க மதவாதிகளின் சிலுவை யுத்தங்கள்
இயேசுபெருமானை நாளும் சிலுவையில் அறைந்திட,
வல்ல யாவேயும், அல்லாவும் மோதிக்கொள்ள-கொல்ல
“ஏலி, ஏலி லமா சபக்தானி”-என் தேவனே! என் தேவனே
ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்
அப்பாவிகள் கதறல் காற்றில் கலந்து
காதுகளைச் சேர்ந்து மனதை வருத்திட
மத, இன மொழி, நிறவெறி யுத்தங்கள்
மனிதத்தை சிதைத்து இறைவனைப் பழித்தன.

என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்?
என்று மடியும் எம்மவர் பேரினவாத மோகம்?
சிந்திடும் குருதி எல்லாம் சிவப்பு நிறம்
அழுதிடும் கண்ணீரும் ஒரே நிறம்
அழுகையும், புலம்பலும் முகாரி ராகம்




அறிவுக்கனியில் ஞானமில்லை
ஆணவத்தை சிலுவையில் அறைந்தவரே
தூய மனமாய் இனிக்கும் வாழ்வுக் கனியானார்
அறிவுக்கனியும், வாழ்வுக் கனியும் நம்முள்ளே
அறிந்தால் தூய உள்ளமே ஏதேன் வனம்
இறைவன் உலாவிடும் நந்தவனம்

யுத்த முனையில் சிறுவர் போராளிகள்
மனிதக் கேடயங்கள் தாங்கிய ஆயுதவாதிகள்
சத்தமின்றி எரியும் டயர்களில்
இராணுவத்தின் தகனப் பலிகள்
அகதி, அங்கவீனர்,விதவையாய்
சிங்கள, தமிழ், முஸ்லீம்
மூவினத்தின் அவல நிலைகள்
தமிழ் ஈழமோ கானல் நீரான நிலைகள்

ஆணவமே தீமை, அன்பே இறை தன்மை-
உண்மையே விடுதலை
ஆன்மா நாம் என்பதே நம் மெய் நிலை
புத்தர் பெருமானோ தியானத்தில்
இறைமகனோ சிலுவையில்
அகதிகளோ தெருக்களில்

**உலகெங்கும் சிதறிய இனம்**
**ஒன்று கூட வருமோ ஈழச்சுதந்திர தினம்**
பாபிலோன் ஆறுகளருகே அமர்ந்து
நாங்கள் சீயோனை நினைத்து அழுகின்றோம்
அலரிச் செடிகள் மீது தந்தி அறுந்த எங்கள் யாழ்கள்
முறிந்த பனையின் நிழலில் அகதிகள்
எங்கள் ஓலைக் குடில்கள்

இன ஒற்றுமையின்றி தம்முள் போராடும்
மூவேந்தராய்- இன்றும் ஈழத் தமிழினம்
அரியிணையில் இன்றும் அரசாளும்
பேரினவாத சிங்களம்
பரபாஸை தேர்ந்து இயேசுவை
சிலுவையில் அறையும் யூதமத நீதி
சஹரானின் குண்டு வெடிப்பில் அம்பலமான
அல்லாவின் மதவாத பயங்கர அநீதி
கள்வர் குகையான ஆலயங்களுக்கு
கசையால், குண்டுகளால் கும்பாபிஷேஷங்கள்?
இன்றும் மதவாத இருக்கையில்
அன்னாஸ், கைபாஸ், பிலாத்துகள்

அப்பாவிகள் வாழ்வோ கல்வாரிப் பயணங்கள்
இறந்து உயிர்த்தெழ-தமிழ் ஈழம்
இறைமகனல்ல என்ற உண்மைகள்-வாழ்வில்
ஏதும் நிலையல்ல என்ற நிதர்சனங்கள்
ஆணவம் துறந்து நம்மை நாமறிதலே மெய்யான விடுதலை
**சச்சிதானந்தமமே நம் பெருநிலை**

அடக்கியாளும் பேரினவாதமோ க்ஷத்திரிய ஜாதி
உழைப்பை சுரண்டிடும் முதலாளிவர்கமோ வைசிய ஜாதி
அபினும், போதையுமான மதவாதமேத பிரமாண ஜாதி
அடிமைகளான தமிழினமோ சூத்திர ஜாதி
இன்றும் வாழும் மனுநீதி என்றுதான் அழியுமோ?
சமத்துவ சமதர்ம சமுதாயம்
உழைக்கும் வர்கத்தின் கலைந்த கனவான நீதி ?

இருத்தலியல் (Existentialism)-ஆளுமைவாதம் (Personalism)
விடுதலை இறையியல் (Liberation Theology)
அரசியல்  இறையில் (Political Theology)
ஒடுக்கப்பட்ட மக்களுக்கான புதிய வேதம்
ஓதுவாரின்றி நூல் நிலையங்களில்
வெறுமனே கண்காட்சியான அவலம்




"realization" and the needs or demands of social life. Personalism also implies inter-personalism, as Benedict XVI stresses in *Caritas in Veritate*:

> As a spiritual being, the human creature is defined through interpersonal relations. The more authentically he or she lives these relations, the more his or her own personal identity matures. It is not by isolation that man establishes his worth, but by placing himself in relation with others and with God.[10]

மானுட அவலத்தில் துன்புறும் கிறிஸ்துவை
காணாத மதம்-குருடனுக்கு
குருடன் வழிகாட்டும் அவலம்
ஒடுக்கப்பட்டோர் உரிமை வாழ்வுக்காய்
குரல் கொடுக்காத மதம்-ஊமையும், செவிடுமாய்
ஆளும் வர்க்கத்திற்கு சாமரம் வீசும்
அண்ணக இனம்

கொடிய சிங்கங்களுக்கு-அடிமைகளை,
ஆதிக்கிறிஸ்தவர்களை பலிகொடுத்தல்-
அன்றைய ரோம சம்ராஜ்யத்தின் கொண்டாட்டம்
வாளேந்திய சிங்கத்திற்கு -தமிழினம்
ஆதிக் கிறிஸ்தவர்களாய்-பலியாவதைக்
கண்டும் காணாதிருத்தல்- திருச்சபைக்கு திண்டாட்டம்
பாரோவுக்கும், நீரோவுக்கும் அமர்ந்த அரியாசனம்
மதவாத அன்னாஸ், கைபாஸ், அமர்ந்திட
இன்றோ வத்திகானின் சிம்மாசனம்
ஆசனங்களிலும் சிங்கத்தின் இலட்சனைகள்?

இறைசாயலாய் மானுட வடிவம்
ஆதாமின் ஆணவத்தால் சாபமான இறைநிலை
இயேசுவின் பரிபூரண சரணாகதியால் வரமாகிட
இறை வார்த்தையை தவமாக்குபவன் வாழ்வில்
கிறிஸ்துவின் இரண்டாம் வருகை நிதர்சனமே

அரசியல், சமூக, பொருளாதார, ஆன்மீக
சமத்துவம் கிடைக்காதவரை உலகில் அமைதியில்லை
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
பூவுலகில் நன்மனத்தவருக்கு அமைதி
ஒரு நாணயத்தின் இரு பக்கங்களே
தூய மனமே இறை மனம்- இறைமகிமை அங்கே
நல் மனமே இறை மனம்- அமைதியும் அங்கே

எங்கள் கனவுகளை -இன்றும்
நெருப்பும், இறப்பும் அச்சுறுத்த
குருதியும் கண்ணீரும் வெள்ளமிட
கயிறறுந்த காற்றாடியாய் அல்லாடி-கண்ணீர்
கடலில் நீராடும் பரதேசியாய் ஈழத் தமிழன்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-22.2.2022*

# அக்கினி அம்புகள்

---

சிங்களப் பேரினவாதச் சிலந்தியின்
கொடிய அரசியலமைப்பு வலையில்
சுதந்திர கீதமிசைத்த செந்தமிழ் குயில்
சிறைப்பட்ட அவலநேரம்

பௌத்த விகாரைகளிலும்-பேரினவாதிகளின்
அரசியல் மேடைகளிலும்-ஈழத் தமிழனை
அச்சுறுத்தும் இனவாதத் தியானங்கள்
அமைதியை பழிக்கும் பிரித் ஓதல்கள்

1983-ஆடிக் கலவரத்தில்
பேரினவாதத்தின் கொடிய காவடியாட்டம்
குண்டர்கள் கையிலோ செடிக்கயிறு
ஈழத்தமிழன் முதுகிலோ-கொடுமுள்ளு

சொத்தும், சொந்தமும் சொக்கப்பனையாய் எரிந்திட
ஆண்டபரம்பரை அகதிகளானது
வாழிடமிழந்து புகலிடம்தேடிட
கடல் கடந்தோடும் நிலைக்கானது

தமிழ் நெஞ்சிலோ கனல் கக்கும் எரிமலையாய்
பொங்கிடும் சுதந்திர உணர்வு
எம் வாழ்விலோ கனத்திடும் பெருஞ் சுமையாய்
சிங்களம் பூட்டிய அடிமை விலங்கு

மண்ணின் விடுதலைக்காய் மறத் தமிழன்
எரிமலையாய்ப் பொங்கி , கடும் புயலாய் மாறி
விட மாலை சூடி, கனல் ஏந்தி ருத்திர தாண்டவமாடும்
விடுதலைப் புலிகளாய் உருமாறிட
அமைதிப் பூங்காக்களில்- எரிமலைகளின் கண்விழிப்பு
தென்றல் விளையாடிடும் நீர்சுனைகளிலோ
கொடுஞ் சூறாவளியின் அணிவகுப்பு

கண்ணீர் கங்கைகளும் குருதியாறுகளும் கரைபுரண்டோடிட
சோகச் சுனாமி வந்தது, விழிநீர் காய்ந்து சோகம் பொங்கிட
நெஞ்சம் பாலையானது-பிறந்த மண்ணே
திறந்த சிறைக்கூடமான அவலமிங்கே
எரியும் டயர்களே இளையதலைமுறைக்கு சிதைகளான
இராணுவ மரியாதைகளுமிங்கே.

வான்பாயும் ஏவுகணைகள் விமானங்களுக்கு-தீ மூட்டிட
நிலக்கண்ணிகள் இராணுவத்திற்கு புதைகுழிகள் வெட்டிட
ஈழமெங்கும் பிணவாசம் இல்லமெங்கும் இழவோலம்
வழிபார்க்க- கண்ணீர் விழிமறைக்கும்
வழிநடக்க நிலக்கண்ணி அச்சுறுத்தும்

எரியும் டயர்களில்-கருகிடும் பிணங்கள்
நெஞ்சில் அக்கினி மூட்டிட
அச்சக் குளிர் காய்ந்த அப்பாவிகள்
வனவாசம் போனார் ஆயுதம் ஏந்திட

இளைய தலைமுறையை கீறிப்பார்த்து புரட்சியின்
ஆணிவேரை, அறுத்திடத் துடிக்கும் ஆய்வுகள்-எரியும்
டயர்களிலோ வளரும் தலைமுறையை எரித்துப் பார்த்து
புரட்சித் தீயை அணைக்க முயலும்-கொடிய முயற்சிகள்

எரிமலையைச் சிறையிலிட்டு-கடும் புயலை
காட்டிற்கு விரட்டி
சுதந்திர குயிலைக் கூண்டிலடைத்திட
இராணுவத்தின் ஓயாத படையெடுப்பு

அடக்குமுறையில் அராஜகத்தின் வன்முறை
ஆயதக் கலாச்சாரத்தின் நிறங்களில்
குருதிச் சிவப்பும் சாவின் கறுப்பும்

கண்ணீரில் கரையாத வண்ணங்கள் பூசி
காலத்தால் அழியாத சோகத்தழும்புகள் தாங்கி
ஆண்டவனைத் தேடிடும் அப்பாவிச்சமூகம்

சுற்றி வளைப்புகளில் காணாமல் போனவர்கள்
கருகிச் சாம்பலாயிட
கண்ணீர் கடலில் மூழ்கிடும் உறவுகள்

தீயும், ரவைகளும் தீண்டித் துளைத்த தேகங்கள்
மண்ணில் வீழ்ந்து மறுபடி முளைத்திட
ஓயாத யுத்தம்-கங்கையாய் ஓடிய இரத்தம்

பெற்றோரையும், உற்றோரையும், கற்றாரையும்,
காவலரையும் சுட்டழித்த இராணுவம்
சுடுகாட்டில் வெற்றிக் கொடியேற்ற
ஒப்பாரிகளின் மத்தியில் ஒலிக்கும் தேசிய கீதம்

கண்ணுக்கு கண் பல்லிற்குப் பல் ஆயுதவாதிகளின் கீதை
பகைவனுககு அன்பு புத்தர். இயேசுவின் மாறாத போதனை

சட்டமும் நீதியும் புத்தகங்களில் உறங்கிட
சாக்கிய முனியும் தம்மமும் சங்கத்தில் சிறைப்பட
முப்பிணியால் வாடிய தேசம்

ஆயதவாதிகளின் அராஜக வேதத்தில்-நாளும்-
அப்பாவிகளின் சிலுவைமரணங்கள்
சிலுவை அடியிலோ-கண்ணீரோடு
அபலைத் தாய் மரியாள்கள்

அப்பாவிகளை பணயக் கைதிகளாக்கி
கப்பங்கள் வசூலிக்கும்- துப்பாக்கி மனிதர்கள்
சிறுவர்களை போராளிகளாக்கி-பெற்ற வயிறு
பற்றி எரிய சோகத் தீயை மூட்டிய அரக்கர்கள்.

தேசியம் பேசிய அரசியல்வாதிகளின் பிள்ளைகளுக்கு
அயல் நாடுகளில் உயர் கல்வி-ஏழ்மையும்
அச்சமும் வாட்டிடும் ஏழைகளின் பிள்ளைகளுக்கு
வனங்களில் கட்டாயப் போர்ப் பயிற்சி

செலவர்களின் பிள்ளைச் ''செல்வங்களுக்கு'' கோடி மதிப்பு-
ஏழைகளின் வாரிசுகளுக்கோ செல்லாகாசின் அவமதிப்பு
அப்பாவிகளின் முதுகில் -தலைவர்களின் பவனி
அபலைகளின் விழிகளிலோ- கண்ணீர் ஊறணி

***கண்ணீருக்கும், குருதிக்கும் நிறத்தில் பேதமில்லை***
***நீருக்கும் காற்றுக்கும் இன, மொழி, மத பேதமில்லை***
***மானிடரே ஒன்று படுங்கள் –அமைதிக் கீதமிசையுங்கள்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30.3.2-23*

# அக்கினிப் புஷ்பங்கள்

---

நிலவு தூங்கிய அமாவாசை இரவில்-தமிழ்
உறவுகளைச் சாய்க்க சிங்களத்தின் படையெடுப்பு
கண்ணீரில் மூழ்கிய புதுக்குடியிருப்பு
முகமூடிகள் வடிகட்டச் சுற்றி வளைப்பு

வெடிகுண்டுகளின் வெளிச்சத்தில்-அக்கினி கக்கி,
குடியிருப்புகளைத் தீயத்து-உயிர்கள் தேடி-
நச்சரவங்களாய் ஊரும் இராணுவம்

குரைத்த நாய்கள் குண்டுகள் துளைத்து
கொசுக்கள் மொய்த்து விறைத்துக் கிடந்திட
முளைத்த பயிரையும், செழித்த ஊரையும்
சிதைத்து அழித்த இராணுவத் தாங்கிகள்

குருதியும், தசையும் குழம்பிக் கலந்த மண்ணை
அடிமைத்தன அறுவடைக்காய்-ஊரடங்கில் உழுது
பயங்கரவாத தடைச்சட்டத்தில்
அச்ச விதைப்பை நடத்திய அராஜகம்

மனை மாட்சியழிய, மாதா, பிதாவோடு சொந்தமழிய
குண்டுகளால் சிவந்த வானில் புது உதயம் வந்ததென்று
கொக்கரித்து கூவியது ஏமாந்த சேவலொன்று

முறிந்த பனையும், எரிந்த தென்னையும் வழியெங்கும்,
தீய்ந்த தென்றலும் தீயுண்ணும் சவங்களும் வாழிடமெங்கும்,
குருதியும் தசையும் குழம்பிக்கலந்த மண்ணோ-பூமியெங்கும்

விடுதலை விருட்சங்கள் பூத்திட
அக்கினிப் புஷ்பங்கள் சொரிந்திட
இது போர்க் காலம்

கைதான இளஞருக்கு எரியும் டயர்கள் சிதையாகிட
காலன் புரியாய் புதுக்குடியிருப்பு மாறிட
தீமேயும் ஊர்கள் பகைமையைப் பறைசாற்றிட
பிணவாடை முகர்ந்த உயிர்கள்-விடுதலையைச் சுவாசிக்க,
சுதந்திரக் காற்றைத் தேடிக் களைத்தன

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
Pax.Ravichandra-3-04-2023

# அக்கினிப் பறவை

குண்டு வீச்சில் கருகிய தாலிகள்தான் எத்தனை?
கொடுஞ் சிறைகள் பறித்த-தாலிகள்தான் எத்தனை?
எரியும் டயர்களில் உருகிய மாங்கல்யங்கள்தான் எத்தனை
துப்பாக்கிச் சூட்டில் அறுந்த மஞ்சள் கயிறுகள்தான் எத்தனை?

சூடிய மணமாலை வாடுமுன்-மலர்களும்
மஞ்சளும், குங்குமமும் கலைந்ததென்ன?
மணமாலையே-மணமகனிற்குப்
பிணமாலையானதென்ன?

பூச்சூடும் பூவை மணமாலை சூடுமுன்
கருகிய பூவானதென்ன?
சூடிக் கொடுத்த மணமாலையை
அறுத்துப் பறித்த அராஜகம்தான் என்ன?

அடிவயிற்றில் அவியா நெருப்பெரிய
கைத்தலம் பற்றிய கணவன் மடிந்திட
கைமை பூண்ட இளந் தாய்கள்தான் -தமிழ்
ஈழத்தில் எத்தனை? எத்தனை?

மஞ்சளும் , குங்குமமும், மாங்கல்யமும் கூறையும்
அக்கினி வண்ணங்களாயிருப்பது-சுதந்திரத் தாயே
உன் நெஞ்சில் எரியும் சுடரைச் சுட்டவோ?

பூவாய் பூத்த பூவையரைக்
கறபழித்து கொன்ற அராஜகம்
தாய்களையும், போய்கள் சிதைத்து
காமம் தணித்த அசுர யாகம்

கண்ணீரால் கழுவியும் போகாத கறை
காலமெல்லாம் நிலைத்தால்-வாழ்வே பெருஞ்சுமை
தீச்சூடி- தீயில் மலர்ந்த பெண்மை
கற்பே பெண்ணின் மேன்மை

அக்கினியாற்றிலும், அணையாத
எரிமலைக் குழம்பிலும் பெண்மையின் எதிர்நீச்சல்
பூபாளம் பாடும் புள்ளினமாய்-களத்தில்
விடுதலைப் பறவைகளின் தீப்பாய்ச்சல்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***

Pax Ravichandra-3.04.2023

# அல்லாஹூ அக்பர்

---

<u>காத்தான்குடி</u>

நாம ரூபம் இல்லாத ஏகன் இறைவனை
அளவற்ற அருளாளன்-நிகரற்ற அன்புடையோன்
என போற்றி புகழும் ஈசனை
அல்லாஹ் அக்பர் என்றே கண்ணியமாய் வாழ்த்தி
ஐவேளை பள்ளிகளில் தொழுது மகிழ்ந்தவர்கள்
புள்ளிமான்களாய் வேட்டையாடப்பட்டார்
பலிக்கடாக்களாய்க் சுட்டுக் கொல்லப்பட்டார்.

உடல் துளைத்து உயிர் பறித்த குண்டுகள் சுவர்களில் ஓய்வு கொள்ள
உயிர்கலம் உடைத்து ஓடிய குருதி அடைக்கலம் தேடி தவித்து நிற்க
தொழுகையில் மூழ்கியவர்கள்- உறவுகளை
அழுகையில் மூழ்கவிட்டே பிணமாகிக் கிடந்தார்-

தொழவந்தவர் மீளாத் துயில் கொள்ள
அழவந்தவர் தொழுதே அழுதார்
“யா அல்லா ஏன் எம்மை கைவிட்டாய் ”

<u>ஏறாவூர்</u>

அன்னையின் மார்பில் பால்குடி மறவாத சேயும்
தந்தையின் அணைப்பில் மழலை மறவாத தனயனும்
அம்மையப்பனோடு மாண்டு கிடந்திட-கொஞ்சிக் குழாவி
கூடி மகிழ்ந்து உறங்கிய உறவுகள்-குடிசைகளில்
ஈக்கள் மொய்த்திட உடலங்களாய் நாறிக்கிடந்தார்

கருவோடு கர்ப்பிணித் தாயும்-மூப்பின் அழகோடு
பெற்றோரும் ஒன்றாய் மாண்டு கிடந்திட
மொய்த ஈக்களின் ரீங்காரம் முகாரியானது

அன்னை தானிங்கே தன் ஆருயிரை தேனமுதை
குண்டுபடாமல் காத்திட தன்னுடலை கவசமாக்கினாள்
தந்தை தானிங்கே குஞ்சுகளை காத்திட
நெஞ்சில் குண்டுகள் தாங்கினான்.

எமனும் தன் இயலாமைக்காய் வருந்திட
காத்தான்குடியில்- பள்ளிவாயில்கள் இரண்டு
“காத்தான்” யாருமின்றி காலன் புரியாயின
ஏறாவூரில் சேரிகள் சில யமபுரியாயின

வன்முறையின் வடிவங்களாய்
வலுவிழந்த விடுதலைப்போராட்டம்
பயங்கரவாதமாய் திசை மாறிய சூதாட்டம்

வெறிகொண்ட வேங்கையும்-மதிகெட்டு
வெள்ளாடுகளை குட்டிகளோடு வேட்டையாடிட
விடுதலைப்போராட்டத்திலும்- தீராக் கறையாய்
பாவச் சுமையாய் படிந்த பயங்கரவாதம்

இதயங்களில் ஏற்றி வைத்த சுதந்திர நெருப்பு
இனவாதப் புகையாய் உருவழிய
திசைமாறிய பயணத்தில் போராட்டம் நெறி தவற
இனங்கடந்த நல்லிதயங்கள் வாடி நலிந்தன

கள்ளிருக்கும் மலர் வனத்தை
முள்ளிருந்ததென்று சொல்லி அழிக்கலாமோ?
கனிகொடுக்கும் பழமுதிர்ச்சோலையை
நாகம் குடி வந்ததென்று சொல்லி எரிக்கலாமோ?

பாங்கொலியாய் ஒலிக்கும் அழுகையும்
வல்ல அல்லாஹ்வை கூவியழைக்கின்றது
இன்றும் ஆபேலின் இரத்தம்-**அல்ஹகமிடம்**( (நீதியுள்ளவர்)
சகோதரன் காயீனின் அநீதிக்காய் நீதிகேட்கின்றது.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-30.3.2023

# அமைதி காக்கும் படை

---

கன்னியர் மார்பில கைக்குண்டுகளையும்,
அன்னையர் ஆடைகளில் ஆயுதங்களையும் தேடுகின்ற
காடையர்தான் இந்திய அமைதிப்படையினரோ?
ஈழ மண்ணில் அமைதி நிலை நாட்ட வந்த
பாரத மண்ணின் அகிம்சா புத்திரரோ?

மகா வீரரும்,கௌதம புத்தரும், காந்தியும்
வாழ்ந்த மண்ணின்-வீர மைந்தர்கள்
துச்சாதனன்களாய் மாறிய அவலமுமிங்கே,
கீதையும், தம்மபதமும் தந்த பூமியின் தேவர்கள்
வாதையும், அதர்மமும் புரிந்த கொடுமையுமிங்கே.

மழலைகளின் அழுகுரலும், மங்கையரின் கண்ணீரும்
ஈழத்தமிழ் மண்ணில் இன்னும் ஓயவில்லை
பாலிற்காய் மழலைகள் அழ, பறிபோன கற்பிற்கும்,
உயிர்போன காதலினிற்குமாய் பூவையர் அழ,
உருகும் விழிகளால் பெருகும் கண்ணீர் வெள்ளம்
ஊரையும், உறவுகளையும் மூழ்கடிக்க,
இந்திய அமைதிப்படையால் இருந்த நிம்மதியும்
இறந்த பிணமானது வடியும் கண்ணீரில்
அஸ்தியாய் கரைந்துபோனது.சோகம் சொந்தமானது

வெள்ளையரும் வியப்புற இந்தியத் துரைகளால்
ஈழமெங்கும் எட்டப்பர் கூட்டம்-
பிள்ளைகளெல்லாம் கட்டப்பொம்மன்களாகிட
வானை முட்டிய சுதந்திரகோஷம்.

இந்திய அசுரனை என்று நாமழிப்போம்?- எம்மவர்
சிந்திய குருதிக்கு என்று நாம் பழிதீர்ப்போம்?
எம் அன்னையர் கண்ணீரை என்று நாம் துடைப்போம்?
எம் தங்கையர் கற்பிற்கு என்று நீதி வழங்குவோம்?

சுதந்திரக் கவிபாடிடும் ''புதிய பாரதிகளின்''
விடுதலை முழக்கங்கள் வீதியெங்கும் ஒலிக்க
எதுவும் நிரந்தரமில்லை எம்
சுதந்திரமொன்றே நிரந்தரம்

உலகை அதிரவைத்த, எச்சில் இலைகளாய்
குண்டுகள் உண்டு துப்பிய உடலங்கள் தெருவெங்கும்-
தமிழ் ஈழமே உயிர் மூச்சான வேங்கைகளால்-அஞ்சிய
ஆடுகளும் புலிகளாய் ஆண்மை பெற்ற மாற்றங்கள்

சாவும், அழிவும், சகோதரிகள் வயிற்றில்
கலப்பினச் சந்ததியும் அமைதிப்படையின் நன்கொடையாக,
இனவாதப் பேயும், ஏகாதிபத்திய பூதமும்
ஒன்றிணைந்த கூட்டணியோ கௌரவப் படையணியாக
ஈழமண்ணில் -இன்று ஒரு புதிய குருஷேத்திர யுத்தம்

எட்டப்பனும் அரியணை அமர்ந்திட
கட்டபொம்மன் கானகத்தில் வாழ்ந்திட
இந்திய ஏகாதிபத்தியமும், சிங்கள இனவாதமும்
ஈழத்தமிழர் எம்மேல் திணித்திட யாத்த
இந்திய இலங்கை ஒப்பந்தம் அடிமைச் சாசனமோ?-
இல்லை இந்தியருக்கு வழங்கிய உரிமைப் பட்டயமோ?

உயிர் தமிழிற்கும் உடல் மண்ணுக்குமாய் -எரிநெருப்பில்
தம் எஃகு தேகத்தை தினமுருக்கும் தவப்புதல்வர்
தமிழ் ஈழத்திற்கு நிகரில்லாத அரசியல் தீர்வை
எதிர்த்திடத் மூண்ட யுத்தம்

பூவையரே வெடிகுண்டு தாங்கி நடமாடும் எரிமலையாகிட
பொன்னுடலே புது சுடராய் சிதறி ஒளி சிந்திட
அன்னை காளியால் புதிய மகிசுவர வதம்

ஊர்களும், மனைகளும் உருவழிந்து காடாகிட,
அன்னையரும், கன்னியரும் தீக்குளித்துச் சுடராகிட
சீரழிந்த தேசமெங்கும் ஒப்பாரியும், புலம்பலும் ஒலித்திட
அமைதி பகற் கனவானதென்ன?

உயிரால் ஈகைச்சுடரேற்றி, உதிரும் தேகத்தை
செஞ்சந்தனமாய் தேய்த்து சுவாசக்காற்றிலும்
சுதந்திர வாசம் வீசிட வேங்கைகளின் விடுதலைக்கீதம்
புலிகளின் தாகம் தமிழ் ஈழத் தாயகம்

***வாழ்க நிரந்தரம் -வாழ்க தமிழ்மொழி-வாழிய வாழியவே!***
***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
*Pax Ravichandra-27.03.2023*

# அம்மா சீக்கிரம் வாங்க

---

போர் ஓய்ந்தும் தணல் ஆறாத யுத்தபூமியில்
முறிந்த பனையாய் மானுடம் வாடிட
ஆறாத மனக்காயம் -தீராப் பெரும்பிணியாய் மாறி
நடைப்பிணமாய் வாழ்வு சிதைந்திட
புலம்பெயர்ந்தவர் அனுப்பும் பணத்தால்
புதுப்பழக்கமாய் மதுவும்,
கேரள கஞ்சாவும், போதைவஸ்தும்
இளைஞர் வாழ்வை நஞ்சாக்கிட-அமைதிதேடி
விரக்தியால் அழிவுறும் மனிதகுலம்

விந்தியா முதல் சிறுமி ஷிரோமிவரை பாலியல்
வன்முறைக்குப் பலியாக, பாதுகாப்பில்லாத
வட புலத்தில் புதுப் பயங்கரவாதமாய்-போதைவஸ்து,
மது, பாலியல் வன்முறைக் கலாச்சாரம்

புலம்பெயர்ந்து நீ போகத்-தாயே இடம்பெயர்ந்து வாடிய
உன் மொட்டு இன்றோ பூவனமாய் பூத்துக் குலுங்கிட,
கண்படும் என் அழகை மொய்கும் காமவிழிகள்
களவாய் சிதைத்திடத் துடிக்கும் காமப்பேய்கள்

வேலியே பயிரை மேயும் அபாயமாய் மாமன் விழிகள்-
அண்டை வீட்டுக் காளையர் கண்சாடைகள்
விளையாடப்போனாள்-விளையாட்டாய்
தொட்டுப் பார்த்து இரசிக்க தடவல்களிலும்,
உரசல்களிலும் காமச்சூடு தணிக்கும் கழிசடைகள்

நாளும் செய்திகளோ கற்பழிப்பு, கொலையாக
பள்ளி செல்லும் பாதையும் தீக்குளிக்கும் வழியாக
பயமாய் இருக்குது அம்மா, மானம் அழிந்து
நான் மடியுமுன்- தாயே வந்துவிடு

பொன்மேனியை மொய்த்தே புண்ணாக்கும் போதை விழிகள்
பாலியல் வல்லூறு செய்யத் துடிக்கும் காமப்பேய்கள்
கண் படும் போதெல்லாம் புண்ணில் விழும் அமிலத்துளிகளாய்
பூ நெஞ்சம் புண்பட, இடையினம் தொட்டு, மெல்லினம் சிதைய
வல்லினம் என்னை வல்லாங்கு செய்யமுன்
தாயே வந்துவிடு-உந்தன் குழந்தை
தமிழினி என்னைக் காத்துவிடு

பூ மொய்க்கும் தேனீக்களும்,
புண் மொய்க்கும் ஈக்களும் நிறைந்த உலகில்
கண்மொய்க்கும் காமுகர் பார்வை
கருந்தேளாய் மேனி ஊரக் கலங்குகின்றேன்-அம்மா
உன் வரவிற்காய் தவமாய் தவமிருக்கின்றேன்

நீராடும் போது நிம்மதி நாடி-தாயே
கண்ணீரில் நீராடும் என் விழிகள்-அஞ்சி
துயிலும் போது கண்ணீரால் நனையும்
என் தலையணை, பஞ்சணைகள்

தேனீக்கு கொடுக்கும், ரோஜாவிற்கு முள்ளும்
ஈந்த இறைவன் பெண்மைக்குத் தந்தது ஏதம்மா?
என் அழகே எனக்குப் பகையாக
பரிதபித்து புலம்பியழைக்கின்றேன்
வா அம்மா சீக்கிரம் வா

தாய்மடி காணாத பருவக்குமரி-இன்னும் உந்தன்
சின்ன ராஜகுமாரி கொழுகொம்பில்லாத முல்லைக்கொடி
உன் மடியில் நான் முகம் புதைத்து என் மனப்பாரம் தீர
அழவேண்டும், அச்சமின்றி நான் வாழ-அருகில்
அன்னையே நீ வேண்டும்
வருவாயா அம்மா? சீக்கிரம் வந்துவிடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra

# அணையாத நெருப்பு

---

அணையாத நெருப்பினை ஆவிக்குள் மூட்டு
கலையாத கனவினை கண்களுக்கு காட்டு
தணியாத தாகத்தை நெஞ்சினில் ஏற்று
விலைமதிப்பில்லா விடுதலைக்காய்-தமிழா
போர் முரசை மீண்டும் கொட்டு

முடியாதது என்று ஏதுமில்லை-தமிழா
விடியல் வராத இரவுகளுமில்லை
விழுவதால் அலைகள் மடிவதில்லை
தேய்வதனால் நிலவு அழிவதில்லை.

சோகங்கள் சுமக்காத இதயங்கள் இல்லை
கண்ணீரில் மூழ்காத விழிகளுமில்லை
சாவு தீண்டாத இல்லங்களுமில்லை
ஞானம் தேடிடத் துறந்து வா
புதிய சித்தார்த்தனாய் எழுந்து வா

உறங்கிடும் கல்லறைகள் உயிர்த்தெழட்டும்
கலைந்திட்ட கனவுகளும் புத்துயிர் பெறட்டும்
எழுந்த போராடு -விழுந்தவை விதைகளாகட்டும்
விடுதலையின்-புதிய முளைகளாகட்டும்

சரிந்தவையும் குண்டடிபட்டு சாய்ந்தவையும் உரமாகிட-
உறுதிகொண்ட நெஞ்சோடு எழுந்துவா
இன்னுமொருமுறை போராடுவோம்-எம் விடுதலைக்காய்
இடைவிடாது அக்கினி நீராடுவோம்

விழுந்தவை ஆகுதிகளாகட்டும்-புதிய
விடுதலை யுத்தம் வேள்வியாகட்டும்
காயமாகிப்போன காயங்கள்- விழுப்புண்களாகட்டும்
கருவிழிகள் சிந்தும் நீர் தீர்த்தமாகட்டும்

அந்திச் சிவப்பை அணிந்த வானும்
சிந்திய குரதியால்சிவந்த நந்திக் கடலும்
கூவி அழைக்கிறது எழுந்து வா-ஈழத் தமிழா
இன்னொருமுறை போராடத் துணிந்து வா

சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்
நீந்திக் கடந்த நெருப்பாறும்
ஆயுதப்போராட்டத்தின் நீங்கா நினைவானது

எந்தையும் தாயும் வாழ்ந்த திருநாடு
இன்றும் அடிமை -நெஞ்சில் பாய்ந்த
நெருஞ்சி முள்ளானது

புகலிடம் தேடும் அகதியாய் நாம் மாறிட
நன்றோ தமிழா-நாடுகள் வென்று ஆண்ட தமிழா
உண்டென்று நீ சொல்ல
உலகில் உனக்கென்று ஒரு நாடு கொள்ள
போராட எழுந்து வா

அன்பே சிவமென அனுபூதியில் அறிந்தே
அகிம்சை வழி செல்வோம்.
அறப்போரால் நாடு கொள்வோம்

விழுந்தாலும் எழுகின்ற அலைபோல் தொடரும் எங்கள் எழுச்சி
விழுந்து மடிந்தாலும் உயிர்க்கின்ற பீனிக்ஸ் பறவைபோல்
உயிர்க்கும் எங்கள் முயற்சி

***வானமே எங்கள் எல்லை***
***தமிழ் ஈழமே எம் உயிர் மூச்சின் எல்லை***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-29.3.2023

# அஞ்சலி

---

உணர்வுகளை எரித்துப் பொசுக்கி
கண்ணீரை அடக்கி ஒடுக்கி
கனத்த உள்ளத்தோடு-களம் வீழ்ந்த
தோழனை விதைத்தோம்

தோழர்களே, கண்ணீர்பூக்களும்,
வண்ண மலர்களும் வேண்டாம்
வாடிய மலராய் அவன் உதிரவில்லை
தமிழ் ஈழ அன்னைக்கு
குருதிப்பூவாய் தன்னை அர்ச்சித்த
வீரமகன் நம் தோழன்.

தீபங்கள் வேண்டாம்-தன்னையே
ஆகுதியாய் எரித்த தியாகி அவன்
கல்லறை வேண்டாம்-இவன்
புதைக்கப்படவில்லை-தமிழ் நெஞ்சங்களில்
தன்னை விதைத்துக்கொண்டான்.

தூபங்கள் வேண்டாம்
தமிழ் மண்ணை சுவாசித்து நேசித்தவன்-பாசமே
எம் சுவாசத்தை நிறைக்கும் வாசம்

கண்ணீர் அஞ்சலி வேண்டாம்
அஞ்சாமையே அவன் வேண்டும் அஞ்சலி-
அதுவே ஈழத் தமிழ் அன்னையின்
அடிமை விலங்குடைக்கும் சங்கொலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-23-5-2023*

# இன்பத் தமிழ்நாடே

---

ஓ இன்பத் தமிழ் நாடே-முத்தமிழின் அரியாசனமே
அகதிகளாய்த் தப்பி வந்த எம்மை,
அதிதியாய் உபசரித்தாய்
பல்லாண்டு வாழ்ந்த பின்னும்-அகதிகள்
எமக்கோ குடியுரிமை வழங்க மறுத்தாய்?

சிங்களம் எம்மைக் கொன்றழிக்க, சினந்து குரல் கொடுத்து
இன்னோர் தமிழ் சினிமாவாய் எம் வாழ்வைப் படம் எடுத்து
வாக்கு கேட்டாய்? வலிக்கிறது நெஞ்சம்

கட்டபொம்மன் வசனங்களாய் காற்றில் கலந்த சூளுரைகள்
சினிமாவிற்கும், சில்லறைக்குமாய் எழுதிய வீராப்பு வசனங்கள்
சிவகாசி பட்டாஸாய்-சினிமாவிலும் அரசியல் மேடைகளிலும் வெடித்து
வெத்து வேட்டாய் போன சரித்திரங்கள் வேதனையளிக்கிறது.

இலட்சங்களுக்காக எழுதிய வசனங்கள் இலட்சியமாகவில்லை-
தலைவர்களுக்கு முதல்வர் இருக்கைதான் இலட்சியம் என்ற நிலை
இன்றும் மாறவில்லை, ஈழவர் பிரச்சனைக்கு-
ஆக்க பூர்வமான திட்டங்கள் ஏதுமில்லை-பஞ்ச தந்திரமும்
சாணக்கிய இராஜதந்திரம் பழம் சரித்திரமாய்ப் போன நிலை

பருவகால மாற்றங்களாய்த் தேர்தல் காலங்களில் சூடு பிடிக்கும்
ஈழவர் பிரச்சனை-பின் ஓய்ந்து மறையும் தீராத அவல நிலை
அரியணை அமர்ந்த தலைவர்கள் அரியாசனத்தைக் காத்திட
அரிதாரம் பூசிய நடிகர்களாய் மாறிடும் அவல நிலை

வாக்குறுதிகளை நம்பி ஏமாறும் ஈழவர் துயரோ இன்றும் மாறவில்லை
கறுப்பு கொடிகளுக்கும்- கதவடைப்புக்களுக்கும் பஞ்சமில்லை
வேடதாரி தலைவர்களை வாழ்த்தும் கோஷங்களும் ஓயவில்லை
நீயோ விழித்துவிட்டாய்-நாமோ தூங்கிவிட்டோம்.
என்னே எம் அவல நிலை
உனக்கோ ஈழம் அரசியல் வியாபாரம்
எமக்கோ மாறாத்துயரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18.06.2023

# ஜனநாயகம்

---

பேரினவாதமும், புலிப்பயங்கரவாதமும்
மோதிடப் பிறந்த தீயில் வெந்து கருகிய தேசம்-
மனித உரிமை மீறல்களால் அழிந்த பந்தபாசம்
இனப்படுகொலைகளால் நாறிட்ட தேசம்

காணாமற்போன பல்லாயிரம் உறவுகளுக்கும்
காணிகளுக்கும், தவமிருக்கும் வடக்கு-கிழக்கு பிரதேசம்.
யாவருக்கும் சம உரிமை என்பதோ பகல் வேஷம்
பேரினவாதமே மாறாத கோஷம்.

தேசத்தை கொள்ளையிட்டு-ஆட்சி
அதிகாரத்தை குடும்ப சொத்தாக்கிய சர்வாதிகாரி
அதிகாரத்தை நீடிக்க, அரசியலமைப்பை மாற்றி
தேர்தலில் தோற்றுபோன மகிந்தா பேரினவாதி

நிறம் மாற்றி, கட்சி மாறி-மகிந்தாவை
நிந்தனை செய்து வந்த மைத்திரி
சிறுபான்மையினரின் பேராதரவாலும்
சிங்கள ஜனநாயகவாதிகளின் வாக்குகளாலும்
வெற்றி பெற்ற புதிய ஜனாதிபதி

பச்சை, நீலக் கட்சிகள் ஒன்றினைந்து
நல்லாட்சி அரசு அமைத்திட-மலாந்த புதிய ஜனநாயகம்
யாவரும் வாழ்த்தி கொண்டாடிய திருநாள்
மைத்திரி பதவியேற்ற நன்நாள்.

சிலகாலம் நீடித்த நல்லாட்சி சிறுகனவாக
மீண்டும் நிறம் மாறி-சொந்த முகம் காட்டி
"பச்சைப் பிரதமரை பதவி நீக்கி"-
மகிந்தாவை பிரதமராக்கிய தந்திரம்-
பஞ்ச தந்திரம் கடந்த சாணக்கியனும் அறியாத
மைத்திரியின் குள்ள நரித்தந்திரம்?

வெள்ளை வேட்டி சட்டையும்-
பிரித் நூலும் கட்டிய கொள்ளைக் கூட்டம்
புரிந்த இழிந்த அரசியல் விபச்சாரம்.
உலகம் காணாத அரசியல் கலாச்சாரம்.

பணத்தால் பாராளுமன்ற உறுப்பினர்களை வாங்கி
ஜனநாயகத்தை கொள்ளையிட முயன்ற முயற்சி
பகல் கனவாகிட-தந்திரமாய் நாடாளுமன்றத்தை
கலைத்து-தேர்தலை நடத்த முயன்ற மைத்திரி

உலகம் கண்டிக்க, உயர் நீதி மன்றம்-
உயர் நீதி வழங்கி இடைக்கால தடை விதித்து
ஜனநாயகத்தை நிலைநாட்டிட
வெட்கிய ஜனாதிபதி-

நம்பிக்கை வாக்கெடுப்பில்
நிலை குலைந்து பதவியிழந்த மகிந்தா
மைத்திரி நியமித்த பிரதம மந்திரி

ஓயாது சுழலும் தர்ம சக்கரம் சுழன்றிட
வினை விதைத்தவன் வினை அறுத்திட
ஞானம் காணாத-கபோதிகள்
ஞானி புத்தர் பெருமானை -சரணடையாத
போலி பௌத்த அரசியல் வாதிகள்?

நயவஞ்சக அரசியல்வாதிகளை கண்டும் காணாத
பௌத்த பீடங்கள் தேவதத்தனின் சீடர்களோ
வெறும் சீவர ஆடை அணிந்த போலிகளோ.?

பேரினவாதமோ இவர்கள் பிரித் ஒலி
மாநிலத்தில் சுய ஆட்சி, மத்தியில் கூட்டாட்சி-
தமிழர் உரிமைக்கோ நாளும் சாவு மணி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-25-5-2023*

# கடலும் போராளியும்

---

காலடிச் சுவடுகளை அலைகள் அழித்தாலும்
சிந்திய குருதியை கடல் நீர் குடித்தாலும்
வீழ்ந்த எங்களை மீன்கள் உண்டாலும்
கடலிலே நாம் சமாதியானாலும்
கடற் தாயே உன்னை மறவோம்

கண்ணீரால் உப்பானாலும்-அகதிகளைக்
காத்து கரை சேர்த்து
கடற் புலி எமக்கு களம் தந்த தாயே
உம்மை மறவோம்

எங்கள் வரலாறும் கடல்போல்
நிலையானது-எங்கள் போராட்டமும்
அலைகள்போல் ஓயாதது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-31.3.2023

# காடும் கழனியும்

---

கஞ்சில்லை கூழில்லைப் பசியாற
எஞ்சி நின்ற கழனியெல்லாம் காடுண்ண
தீயுண்டு எஞ்சிய இடிபாட்டை வீடாக்கி
நாயும், நரியுமிடும் ஊளையில் எம் வாழ்வு

புயலாய்ப், பூகம்பமாய் ஊரையும், உறவுகளையும்
அழித்த இராணுவத்தின் கொடுஞ்செயல்
கல்லில் பொறித்த எழுத்தாய் சிந்தையில் நிலைக்க
புகலிடம் தேடும் நடைப்பிணமான எம் வாழ்வு

நெஞ்சில் குண்டுகள் குருதிக் கோலங்களிட்டாலும்
துஞ்சிடத் தூக்கிலிட்டு வதைத்தாலும்-செந் தீ
வளரும் டயர்களில் தேகத்தை வாட்டி எரித்தாலும்
அஞ்சுதல்  இல்லை-ஈழத்தமிழனுக்கு
அடிமையாய் வாழும் நிலையில்லை-என்றே
-ஈழத் தமிழா நீ முழங்கு.

சுடுவார் அழிப்பார் சுட்டெரித்த சொந்தங்களையும்
சொத்தையும் மூட்டிய தீயுண்ணக் காண்பார் களிப்பார்
ஈனப் பேய்களிலும் இழிந்த மிருகங்கள் சிங்கள இராணுவம்

ஈழத் தமிழன் அவலம் கண்டு
பொங்கியழுதன வங்கக் கடலலைகள்-ஒளி
மங்கித் தேய்ந்தது கருவான் நிலவு
இமயமும் உருகியழ கங்கையும் கரையுடைத்தது
ஏழ்கடலும் ஏங்கி அலைமோத
நிலப்பரப்பும் கடலரிப்புக்குள்ளானது

இல்லமழிய நல்லறத்தால் பெற்ற  மைந்தரழிய
கைத்தலம்பற்றி காலமெல்லாம் துணையென வந்தவனழிய
ஆல்போல் வேரூண்டி அரசு போல் வளர்ந்த குலம்
வேரறுந்து வீழ்ந்த அவலமிங்கே.

கல்லறையும், சிறையும் கவிஞனுக்கு அரண்மனையே
கட்டாந்தரையும் வெட்டவெளியும் போராளிக்குப் பூவனமே
இலக்குகளை அடையும் வரை இலட்சிய புருஷர்களுக்கு
கடமேழும் முழங்காலளவே-கனல் கக்கும்
எரிமலையும் தினம் நீராடும் பூஞ்சுனையே

மஞ்சளும் குங்குமமும் மாங்கல்யமும் அழிந்திட
கண்ணீரில் சோகம் கரைத்து-சொந்தம்
கங்கையாய் வடித்த குருதியில் திலகம் வைத்து
சொத்தும் சொந்தமும் எரியும் பெருநெருப்பில்
அச்சத்தை சுட்டெரித்து எரிமலையாய் விழித்தெழுந்த
ஈழத் தமிழ் இளைஞர் நாம்

எம்முரிமைக்காய் போராட விட மாலை சூடி
கனல் ஏந்தி, களத்தில் உருத்திர தாண்டமாடும்
விடுதலை வேங்கைகள் நாம்.

அஞ்சாதே-நெஞ்சு கலங்காதே என் இனமே
அடக்கு முறைகள் ஓயும்
நம்மை சூழ்ந்த இருளும் மறைந்திடப்
புது விடியல் ஓர் நாள் தோன்றும்

பொய்மை என்றும் வென்றதில்லை
உண்மை ஒருபோதும் தோற்றதில்லை
நம்பிக்கைதான் வாழ்க்கை
நம் கையில்தான் நம் விடுதலை.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29.3.2023

# காலடிச் சுவடுகள்

---

யுத்த வெறியர் சிந்திய இரத்தம் காயமுன்
கண்ணிவெடி, துப்பாக்கிச் சத்தங்கள் ஓயமுன்
காற்றினிலே பிணம் கருகும் நாற்றம்-கரைமோதும்
அலைகளில் கரையொதுங்கும் பிணங்களின் கூட்டம்



வானில் வட்டமிடும் பிணந்திண்ணிக் கழுகாய்
குண்டு வீச்சு விமானம்-கோழிக் குஞ்சுகளாய்
ஆலயங்களிலும், பதுங்கு குழிகளிலும்
அஞ்சி ஒளிந்திடும் அப்பாவி மானுடம்

யுத்த வேள்வியில்-எரியும் டயர்களில் ஆகுதியாகும்
ஈழத் தமிழனினம் , கைமைக்கோலத்தில் பெண்ணினம்,
கண்ணீர்த் தவமியற்றும் தாய்க்குலம்

கைதும், வெள்ளை வான் கடத்தலும் செய்தியாக
கடிதமும், தொலைபேசியும் கப்பத்தின் அழைப்பாக
ஒன்றே குலம், ஒருவனே தேவன் என முழங்கிய தமிழ்ச் சாதி-
சிங்களத்திற்கு புலிச்சாதியாய் மாறிய கொடு நீதி

யுத்தம் சுட்டுப் பார்க்காத வீடில்லை
கண்ணீர், குருதிக் கறைபடாத உறவில்லை
விடியல் என்பது வெறுங்கனவு
அழுகையில் நிலைப்பது உறவின் பிரிவு

உரிமை கேட்டு உயர்ந்த குரல்கள், நீதி கேட்டு சிவந்த
விழிகள்-சிங்களத்தை எரிக்க, தம்மை எரித்த
கன்னியர் யாரும் மதுரையை எரித்த கண்ணகிகள் அல்ல
தீக்குளித்து மீண்ட சீதைகளுமல்ல

மணமாலை காணாத மங்கை-முக்கண்ணன் சூடிய நாகமாய்-
கழுத்தில் சயனைட் மாலை சூடிய பூவை-ஆகுதியாய்த்
தம்மை விடுதலை வேள்விக்களித்த பெண்மை
பெண் புலியாய் போராடியதோ வரலாற்று உண்மை

கொலைக்கும், சிந்திய குருதிக்கும்
வீரப்பதக்கங்கள் சான்றான நியதி-விடுதலையோ
தமிழ் அரசியல் கைதிகளுக்கு கிட்டாத அநீதி

முன்னையிட்ட தீ முப்புரத்திலே, அன்னையிட்ட தீ
அடிவயிற்றிலே-கண்ணகி அம்மன் இட்ட தீ மாமதுரையிலே
அனுமன் மூட்டிய தீ இலங்காபுரியிலே, சிங்களம் இட்ட தீ
யாழ் நூலகத்திலே, செந்தமிழன் இட்ட தீ ஈழ வரலாற்றிலே

ஒற்றுமையின்றி அழிந்தோம்
யுத்த வேள்வியில் பாவங்கள் பல புரிந்தோம்
உயிர்களைக் கொல்வது வீரமல்ல
உரிமைப் போராட்டமும் கோழைகளுக்கல்ல



தர்மயுத்தம் என்று ஏதுமில்லை
குருஷேத்திர, சிலுவை யுத்தங்களிலும் பாவக்கறை
கண்ணீரால் கழுவியும் போகாத இரத்தக்கறை
காலங்கள் போனாலும் ஓயாது ஒலிக்கும் துக்கப்பறை

பகைமையை பகைமையால் வெல்ல முடியாது
பகைமையை அன்பால் வெல்லுங்கள்
தொன்று தொட்டு வழங்கி வரும் தர்மம் இதுவே
ஏஸ தம்மோ சனந்தனோ

கரை வந்து அலைமோதிப் போராளிகளைத் தேடி
பரிதவிக்கும் நீலக்கடலலைகள்,
மாவீரர் துயிலுமிடங்களை நிர்மூலமாக்கி
மகிழும் பேரினவாத அலைகள்

காலங்கள் போயினும் கண்ணீரின் சுவை மாறவில்லை
குருதியின் நிறம் மாறவில்லை, உரிமைக்குரல் ஓயவில்லை
பேரினவாதம் ஓயவில்லை-ஒன்று பட்டால்
உண்டு வாழ்வு, தமிழனுக்கு இன்றும் புரியாத அவலநிலை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-25-08-2023*

# காலனும் கடவுளும்

---

ஈழ வானில் யுத்த மேகங்கள் சூழ
இரத்தவெறி பிடித்த மிருகங்கள் கட்ட விழ்ந்து
சுதந்திரமாய்த் திரிந்த கொடுங்காலத்தில்
விடிந்த அதிகாலைப் பொழுதில்
எழுந்த அவலக் குரல்

ஐயோ! என்னைக் காப்பாற்றுங்கள்
அம்மா! என்னைக் காப்பாற்றுங்கள்-அவலமாய்க்
கதறி ஒலித்த ஒலி நெருங்கி வந்து-தெரு வழியே
வீட்டைக் கடந்து ஓடிட-வெறிபிடித்த
இராணுவம் ஓநாய் கூட்டமாய் விரட்டி வர
வேலி வழியே விழி நீர் வடியப் பார்க்கின்றேன்.

ஓடிய இளைஞன்-ஒரு வழியும் காணாது
கோயிலில் தஞ்சம் புகுந்திட-
கூட்டமாய்த் துரத்தி வரும் இராணுவம் கண்டு
அச்சத்தில் கதவடைத்த வீடுகள்

''டுமீல்'' என வெடித்த துப்பாக்கி வேட்டு
எல்லாம் முடிந்ததெனச் சொல்ல-ஐயோ
என்று அலறிய கூப்பாடு.

அச்சமும், துயரும் முடிவுக்குவர
வேரறுந்த பச்சை மரம் வீழ்ந்திட
வெடியோசையால் அதிர்ந்த கோயில் மணி
சாவு மணியான சோக ஒலி

கோயில் கோபுரத்தில் வெற்றுச் சிலுவை
இயேசுவாய் இன்று கொல்லப்பட்டவரோ
ஈழ விடுதலைப் புலி
எரியும் டயரில் இன்றோர் தகனப்பலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-5-2023

# கல்லறை

ஒவ்வொரு போராளியின் புதைகுழியும்
ஒரு புதிய விதைப்பே.
பல போராளிகளுக்கு புதுக் கருவறையே

அழுவதற்காக கட்டப்பட்ட சமாதிகளல்ல
இவை ஈழ விடுதலைக்காய்
உயிர்த் தியாகம் செய்தவர்க்காய் எழுப்பபெற்ற
நினைவாலயங்களுமல்ல

தொழுதிடும் தமிழீழ விடுதலையை வேராய்,
விழுதாய்த் தாங்கி –விருட்சமாய் வளர்த்து
விழுப்புண் தரித்து வீழ்ந்த இரும்பு
நெஞ்சங்கள் உறங்கிடும்
உறுதியின் உறைவிடங்களிவை-ஈழ
விடுதலையின் பிறப்பிடங்களிவை

உஷ்!அமைதி பேணுங்கள்-நெஞ்சில்
பெருமிதம் கொள்ளுங்கள்-

கண்ணீர் அபிஷேகங்கள் வேண்டாம்
காய்ந்து விடும்
மலர்ச் செண்டுகள் வேண்டாம்-ஒரு
மாலைக்குள் வாடிவிடும்
எரியும் தீபங்கள் வேண்டாம்
விட்டில்கள் விழுந்து மடிந்து விடும்

காலம் கடந்து நிற்கும்-ஈழ விடுதலையின்
வீர வரலாற்று நடுகற்களிவை
ஈழ மறவர் சரித்திரம் சொல்லும்
-செப்பேடுகளும்-கல்வெட்டுக்களுமிவை

இவை புதைகுழிகளல்ல-இளைய தலைமுறையின்
அழியாத விழுப்புண்கள்-ஈழ விடுதலைக்காய்
விழித்தெழுந்த எரிமலைகளின் உறங்கு நிலைகள்

***உஷ் அமைதி காப்போம்***

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***

Pax Ravichandra-23-4-2023

# கல்வாரிப் பாதை

---

கண்ணீர்க் கங்கைகளும், குருதியாறுகளும் பொங்கிப் பாயும்
சுதந்திரப் போர்க்களத்தே-இறைமகனே
எம் கண்ணீர் துடைப்பாயா? மனக் காயங்களை ஆற்றுவாயா?
ஆயுதத் தொழுநோய் வாட்டும் தேசம் குணம் பெற
தொட்டுக் குணம் அளிப்பாயா?

ஏரோதிற்கஞ்சி எகிப்திற்கு நீர் ஓடியபோதும்,
பேரினவாதத்திற்கஞ்சி உலகெங்கும் நாம் சிதறியபோதும்
நாமெல்லாம் அகதிகளே

இள வயதில் நீர் காணாமற்போனபோது-
துக்கித்து உம் பெற்றோர் உம்மைத் தேடினர்.
நாளும் எம்மைத் தவித்து தேடும் அவலம்
எம் பெற்றோர்க்கு இங்கே

காணமல்போனால்-கானகத்தில்
பயிற்சிப் போராளியாயிருப்போம்
இல்லையேல் பேரினவாத பூதங்களால்
கைதாகியிருப்போம்

இல்லிடமே "ஜெஸ்தமெனியாகி"
எந்நாளும் பெரிய வியாழனாக
இரத்த வியர்வை சிந்தும் எம் பெற்றோர்

கைது, சிறை, சித்திரவதை, கொலை செய்ய
அங்கீகாரமாய் பயங்கரவாதத் தடுப்புச் சட்டம்
பதவி உயர்வும், பதக்கங்களும்-படையினர்
அராஜகத்திற்கு நிர்ப்பீடணமாக வெறியாட்டம்

காட்டிக் கொடுப்பு, மறுதலிப்பு, கசை, வசை
வாதை, கொடும் மரணம்-நம் வாழ்வில்
பொதுவானதொன்றாய்ப் போன அவலம்-
உமக்கோ இறை தந்தை- நாமோ அநாதை ?

இலட்சியவாதிகளின் வாழ்வெல்லாம்
கல்வாரிப் பயணம்தானோ?
இலட்சியங்களின் நிறைவும்
சிலுவை மரணத்தில்தானோ?

இறையரசுக்கான அகிம்சைப் போராட்டத்தின்-
முதல் புரட்சி வீரன் நீரே
தமிழ் ஈழ அரசுக்கான ஆயுதப் போராட்டத்தில்
இறவாப் பெருமை பெறும் மாவீரர் நாமோ?

இறைவனுக்கு உம்மை ஈடாக்கி
சத்தியத்திற்கு சான்று பகிர்ந்த சாட்சியாய்
உம் வாழ்வும் கொடிய சாவும்

ஈழத்தமிழன் அரச பயங்கரவாதி என
முத்திரை குத்தப்பட்டு
இராணுவம் வேட்டையாடுகின்ற
தமிழ் ஈழ விடுதலைப் புலிகளாய்
எம் வாழ்வும், சாவும்

ஆயதபாணிகளான வானவர் சேனையின் மத்தியில்
நிராயுதபாணியான நீர் ஒரு அகிம்சாவாதி
நிராயுதபாணிகளான தமிழர் மத்தியில்
ஆயதபாணியான நான் புலிப்பயங்கரவாதி

மடிந்தபின் அடங்கிட உமக்கோ கல்லறை
மடிந்தபின் குப்பையாய் எரிந்திட
எமக்கோ சிதையாய் எரியும் டயர்கள்

சுடங்குகள் இல்லாத் தீச் சமாதியில்
நாம் புகையாய்ச், சாம்பலாய் உருமாறி
காற்றிலும் புழுதியிலும் கலந்து மறைகின்றோம்.
உயிர்க்காற்றில் கலப்பதனால் எமக்கும் உயிர்ப்புண்டோ?
நாமும் இறவாப் பிறவிகளே
மண்ணில் மழையாய் விழுந்து- மனங்களில்
நினைவாய் வாழும்போது எமக்கும் உயிர்ப்பு

“வாழ்வும் வழியும், உண்மையுமாய்” நீயிருக்க
ஆயதமும், அழிவும், பொய்யும்
“பொன்மானாய்” என்னை ஈர்க்க-சீதையாய்,
ஸ்ரீராமனாய் மாயையில் சிக்குண்டே அலைக்கழிந்தேன்

மாண்பிழந்து மனிதம் மரிக்கும்போது
உயிர்கொடுக்க நீ அவதரித்தாய்
உன் உயிராலும், உதிரத்தாலும் மனிதத்தை மீட்டு
நடைப்பிண மாந்தருக்கு உயிர் கொடுத்தாய்

உருகிக் கரையும் விழிகளோடும்
நொருங்கிய உள்ளத்தோடும்-இறைமகனே
இறைஞ்சுகின்றேன் அமைதி தா

துன்புறும் மனிதம் துயருறும் இயேசுவே
*அழிவைத் தரும்ஆயுதங்கள் அமைதி தராது*
*உறவுகளைப் பிரிக்கும் பிரிவினை வாதம்*
*ஒற்றுமையை வளர்க்காது*

*தீராப் பகைமையையும், அச்சமும் நிலைக்க*
*இரத்தம் சிந்தும் யுத்தம்*
*சுதந்திரத்தின் கீதையல்ல*
*விடுதலைக்குப் பாதையுமல்ல*

*பகைமையைப் பகைமையால் வெல்ல முடியாது*
*பகைமையை அன்பினால் வெல்லுங்கள்*
*தொன்று தொட்டு வரும் தர்மம் இதுவே*
ஏஸ தம்மோ சனந்தனோ

புன்னகையை கொள்ளையிட்டு-ஓயாத
கண்ணீரை தரும் போரை நிறுத்திவிடு-
இதயங்களில் அமைதி நிலைக்க
உம் அரசை எம் உள்ளங்களில் நிலைநிறுத்து
ஏனெனில்
*வழியும், உண்மையும், வாழ்வும் நீரே*
*வாழ்வுதரும் வார்த்தைகள் உம்மிடமே உள்ளன.*

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
Pax Ravichandra-27.3.2023

# கண் மறைந்த சொந்தங்கள்

---

கொன்று புதைத்தவர்களும்- எரிந்து சாம்பலானவர்களும்
மண்ணில், மாகடலில் மறைந்திட, கண் மறைந்தவர்க்காய்
தாய்க்குலத்தின் கண்ணீர்த் தவங்கள் -நெற்றிக் கண் காட்டி,
அரசைக் குற்றம் சாட்டும்  இடதுசாரி முன்னனி
சோசலிஸ கட்சியின் “ சுவரொட்டிகள் ”

யுத்தம் முடிந்து பல்லாண்டு போனபின்பும் மௌனம் காக்கும்
பேரினவாத அரசு-காணாமல் ஆக்கப்பட்டவர்களோ
மறைக்கப்பட்ட உண்மை-தமிழருக்கு
நீதி மறுக்கப்பட்ட கொடுமை

நெஞ்சுக்குள் சோக எரிமலை விழிக்க
பாக்கு நீரிணையும், வங்காள விரிகுடாவும்
தமிழர் குருதியால் சிவக்க-முப்பதாண்டுகால யுத்தம்
கங்கையாய் ஓடிய மானுட இரத்தம்

பறை நாய்களாய் அலையும் ஏழைகள்
பேரினவாதிகளுக்கு காவல் நாய்களாய்
கட்சி மாறிய விடுதலைப் போராளிகள்,
கேள்விக்குறியான ஈழத் தமிழர் ஒற்றுமை

இதயச் சுடலையில் -எரிந்தும் எரியாத உறவுகள்
கண்ணீர் கங்கையில் கரைத்தும் கரையாத சாம்பல்கள்
ஒப்பாரியும், ஓயாத கண்ணீர்த் தவமும்
கடவுளை எட்டாத அர்ச்சனைகள்

காலனின் தூதனாய் -உலகை அச்சுறுத்திய கொரோனா
ஈழத்தை அச்சுறுத்த முடங்கிய தேசம்
திறைசேரி வற்றித் தேசம் இருண்டிட-கொதித்தெழுந்த
மக்கள் போராட்டம்-ஜனாதிபதிக்கோ திண்டாட்டம்

பதவியிழந்த ஜனாதிபதி-வரிச்சுமையால்
நிதி திரட்டும் புதிய அதிபதி
போராட்டங்கள் முளைக்கத் தள்ளாடும் அரசு
ஒரு வேளைச் சோற்றுக்கு அல்லாடும் ஏழை மனசு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-25-08-2023

# கானகத்து கரும் குயில்கள்

வான் பொழியும் குண்டு மழையால் காடும் தீப்பிடிக்க-
கண்ணிவெடிகள் விழித்தே கவச வாகனங்களைச் சிதறடிக்க
தென்றலும் தீய்ந்து மணக்க-அலறி அஞ்சிப் பறந்த பறவைகள்,
அஞ்சாது போராடி துஞ்சிய ஈழ விடுதலைப் பறவைகள்

கன்னியரும் போராடத் துணிந்திட, பொன்னும், பூவும், துறந்து
மணக்கோலம் காணாமல் போர்க்கோலம் பூண்டார்
மணமாலையென விட மாலை சூடி மணமேடையென களமேடை
அமர்ந்தே மணாளனாயக் காலனை மனதில் வரித்தார்

சத்தங்கள் ஓய-இரத்தங்கள் வடிய
ருத்திர பூமியெங்கும்- உதிர்ந்த-
குருதிப்பூக்களாய் கன்னியர் உடலங்கள்.

சரணாகதியிலும் சாவது மேல், மடியும் நிலயிலும்
மானம் பெரிதென எஞ்சியவரும்-நஞ்சருந்தி கற்புமழியாது,
காதலுமறியாது தம்மை மாய்த்திட, பொற்புடை மாதரின்
வீரத்தை சிங்களச் சிங்கமும் வியந்து புகழ்ந்ததே!

சுதந்திர கானம் பாடிய சுந்தர வானம்பாடிகள்-
காற்றோடும், தீயோடும் கலந்து-ஈழத்தமிழன்-உயிர்
மூச்சில் கலந்திட, மூடாத விழிகளுக்குள் மூழ்கிட்ட
தமிழ் ஈழக்கனவு ஈரவிழிக்காவியமோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29.07.2023*

# கானகத்தில் புதைந்த பூச்சரங்கள்

---

அச்சமூட்டும் ஆளரவமற்ற அடர்ந்த கானகம்
அமாவாசையிருளில் மூழ்கிக் கிடக்க
ஆழ அகலத்தில் பெரும் புதைகுழி தோண்டிக்
களைத்திருந்த இயந்திரம் ஓய்வெடுக்கும் நேரம்

வெள்ளி நட்சத்திரங்கள் விழித்திருக்க
கூகைகளும், கோட்டான்களும், கொத்தும் நச்சரவங்களும்
அஞ்சி மறைந்து சாட்சிகளாய்ப் பார்த்திருக்க
அச்ச மூட்டும் கரிய அமாவாசை இரவு

நடைப்பிணமாய் நடந்துவரும் கூட்டத்தில்
சிறுவர், சிறுமியர், தாய், தந்தை,
இளைஞர், யுவதி, முதியோர் என
பலர்பாலாய் பாவப்பட்ட தமிழ் உறவுகள்.

கண்ணீர் காயாத முகங்களில் காரிருளாய்ச் சோகம்
வெயிலில் காய்ந்து, மழையில் நனைந்து, பசி வருத்த
குண்டுக் காயங்களால் குருதி சிந்தி மெய் களைக்க
பாரச்சிலுவையாய் கனக்கும் மனதில் மரண பயம்

இரத்த வியர்வை துளித்துளியாய் உடலில் பூக்க
நடை தள்ளாடித் தடுமாற, வாய் குளறி
அழுகையும், விம்மலும் ஒப்பாரியுமாக-இங்கே
ஒரு புதிய கல்வாரிப்பயணம்.

கொடுந்தீயால் கருவானும் சிவக்க, கொட்டும் கொடும் பறைகளாய்
எறிகணைகளும், துப்பாக்கிகளும் பல்குழல் பீரங்கிகளும் ஓயாது முழங்க
தொடர்ந்து வெடிக்கும் குண்டுகளால் நிலம் அதிர
தொடரும் இறுதி யுத்தம், பாய்ந்தோடும் குருதி வெள்ளம்.

ஓட்டி வந்த ஓநாய்க் கூட்டம் -குழியைச் சுற்றி
கூட்டத்தை வரிசையாய் நிறுத்தி
குறிபார்த்து சுட்டு வெறிக்கூத்தாடியது.

மண் எங்கும் குருதி கோலமிட-துயரத்தால்
விண்மீன்களும் விம்மிக் கண்மூடிட
கல்நெஞ்ச கொலைக்காரர் –தமிழ் ஈழத்தை
பழியெடுத்து கருவறுத்த கரிய காலமது

கொத்துக் கொத்தாய்க் குழியில் வீழ்ந்தவர்கள்-
குற்றுயிராய்த் தரையில் முனகிக் கிடந்தவர்கள்
ஒப்பாரியும், அழுகையும் ஓய்ந்து உறங்கியவர்கள்
எல்லாம் ஒன்றாய் குழிக்குள் புதைந்த அவலம்

அஞ்சிய கூகைகளும், கோட்டான்களும்
வாய் குளறி அலறிப் பறந்திட- நச்சரவங்களும்
தலை தப்பியது தம்பிரான் புண்ணியம் என்றே
தலை தெறிக்க உயிர் பிழைக்க ஓடி ஒளிந்தன.

பாரிய குழிக்குள் பல நூறு உயிர்கள்
சிங்கள இனவாத யாகத்தில் ஆகுதியாக
ஆறாய்ப் பாய்ந்த இரத்தம்- அவலமாய்க் கானகத்தே
மறைந்த காணமற் ஆக்கப்பட்டவர் இரத்தம்

மண்மூடி மறைந்த புதைகுழிக்குள்
மரணம் வரமுன்னே மடிந்திட்ட உறவுகள்
கண்மூடித் தூங்கினாலும்-
காணும் தமிழ் ஈழ கனவுகள்

ஆண்ட பரம்பரை, மீண்டும் ஆளுமுரிமை பெற்றிட
மாண்டவர், விதையாய் மீண்டும் முளைப்பார்
வீறுகொண்டெழுந்தே புதுப்போர் தொடுப்பார்
தமிழா கலங்காதே, நாளை நமதே!

தாய் மண்ணுக்கே அர்ச்சனையாகி
அடர்ந்த கானகத்தே புதைந்த பூச்சரங்கள்
நாளையத் தமிழ் ஈழ அகழ்வாராய்ச்சியில்
விடுதலைக்கு வித்திட்ட நேற்றைய எச்சங்கள்.

முறிந்த பனையடிகளில்-
காணாமல் ஆக்கப்பட்டவருக்காய்
தாய்குலத்தின் கண்ணீர் தவங்கள்-
போதி மரத்தடியில்-பேரினவாத அரசின்
கலையாத மௌன விரதங்கள்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17-05-2023*

# கானல் நீர்

யாழிசையில்-மீன்கள் பாடும்
அழகு மயில்கள் தோகை விரித்தாட
தென்னை, பனை, நெல் விளையும் பூமியில்
தெம்மாங்கு நாளும் கேட்கும்

ஒன்றே குலம்-ஒருவனே தேவன்
யாதும் ஊரே யாவரும் கேளீர் -எங்கும் ஒலிக்க
சாதி. மத. இன வேற்றுமை தாண்டிய சமத்துவ
பொதுவுடமைச் சமூகம் ஒரு நாள் மலரும்

பாலம் தேனும் பாயும் ஈழத் தாயகத்தை நாளை நாம் ஆள்வோம்-
அஞ்சி அடிமையாய் வாழ்ந்த காலம் மறைந்திட-துஞ்சுதல் ஒரு முறை-
தாயகத் துயர் துடைக்க அஞ்சா நெஞ்சத்தோடு விரைந்து வா
உடல் மண்ணிற்கு, உயிர் தமிழிற்கு என்றே போராட எழுந்து வா தமிழா

கண்ட தாயக்கனவு- கனவாய்க் கலைந்திட
இன்றும் நெஞ்சில் நீங்காத் துயர நினைவு
நிதரிசனமோ எரி நரகான நிகழ்வு

நாளும் குண்டுச் சத்தத்தில் புலரும் எங்கள் பொழுது-
அந்தியில் மரணச் சடங்கின்றி மாண்ட மகனுக்காய்
தாய்குலம் புலம்பியழ சாயும் பொழுது

யுத்தச் சூழலில் கைதும், காணாமற்போதலும், ஒப்பாரியும், புலம்பலும் உறவாக
அகால மரணமே நாளும் நிகழ்வாக, அடையாள அட்டை எண் நினைவாக
நித்தம் கடக்கும் சோதனைச் சாவடிகளில் முகமூடி எம்மை வடி கட்டும்
அவசரப் பயணமும் தீக்குளிப்பான சோதனை, வீடு வருவோம் என்பது சாதனை.

வறுமையும், இருளும் வாழ்வில் நிலைக்க-நள்ளிரவில் குரைக்கும்
நாய்க்கும் அஞ்சும் அப்பாவி மனம், கண்ணீர்த் தவமிருக்கும்
தாய்க்குலம், காணாத கடவுளிடம் -பிள்ளைக்காய்
இரு கரம் நீட்டி, இரவும் பகலும் இரந்து மன்றாடும்

கடலோடி புகலிடம் தேடும் சந்ததியும் , இல்லிடமிழந்த பெருநிதியும்
அகதியாய் மாறி அல்லாட, இயக்க மோதல்கள் உறவுகளை கொல்லும்
இந்திய அமைதி காக்கும் படையால் நல்லுறவும் சீர் குலைந்து
தமிழ் ஈழ விடுதலைப் போராட்டம் நாளும் நலிவடையும்

முப்பதாண்டு யுத்தம் முடிவுக்கு வர
மாண்டவரும், காணமல்போனவரும்
மறைந்த புதைபொருளாக-கானல் நீரான
தமிழ் ஈழ விடுதலைப் போராட்டம்

வெற்றுச் செய்தியாய். விளம்பரமாய்
காணொளி, வானொலிகளில் எம் அவலம்
மனித உரிமை ஆர்வலருக்கோ ஆறாத் துயரம்

எங்கள் கனவு காற்றோடு போக, உறவுகள் தீயோடு போக
கண்ணீர் அலையோடு மறைய, குருதி மண்ணோடு கலக்க
தாயகம் எனச் சொந்தம் சொல்ல ஒரு காலம் வரமோ தமிழா?

தென்றலில் கலந்து வரும் தேமதுரத் தமிழனின் பிணவாடை
சுவாசத்தை நிறைக்க-காதுகளைச் சேரும் சொந்தங்களின் ஒப்பாரி
ஈழக்கனவு, கானல் நீரானது எனச் சொல்ல கலங்கும் இதயம்
வான் பார்க்க வருமோ தமிழனுக்கு புது உதயம்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29.07.2023*

# காணாமற்போன கனவுகள்

-----------------------------------------------------------

இல்லிடம் அழித்து அகதியாக்கி, விளைநிலம் பறித்து
ஏழையாக்கி, மாங்கல்யம் பறித்து விதவையாக்கி,
தொப்புள் உறவறுத்து துயரத்தில் ஆழ்த்திட -வாடிடும்
ஈழத்தமிழினம்- மாண்புடன் வாழ வழியில்லையா?,
இறைமையும், சமவுரிமையும், சமஷ்டியும்
ஈழத்தமிழினத்திற்கு உரித்தில்லையா?

கைதாகிக் காணாமற் ஆக்கப்பட்ட உறவுகளுக்காய்
கண்ணீர்த் தவமிருக்கும் சொந்தங்களுக்கு
வரம் தர தெய்வங்களும் இல்லை?
ஆறுதல் சொல்ல வார்த்தைகளும் இல்லை

படைகொண்டு போராடி, விடமுண்டு பிணமாகி,
வெடிகுண்டு உடுத்துத் தூளாகித் தொடர்ந்த போரும்
அமைதியைப் பறித்து, ஆனந்தத்தைச் சிதைத்திட
அகதியாய், அடிமையாய் மாறிய ஈழத்தமிழினம்.

விடமாலை தரித்த வீரநெஞ்சும்,
வெடிகுண்டு தரித்த மின்னல் இடையும்,
படைக்கலம் தாங்கிய சிறுவர் படையும்
வீணே பலியானதோ?-தீராத பகையினால்
அப்பாவிகள் உயிரும் உடமையும்
வேண்டாத யுத்தவேள்விக்கு ஆகுதியானதோ?

கனவுகளைக் களவுகொடுத்து ஏமாந்த இனம்
கனவு கலைந்திட-அகதியானது
உறவுகளை இழந்து அநாதையானது.
இன்றோ அமைதியைத் தேடித் தவமிருக்குது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-05-2023

# கனவாய்ப் போன தமிழ் ஈழம்

---

கொங்கை அரிந்து ஈழ மங்கையரை
மானபங்கம் செய்து கொன்றவரை,
பெற்றாரோடு, உற்றவரையும், ஊரையும் ஒன்றாய்
அழித்தவரை எண்ணிடக் கொதிக்கும் மனம்

ஊரழிந்து, உறவழிந்து-உலகெல்லாம்
புலம்பெயர் அகதியாய் தமிழன் ஓடிட-ஈழ
மண்ணணோடு இணைந்த ஆணிவேரை அறுத்தவரை,
தாயக்குலத்தின் தாலிகளை அறுத்தவரை
நினைந்திட துடிக்கும் இதயம்

எரியும் டயர்களில் உறவுகள் எரிய
எம் வாழ்வு எரிநரகாய் மாறிட
எதிர்த்து தொடுத்த பல்லாண்டுப்போரில்
இழந்தவைதான் எத்தனை எத்தனை?

அகதி, அநாதை, விதவை, அங்கவீனர் என உருவழிந்த சமூகம்-
ஒற்றுமையின்றிச் சிதறி, உலக நாடுகளின் ஆதரவின்றிப்
பயங்கரவாத முத்திரை குத்திய ஈழ விடுதலைப் போராட்டம்
கலைந்த கனவாய் , பழங்கதையாய் ஆனதே!
கண்களில் கங்கை பாய, நெஞ்சில் குருதி வடியுதே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-02-05-2023

# கனவும் நனவும்

---

யுத்தத்தாங்கிகளின் இரும்புச் சக்கரங்களில் மெய் நசுங்கியும்,
நசுங்காத இளைய நெஞ்சத்தின் ஈழக்கனவு
ஒரு நாள் நசுங்கிட-ஓய்ந்த விடுதலைப் போராட்டமோ
கலைந்த கனவு, கானல் நீரான நிகழ்வு

அழுகைச் சத்தங்கள் இன்றி
ஆறாத காயமாய்க், காயாத கண்ணீராய்
பெற்ற மனங்களை வருத்தும்
புத்திர சோகத்தின் ஓயாத ஆர்ப்பாட்டம்

கரம் பற்றியவன் களத்தில் வீழ்ந்தும்
மங்கையின் தாலியில் இன்றும் செங்குங்குமம்.
மடிந்தும் மனதில் வாழும்
வீரபுருஷனை வாழ்த்திடும் மங்கலம்.

பீரங்கிகளின் போர்ப்பறையிலும்- விமானங்களின் தீ மழையிலும்
களிப்போடு ஆடிய ருத்திர தாண்டவம் வீணாய்போனதோ
விடியலின் கூவலும் விடுதலைக்கோஷங்களும்
விழலுக்கிறைத்த நீராய் ஆனதோ?

பூக்கள் தூவி பூஜைகள் செய்து காட்டிய கற்பூர வழிபாடும்,
வேண்டுதல்களும் கருவறைக் கூரையில் தூங்கிடும்
குருட்டு வௌவால்களுக்கும் தெரியவில்லை
கும்பிட்ட தெய்வங்களுக்கும் புரியவில்லை?

மண்ணால் மனிதனைப் படைத்தவனை-கல்லால் அழியாத
சிலையாய் வடித்தவனும் பூமித்தாயின் மடியில் உறங்கிட
கல்லான தெய்வங்களுக்கு பூஜை, வழிபாடு-தமிழ்
ஈழமோ எட்டாத நிலவான நிலைப்பாடு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.07.2023*

# கண்ணீர்க் கங்கைகளும் குருதியாறுகளும்

---

புகையும் நெருப்பும் ஓய்ந்த நிலை
பகைமை மறந்து நெஞ்சங்கள் ஒப்புரவாகும் நிலை
அமைதிபூங்காவாய் அழகு ஈழம் மாறும் நிலை
யுத்த-நிறுத்தத்தின் அழகு நிலை

நலலோர் மனங்களிலோ புதிய நம்பிக்கைச் சுடர்
பேரினவாதிகளின் உள்ளங்களிலோ ஆறாத் துயர்

அமைதியைக் குலைத்திட -யுத்த வெறியர்
இன-வன்முறையைத் தூண்டினார்
இனக் கலவரம் வெடித்திட தீயை மூட்டினார்

இனவாத அரசியலில்
சுயலாபங்களுக்கு-முன்னுரிமை,
விபரீத அரசியல் கூட்டணிகளுக்கோ
விபச்சார வழிமுறைகள்

ஆட்சியமைத்த யுத்த நிறுத்தம்
கட்சி அரசியல் வேசித்தனங்களால் கவிழ்ந்திட
குண்டு வெடிப்புகளோடு மீண்டும் மூண்டது
உயிர்ப்பலி கேட்கும் கோரயுத்தம்

ஈழமெங்கும் யுத்தமேகங்கள்
தேசமெங்கும் புதிய சுற்றி வளைப்புக்கள்
அதிரடி தாக்குதல்களில்
அமைதியின்- அகால மூழ்கடிப்புக்கள்

ஓசையின்றி உறவு முறையின்றி சோகம் எங்கள் சொந்தமானது
ஆசைச் சொந்தங்களை அகால மரணங்கள் தீண்டிட
பகலும் இருளானது-யுத்த நெருப்பில் நம்பிக்கை
நூலறுந்த பட்டமானது

யுத்தநிறுத்தத்தின் அகால மரணத்தால்
தீராத- துயரங்களுமிங்கே
புதிய யுத்தத்தின் குறைப்பிரசவத்தால்
உதயமே அஸ்தமனமான அவலங்களுமிங்கே

தாய்களின் சோகச் சிதைகளில்
செத்தசேய்கள்-வெந்து கருகும்
சொந்தங்களின் கண்ணீர் கங்கையில்
சோக அஸ்தி கலந்து கரையும்

காதலனின்றி வண்ணப் பூமுகம் வாடிட
கயல் விழிகளோ கண்ணீரில் நீந்திச் சிவந்திட
கார்குழல் சூடிய தேன் மலர்கள் உதிர்ந்திடும்
நூலிடையும் சோகத்தில் மெலிந்திட
மேகலை கழன்று வீழ்ந்திடும்

பிரிவுச்சுமைகளால் சரிந்த குடும்பச் சுமைதாங்கிகள்
சுடுகாடுகளில் ஓய்வுகொள்ள
நன்றிமறவா நாய்களும்-பசுக்களும்
நலிந்தே சோகம் சொல்லும்

ஊரைச் சாகடிக்க உறவு சொல்லிச் சோகம்  வந்தது
பிள்ளை சோகங்களால்-தமிழ் ஈழ இல்லங்களில்
கண்ணீர் வெள்ளம் போட்டது.

அராஜக ஆட்சியில்-மனித
உயிர்களுக்கு மலிவு விலை
ஆயுதங்களுக்கோ- உச்ச விலை

இயேசு மீண்டும் பிறந்திருக்கவேண்டும்-ஏனெனில்
ஈழத்தில் இன்றும் இராக்கேல்களின
அழுகுரல்கள் ஓயவில்லை
ஏரோதுவின் ஆட்சி மாறவில்லை.

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-27.3.2023

# காணி நிலம் வேண்டும்

---

தமிழ் ஈழ மண்ணுக்காய்
வீறு கொண்டெழுந்த ஈழத்தமிழினம்
வாடி மண்ணில் வீழ்ந்தபோது
முப்பதாண்டுப் போராட்டமும் வீணானது
வாழிடமும், வாழ்ந்த மண்ணும்
சிங்கள இராணுவத்தால் அபகரிக்கப்பட
வாழ்வு சுமையாய் போனது

வண்ணப்பறவைகள் குடியிருந்த சின்னத்தோப்பை நச்சரவங்கள்
உரிமை கொண்டாடிட கொஞ்சிக் குழாவி கூவி களித்தே
குலம் வளர்த்த பறவைகள் கூடிழந்து கூவி கரைகின்றன
நாதியற்ற அநாதைகளாய் கேவி அழுகின்றன.

கூழும் கந்தையும்-குடிசை
கட்டிய துண்டு நிலமும் பறிபோயிட
நிர்க்கதியான ஏழைகள் -
தெருவிற்கு வந்த அகதிகள்

காணி நிலம் வேண்டும் அன்னை பராசக்தி
காணி நிலம் வேண்டும் -மகாகவியின் பாடலால்
கரையும் நெஞ்சும் உருகிட, சிங்கள காலனித்துவம்
வடக்கு, கிழக்கில் பெருகிட சுற்றிலும் இராணுவம்
திறந்த சிறையாய் தமிழர் வாழிடம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-27.2.2023

# கண்ணி வெடி

---

வெள்ளிப்பூக்கள் கண்ணயர்ந்த விடிகாலைப்பொழுது
கண் விழித்த புள்ளினங்கள் கவிபாடிக் களித்திட-வண்ணப்பூக்களில்
தேனருந்தி வண்ணத்துப்பூச்சிகள மகிழ்ந்திட-வாவியில்
துள்ளி விளையாடும் சின்னக் கயல்கள், வானில் வட்டமிடும் ஆலாக்கள்

கறுப்பு நிற கார் ஒன்று முனை வீதியில்
ஓதுங்கி ஓரமாய் நின்றது-நேரம் காலை 6:00 மணி

ஆகாயவழியே ஆளணியும் ஆயுதங்களும்
விமானப்படைக்கு வரும் நாள்
அன்று ஜனாதிபதி J.R. இன் பிறந்த நாள்

கவசவாகனங்களும், ஹெலிகொப்டரும், யுத்தத் தாங்கிகளும்
வான்வெளி தரை வழியை காவல் செய்ய
பாதை எங்கும் இராணுவபடையணி
நேரம் காலை  7:00மணி

பலத்த ஓசையோடு விமானம் தாழப்பறந்து வர
வலை ஒன்று குடையென விரிந்து வட்டமாய் வாவியில் விழ-
மீன் கவ்விய தூண்டிலை வேகமாய் இழுத்தவரும்
மிதி வண்டியில் மெல்ல சென்றவரும் தாழச்செல்லும்
செல்லும் விமானத்தை ஒரு கணம் பார்த்து அதிசயிக்க-வானில்
கொக்குகள் இரண்டு சிலுவைக் குறி காட்டி மிதந்து சென்றன.

காகம் ஒன்று வாவியின் குறுக்கே
கரைந்து அவசரமாய் பறந்து போனது.
நேரம் காலை 8:00 மணி

விமானம் திரும்பி வரும் சத்தம் கேட்க
விமானப்படையின் ஜீப் வண்டி
முன்னோக்கி மெல்ல நகர்ந்தது

மண் அதிர-விண் அதிர-மீன்பாடும் தேன் நாடதிர
கறுப்பு வண்ண கார் வெடித்த சிதறிட-ஜீப் வண்டியும்
வானில் எழுந்து தரையில் விழுந்திட வாடிய மலர்களாய்
உதிர்ந்த பழங்களாய் சிதறி விழுந்த விமானப் படையினர்

வெறி கொண்ட இராணுவம் பழி தீர்க்க, மதங்கொண்ட
யானைகளாய் உருமாறிட, விடுதலைப் பாதையெங்கும்-
வீழ்ந்தவர்களின் இரத்த வெள்ளம்-கூடவே விதவை,
அநாதைகளாய்-நொந்த உறவுகளின் கண்ணீர்க் கோலம்
சிங்ககொடியும் சிவப்பானது-தமிழ் இரத்தத்தால்

ஈழ கனவும் கலைந்து கறுப்பானது
பயங்கரவாதத்தால்

சுட்டெரிக்கும் சுதந்திர நெருப்பில்-ஆயுதவாதிகள்
குளிர்காய, சுடலைகளாய் மாறும் ஊர்கள்
"சுதந்தரமாய் பரவும் பயங்கரவாத நோய்கள்"

வாலை நீட்டி காலை உயர்த்தி சிறு நீர் கழித்த நாயும்-
அவசரமாய் வாலைச் சுருட்டி, கசியும் சிறுநீரோடு
அச்சத்தால் முக்கி முனகி நடுங்கி ஓடிட, கண்விழித்த
பூக்களிலும் தேனருந்திய பூச்சிகளிலும் "இரத்தக் கறை."

வாவியின் மீனினங்களும் வருந்தியே வீழ்ந்தவர்க்காய்
உண்ணா நோன்பிருக்க, உறங்கும் தெய்வங்களை
எழுப்பமுடியாமல் ஒப்பாரியும் அழுகையும் ஓங்கி
ஒலித்திட, கலங்கிய இதயங்களை கண்ணீரும்
தேற்ற இயலாமல் தோற்ற அவலம்

வீசுதென்றலிலும் பிணவாசம் கலந்திட
வெள்ளி அலைகளிலும் இரத்த கறை படிந்திட
வீழ்ந்த அப்பாவி நெஞ்சங்களிலோ
" என் கடவுளே என் கடவுளே ஏன் எம்மை
கைவிட்டீர் என்ற தீராத மனக்குறை?"

விடுதலைக்காய் இன்றும் ஒரு கல்வாரிப்பலி
இங்கே-? வீழ்ந்தவர்கள்-இரட்சகர்களாக
வீழ்த்தியவர்கள் இராட்சதர்களாக
மாண்ட அப்பாவிகள் எண்ணிக்கையான துயரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra*

# கன்னியோ கரும்புலியோ ?





பொன்னணி பூணும் வெண்சங்குக் கழுத்தில்-சயனைட் மாலை
வண்ண வளை கரங்களிலோ காலனின் மரண ஓலை
பூவணி பூனும் கார்குழலோ கத்தரித்த சோலை-மணி
மேகலை தழுவிடும் நூலிடையில் கைக்குண்டுகளின் வாடை

அங்கமெல்லாம் தங்கமாய் ஜொலிக்க, மூங்கில் தோள்களிலோ
ஆயுதச்சோலை, அணங்கு கொல் ஆருயிர் கொல் எனப்
பாடுமழகோ நடமாடும் ஆயுத வங்கி,
அழகு மேனியிலோ தற்கொலைதாரியின் அங்கி

மையெழுதிய விழிகளில் மாறாத செந்தணலின்
வெஞ்சினம் தகிக்க, செவ்விதழ் பூத்த புன்னகை மலர்ந்தே
மரணதேவனுக்கு "நல்வரவவு" சொல்ல, வெண்ணிலவாய்
கண்டவர்க்கு-இவளோ இன்று வெடிக்கும் எரிமலை

கானம் பாடிய வானம் பாடி, தமிழ் ஈழம் நாடி
இராணுவம் பலியெடுத்த காதலனுக்காய்
கரும்புலியாய் மாறி, கார்திகை மலர் சூடி-
ஆகுதியான அக்கினி வேள்வியின்று

மாசறு பொன்னோ, காசறு முத்தே எனக் கோவலன்
வர்ணித்த கண்ணகி, கணவனுக்கு நேர்ந்த அநீதிக்காய்-
மதுரையை எரித்த கதையோ சிலம்பு,



காதலாகிக் கனிந்த மனங்கள் மணமாலை சூடுமுன்
காதலனை இழந்து, நொந்த கன்னி மனம்
கரும்புலியாய் மாறி வெடித்த கதையோ-தமிழா
தமிழ் ஈழம் என விளம்பு.

விழிகளுக்குள் விரிந்த கனவுகளில் மலர்ந்தவை சில
-மாலை வருமுன்
வாடா மலராய் உதிர்ந்தவையோ பலப்பல

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-29.07.2023*

# கண் தூவும் மழை

---

அநீதியைச் சுட்டெரித்து-தமிழன்னையின்
அடிமை விலங்கை உடைத்தெறிந்து
தமிழ் ஈழத் தாயகம் படைக்க
நெற்றிக்கண் திறந்து-நெருப்பாற்றில் நீராடி
சுடுகாட்டில் படை வீடமைத்த “ருத்திரர்களே”
உங்கள் போராட்டத்தில்-அப்பாவிகளையும்
பலிக்கடாவாக்கியது நீதியோ?

புத்தகப்பை சுமந்த மென்தோள்களில்
பாரச் சிலுவையாய்த் துப்பாக்கி
பாடித்திரிந்த வானம் பாடிகளின் கழுத்தில்
சுருக்குக் கயிறாய் சயனைட் மாலை

செம்புரட்சிச் சிந்தனையில் கோரக்கறுப்பு
பயங்கரவாதத்தின் படையெடுப்பு
இது சாத்தானின் புதிய வேதமோ?-
சர்வதிகாரதின் அராஜக வடிவமோ?

வாழிடங்களைச் சுடுகாடாக்கி-யுத்த நெருப்பில்
அச்சக் குளிர்காய்ந்த தேவர்களே-யுத்த பூமியில்
அப்சரசுகளாய் ஆடவோ, மேகக்கலிங்கம்
சூடி ஆடி மகிழ்ந்த மூன்றாம் பிறையை
அம்மணமாக்கிச் சீருடை மாட்டி -யுத்தபூமியில்
ரத்தம் சொட்டச் சதிராட விட்டீர்கள்.

கானம் பாடிய கோகிலங்கள் வாயில்
கொடிய யுத்த கோஷங்கள்
பட்டாம்பூச்சிகளின் வண்ணச் சிறகுகளில்
அழியாக் கறையாய் குருதிக் கறைகள்.

யுத்த நெருப்பில் தீக்குளிக்க மறுத்த கன்னிச்
சீதைகளைக் காத்திட-ஜனகன் மூட்டிய ஹோமத்தீயில்
பருவம் மலராத மொட்டுக்கள் பதிவிரதையான மடமை.
-பிணக்கோலம் தவிர்க்க பூண்ட மணக்கோலம்-பின்னாளில்-
மாக்கோலமாய்க் கலைந்த அகோரம்

கல்வியும் பகல் கனவாகி
ஆடலும் பாடலும் மலரும் நினைவாகி
அன்னை மடியும் தந்தை மார்பும் ஆனந்தக் கனவாகிட
மூடிய நெஞ்சுக்குள் -கருகிய ஆயிரம் கனவுகள்
வாடிய மனதுக்குள் ஓயாத சோக இராகங்கள்

முப்பதாண்டுகால யுத்தத்தில்
விதவை -அகதி, அநாதை அங்கவீனராய்-
அப்பாவி மானுடத்தின் கூன் முதுகில்-
அதீதப் பாரச்சுமைகள்

மாவீரர் உரைகளும் கீதைகளாயிட
யுத்த மாயையில் மூழ்கிய அருச்சுனனும்
வில்லேந்திட - யுத்தத்தின் குருதிப்புனலில்
பல நூறு குறைப்பிரசவங்கள், கருச்சிதைவுகள்

மகிந்தாவும் அசோகனாய் மாறி நடத்திய
கொடிய ஈழ யுத்தத்தில் திசைமாறிய வெற்றி
ருத்திர தாண்டவத்தில்-பாவம் தப்பிய பரிதாபம்
-உடுக்கை ஒலியில் - தாளம் தப்பிய அவலம்

வரிமாற்றிய புலிகளால் -திசை மாறிய வெற்றி
வழிமாறிய தலைமையும் -தடுமாறிய அவலம்
அறுந்த தாலிகளால் உறவு வேலியெங்கும்
அடைக்க முடியாத விரிசல்கள்

நந்திக் கடலும்-பிணங்களால் நாறிமணந்திட-அந்தி
வான்சிவப்பை பூசிய வணங்கா மண்ணும்
வாடி விதவைக்கோலம் பூண்டிட
அணைந்த தீபங்களால்- விடியாத இரவுகள்,
ஈழமங்கையர் இரத்த திலகத்தில்
இனவாத தீயின் கொடுஞ் சுவாலைகள்.

சயனைட்டே எம் கதி –என்றும் இல்லை சரணாகதி
வெற்றுக் கோஷமாகிட-வெள்ளைக் கொடிநிழலில்
வேங்கைகளும் வெள்ளாடுகளாய்ச் சரணடைய
சிங்கங்கள் பெருவிருந்தென்றே வேட்டையாடி
இரத்தக்காடடேறிக்குப் பலிகொடுத்தன.

இலட்சியங்களும் கோடிகளுக்கு-கேடிகளிடம்
விலைமாதாராய் பலியாகிட
தெய்வம் நின்று கொல்லும் நிதர்சனமானதோ?

சயனைட் சர்பங்களும் பீரங்கிகளின்
இடியொலி கேட்டு நடுங்கினவோ?
சீறி எடுத்த படங்களை மூடிச் சரணாகதிதான்
முக்திக்கு வழி எனச் சொல்லினவோ?

புலியும் சிந்திய குருதி போதுமென்று
வெள்ளைக் கொடி ஏந்தி அச்சச் சோகையில் வாடியதோ?
திசைகாட்டும் ஊசியும் -அச்சப் புலத்தால் திசை மாறி
சரணாகதிக்கு வழிகாட்டியதோ?

செங்கனல் துப்பிச் சுதந்திர சிந்து பாடிய துப்பாக்கிகளும்
ஆவி சோர்ந்து அணைந்த தீபங்களாய் வாடி
மௌனராகம் இசைத்திட -தோல்வி மாலையிட்டது
சுதந்திரச் சுடரும் அணைந்து போனது.

எம் வாழ்வில் புள்ளினம் கரைந்து பூவினம் மலர்ந்து
பொழுது புலர்வதில்லை-நாளும் வன்முறை வெடித்து
வாழ்வினை அழித்து புலரும் பொழுதில்
கண்ணீர்ப்பூக்கள் மலரத் தவறியதில்லை

கண்ணீரும் செந்நீரும் இட்டு வளர்த்த பயிர்
களை வளர்ந்திடக் காடாகிப் போனது
மாவீரர் துயிலிடங்களும் காலப்போக்கில் வெற்று
மணல் மேடுகளாய் மாறிக் கண் மறைந்து போயின

வாருங்கள் உழவர்களே, சிங்களச் சகோதரர்களே
வாடிய எம் சுதந்திரப் பயிரை உழுது பயிரிடுவோம்-
துப்பாக்கிகளை முறித்து ஏர்கள் செய்து
புதியதோர் சுதந்திர விதைப்பை-சாத்வீகத்தால்,
சகோதரத்துவத்தால் தொடங்கிடுவோம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# கபாலம்

---

இவை நட்டவையல்ல-நடுகற்களுமல்ல
சுயம்பாய் முளைத்த சுதந்திர தாகத்தின்
சுந்தரச் சின்னங்கள்
கபாலங்களாய் தெரிந்தாலும்
சுதந்திர காவியம் பாடிய தேசிய கவிகள்

குண்டுகள் துளைத்திட உதிர்ந்த செம்பூக்கள்
சிந்திய குருதியில் தம்மையே விதையாய் விதைத்த
தமிழ் ஈழ விடுதலையின் புது விதைப்புக்கள்

கொதித்து, விழித்து-விடுதலைத் தாண்டவமாடி
ஓய்ந்து உறங்கிடும் எரிமலைகள்
அனல் சொரிந்த பூக்கள் -ஈழத்தாய்
மார்பில் ஆரமாய் நிலைத்த விழுப்புண்கள்

அடிமைச் சங்கிலி முறிந்திட-அடக்கு முறையின்
கோரவடிவங்கள் அஞ்சி ஓடிட
சுதந்திர சிந்து பாடிய வானம்பாடிகள்-
தம்மையே ஆகுதியாக்கி
விடுதலை வேள்வி யாத்த முனிகள்

சுந்தரத் தமிழன் சுதந்திரமாய் வாழ
மரணவாசலில் மௌனித்த புனித யாத்திரை
இவர்களின் விடுதலைப் பயணம்,
எம் நெஞ்சிலோ கீதாஞ்சலி
விழிகளிலோ கண்ணீர் அஞ்சலி

வாழும்போது இவர்கள் சுவாசத்தில்
உலாவியதோ அவியாச் சுதந்திர நெருப்பு
வாடியபோது இவர்களுக்குள் உலாவுவதோ
**தமிழ் ஈழச் சுதந்திரக் காற்று**

சுட்டெரிக்கும் சூரிய வெப்பத்தினை
நெஞ்சில் தாங்கிய எரிமலைகள்
குண்டுகள் நெஞ்சில் குழி பறித்தபோதும்
குருதிப்பூக்களை மாலையாக்கி மண்ணில் வீழ்ந்த
மாவீரர்கள்-தமிழ் மறவர்கள்

எரிமலைக் குழம்பில் பூத்த
கனல் தெறிக்கும் குருதிப் பூக்கள்
நெருப்பாற்றில் நீராடி-புன் சிரிப்போடு
உருத்திரதாண்டமாடிய விடுதலைப் புலிகள்

மண்டையோடும் எலும்பும் மாண்டு வீழ்ந்தற்கு
சாட்சியமான மாவீரர் எச்சங்கள்
மாவீரர் துயிலுமிடங்களை மண்மேடாக்கிய
இரானுவத்தின் அராஜகங்கள்

வீழ்ந்தாலும் புதிய விதைப்பிற்கான
விடுதலை வித்துக்கள்-எரிந்தாலும்
சுவாசத்தில் கலந்த-
சுதந்திரத் தென்றல்கள்

***உயிர் தமிழிற்கு, உடல் மண்ணிற்கு என்றே***
***சுதந்திர கீதம் பாடிய புல்லாங்குழல்கள்***
***ஆண்ட பரம்பரை மீண்டும் அரியணை அமர்ந்திட***
***யுத்த வேள்வியில் ஆகுதியான இரத்தத் திலகங்கள்***

புதைபொருள் ஆய்வாளர்கள் கண்டெடுக்க
புதையுண்டுகிடக்கும் தமிழ் ஈழ விடுதலையின்
வீரச் சான்றுகள் இவர்தம் ***எச்சங்கள்***

ஒரு நாள் முளைத்திட உறங்கி கிடக்கும்
"தமிழ் ஈழத்தின்" உயிர் விதைகள்
தந்தை மனமும், தாய் வயிறும் நொந்தழ
விழுப்புண் தாங்கி விழுந்த எத்தனை கதைகள்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-27.3.2023

# கறைகள்

---

கறைபட்டதோ அப்பாவிகளை கொன்ற
ஆயுதவாதிகளின் கொடுங்கரங்கள்
மறைக்கப்பட்டதோ-
மனித உரிமை மீறல்களின் கொடு நிலைகள்

சிறைப்பட்டதோ-தமிழ் தாய்களின் அப்பாவி மகன்கள்
குறைபட்டதோ-நீதிக்காய் குரல் கொடுக்காத மதங்கள்
அறைபட்டதோ-அப்பாவி இயேசு நிலைகள்
சூறையாடப்பட்டதோ-மங்கையரின் மானங்கள்

இழிவு பட்டதோ இனவாதிகளின் மனச்சாட்சிகள்
அழிவுற்றதோ-ஈழத்தின் திரு நிலைகள்
நிலை கொண்டு தமிழர் நிலங்களை பறித்ததோ
பேரினவாதச் சிங்களப் படைகள்

அஞ்சி அலை கடல் கடந்து
அகதிகளானதோ தமிழ் ஈழக்குடிகள்.
ஐயகோ என் நாடே! ஈழத் திரு நாடே!

தொழுது அடிமைகளாய் வாழ்வதை விட-மானத்தோடு
மறவர்களாய் நெஞ்சை நிமிர்த்தி மடிவோம் என்றே
வெறிகொண்டு விடுதலைப் புலிகளாய் உருக்கொண்டு
-ஈழ மறவர் தொடுத்த போர்
மண்ணானதே-மனம் புண்ணானதே
எம் ஈழக் கனவும் கலைந்து பகல் கனவானதே

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28.05.2023*

# காரிருளில் மலரும் கண்ணீர்ப் பூக்கள்

---

நடுநிசியில் நாய்கள் குரைத்து நடுங்கி அடங்கும்
மின்சாரப்பூக்கள் மின்னிப் பின் கண்ணயரும்
ஊர்ந்து வரும் இராணுவ வாகனங்கள் ஓசையின்றி நிற்க
பூட்ஸ்களின் காலடியோசையில் பூமி நடுங்கும்
தட்டித் திறந்த கதவுகளை அதிகாரம்
எட்டி உதைத்துத் திறக்கும்

அன்னையின் விழிகளில் ஆயிரம் சிந்து நதிகள் பிறந்திட
அந்திவான் சிவப்பு விழிகளில் கோலமிட
கூப்பிய கைகள் கொடுங்கோலனைத்
தெய்வமென்று வணங்கும்

இரத்தப் பொய்கைகளில் ரோஜாக்களைச் சிதைத்தவர்கள்
இரும்பு பாதணிகளால் இதயங்களை நெரித்தவர்கள்
இளஞ்செல்வங்களை கைதிகளாய் இழுத்துச் செல்ல
சென்ற பாதையெங்கும் குருதிக்கோலங்கள்
சொந்தங்களின் விழிகளிலோ கண்ணீர்க் கோலங்கள்

காவல் நிலையங்களில் கைதுகள் காணாமற்போயிருக்கும்
விசாரணையில்லா கைதிகளின் விலாசங்களோ
பாசக் கயிறோடு அலையும் யமனையும் திண்டாடவைக்கும்

கன்றை இழந்து கதறும் தாய்ப் பசு-மனுநீதிச்சோழனின்
மணிக்கயிறை அடித்த கதை கற்பனை இலக்கியமாக
கண்ணீர்ப் பூக்களோடு தாய் முகங்கள்
கல்லான தெய்வங்கள் -முன் தவமிருக்கும்

கூகையையும் கோட்டான்களும் அலறிப் பறந்தோட
நள்ளிரவில் வெடிச் சத்தங்கள் கேட்கும்
அமாவாசையிருளுக்குள் பௌர்ணமியாய்
எரியும் டயர்கள் வட்டமாய் செம்மஞ்சள் ஒளி சிந்தும்

மறுநாள் ஆகுதியான உடலங்களின் எச்சங்களை
I.C.R.C.படம் பிடிக்கும்-காணாமற்போனோர்
பெயர் பட்டியல் முடிவின்றி நீண்டிட- அஸ்தி
மழையில் கரைந்து மண்ணிற்கு உரமாகும்.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# கறுப்புச் சிவப்பு உண்மை

---

ஈழ யுத்தத்தால் எம் மண் சிவந்திட்ட காலம்
தமிழகம் கலங்கிட்ட நேரம்-புகலிடம் தேடி-நாளும்
பல்லாயிரம் தமிழ் அகதிகள் பாக்கு நீரிணையைக் கடந்திட
வங்கக் கடலும் சிவந்தது, தென்றலும் தீய்ந்து மணந்தது

மண்டியிட்டு அடிமையாய் வாழ்வதைவிட-மறவர் நாம்
நெஞ்சை நிமிர்த்திப் போராடி மடிவோம் என்றே
வீறுகொண்டெழுந்த அஞ்சாத்தமிழினம் தொடுத்த
முப்பதாண்டு ஆயுதப்போராட்டம் முடிவுக்கு வரும் நேரம்

முள்ளிவாய்கால் சிவந்து, தமிழ் ஈழக் கனவும் கலைந்து
விடுதலையின் மணிமுடியும் மண்ணில் வீழ்ந்திட, விண், மண்,
விரிகடல் நின்று குண்டு மழை பொழிந்த சிங்களம்
விண்ணைத் தட்டிய அன்னையரின் அழுகுரல்
கண்ணகி சிலையில் மோதிய மங்கையரின் அவலக் குரல்

வீரத்தமிழன் வீறுகொண்டெழ எழுதிய வீரவசனமெல்லாம்
சினிமாவுக்கும், சில்லறைக்கும் என்றாகிட-முதுகில்
குத்திய இந்திய வல்லரசு-வாளாவிருந்த தமிழக அரசு

சிங்களத்தோடு கைகோர்த்த இந்திய வல்லரசுக்கு சாமரம் வீசி-
ஈழத் தமிழனை காவு கொடுத்த தமிழக அரசியல் தலைவர்கள்-
சாணக்கியரா? சகுனிகளா? எட்டப்பர்களா?
இல்லை பந்த பாசமற்ற அந்நியரா? ஒன்றும் தெரியவில்லை-
இழிந்த விபச்சார அரசியல் இன்னும் புரிந்த பாடமாயில்லை

இமயம் தொட்ட இமயவரப்பர் சந்ததி-ஈழத்தமிழன்
அவலக்குரல் கேட்டும் வாழவிருந்திட
ஈழத்தமிழர் இழந்ததோ நிம்மதி-ஐயகோ
பறிபோனதோ தன்மானமெனும் பெருநிதி

வள்ளல்கள் வாழ்ந்த தேசத்தில்-ஊழல் மன்னர்கள்-
வெள்ளையனுக்கு அடிபணிய மறுத்து வீரச்சாவை தழுவிய
வீரபாண்டிய கட்டப்பொம்மன் வாழ்ந்த மண்ணில்
காட்டிக்கொடுக்கும் எட்டப்பர்கள்

தரணியில் தமிழன் புகழ் ஓங்கிட-தமிழின் புகழ் ஓங்கட்டும்-
தன்மானம் வாழட்டும்-வாழ்க தமிழ்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28.05.2023*

# கரு வானம்

---

ஓ யுத்த வெறியர்களே-இரத்தப் பிரியர்களே
எங்கள் இல்லங்களில் - நீங்கள்
தீபங்களை ஏற்றவில்லை
அணையாத் தீயை மூட்டினீர்கள்

எங்கள் இதயங்களுக்கு அமைதியை அல்ல
ஆற்றொண்ணாச் சோகத்தை அளித்தீர்கள்.
எங்கள் விழிகளோ சோக கங்கோத்திரி
எங்கள் மொழிகளிலோ முகாரியின் கச்சேரி

உங்கள் அராஜகத்தால் எங்கள் விண்மீன் வானமும்
வெள்ளிப் பூக்களை கலைந்து விதவையானது
எங்கள் கழனிகளும் கண்ணி வெடிக் காடகி
கால்களை முடமாக்குது-வாழ்வை எரி நரகாக்குது

எம் புன்னகையை கொள்ளையிட்டு
கண்ணீரை பரிசளித்த கொடியவரே
எம் இல்லங்களை இழவு வீடாக்கிச் சோக இருளினை
ஆட்சி பீடமேற்றிய கொடுமைதான என்னே

தெருவெல்லாம் குருதி வெள்ளம் பாய்ந்திட
தீண்டியதையெல்லாம் தீ சாம்பலாக்கிட
ஆயுதக் கலாச்சாரத்தின் அராஜக ஆட்சியில்
வருந்தியழைத்தும் வராத கண்ணனால்
திரௌபதிகளும் மானமிழக்கும் அவலம்

கரைந்தழுதும் சிறை மீட்காத இராமனால்
அசோகவனச் சீதைகளும்- ஆயுள்
தண்டணை அனுபவிக்கும் துயரம்

பெருமூச்சினால் தென்றலும் சூடாகிட
கண்ணீரால் ஏழ்கடலும் உப்பாகிட
எரியும் டயர்களால் கொடிய நரகங்கள்
மின் கம்பங்களோ
அப்பாவிகளைத் தொங்கிடும் சிலுவைகள்

நாய்களாய், நரிகளாய் கொல்லப்பட்டவர்க்கு
ஆலயங்களில் சாவுமணிகளில்லை,
அந்தியொட்டி கிரியைகளில்ல
குப்பைகளாய் தீய்ந்து சாம்பலானவர்க்கு
சுடுகாட்டிலும் கல்லறைகளுமில்லை
உயிர்ப்பின் உறைவிடத்தில் சிலுவைகளுமில்லை.

தீர்த்தமாய்க் குருதியை அருந்தி
தீ சுட்ட மேனியின் சாம்பலை நீறாய்ப் பூசி
விடமாலை சர்ப்பங்களோடும்-கபால மாலைகளோடும்
கோரத் தாண்டவம் புரியும் கொலைஞர்களே
மனச்சாட்சியிருந்தால் நிருபியுங்கள்
நீங்களும் மனிதர்களென்று?
விடுதலைப் போராளிகளென்று?

ஓ ஆயுதவாதிகளே
ஆயுதங்களைக் களைந்துவிட்டு
அன்பினால் மனங்களை வெல்லுங்கள்
நீங்களும் மாமன்னர் அசோகராகலாம்

மாவீரர்களே கருணையால்
காயம்பட்ட இதயங்களைத் தேற்றுங்கள்
நீங்களும் கௌதம புத்தராகலாம்

சோகச்சுமையால் கூனிய முதுகுகளின்
சுமைகளை ஏந்துங்கள்
நீங்களும் இயேசுவாகலாம்.

அரக்கனாய் மாறிட ஆயுதம் போதும்
மனிதனாய் வாழ்ந்திட அன்பே வேதம்

மண்ணாண்ட மாமன்னர் எல்லாம்
மரணத்தில் பிடி சாம்பலானார்
மனம் ஆண்ட புனிதர்களோ- மடிந்தும்
மனித மனங்களில் தெய்வமாய் வாழுகின்றார்

***அன்பே சிவம்–வாழ்வே தவம்***

*Pax.Ravichandra - 3.04.2023*

# கவிஞனும் போராளியும்

---

தூக்கு கயிறு என் குரல் வளையை முறிக்கலாம்
துப்பாக்கி குண்டுகள் என் நெஞ்சைத் துளைக்கலாம்
நண்பர்களே என் உயிர் மூச்சு ஓய்ந்தபின்
உடற்சூடு அடங்குமுன் என் விழிகளை தானம் செய்யுங்கள்
நாளை மலரும் நம் தாயகத்தை நன்றியுடன்
என் விழிகள் காணட்டும்.

மண்ணுக்குள் என் உடலைப் புதைத்தால்
உரமாய் சிதைந்து மரமாய் வளர்ந்து
தாயகமே உன்னைக் காண்பேன்

அவியா நெருப்பெரிய அக்கினி சூடும் டயர்களில்
சுட்டெரித்தால் புகையோடு கலந்த என் மூச்சு
பகை மறந்து-தோழா உனக்கும்
ஒரு கணம் உயிர் மூச்சாகும்
ஒரு நாள் மலரும் தாயகத்தை
உன் மூச்சால் காணும் நிலைக்காகும்.

தீயுண்டு எஞ்சிய என் சாம்பலும் காய்ந்து கிடக்கும்
எம் கழனிகளுக்கு உரமாகும்
நாளை மலரும் போராளிகளுக்கு நல் உணவாக
கழனியில் விளையும் பயிராகும்.

மரணம் எனக்கில்லை-மரித்தாலும்
என் எழுத்தால் உயிர்த்தே என்றும்
இனிய தமிழ் நெஞ்சங்களில்
உயிர் வாழமும் தமிழ் கவிஞன் நான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-31.3.2023

# காய்ந்த புல்

கடும் குளிரிலும், கொட்டும் மழையிலும்
நூற்றாண்டுகளாய் கொழுந்து பறிக்கும்
எம்மினம்-கூலிகளாய்
கொட்டில்களில் முடங்கிக் கிடந்திட

அடக்குமுறைக்கெதிராய் உரிமைக்குரல் எழுப்பிய
ஈழத்தமிழினம் அடிமைகளாய்-முகம்களிலும்
விசாரணையின்றிக் கைதிகளாய் சிறைகளிலும்
புகலிடம் தேடிடும் அகதிகளாய் ஆழ்கடலிலும்
ஏழ் கண்டங்களிலும் வாடும்போது
எப்படி நலமாயிருப்பேன் என் நண்பா?

நரிகளுக்கு வளைகளும், ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமுள்ளபோது-தலைசாய்த்திட-ஓரிடமின்றி
அகதிகளாய் அலையும் ஈழத் தமிழினத்திற்கு
“வானகம்” தான் தாயகமோ?-இஸ்ராயேலரை
எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து மீட்ட
வல்ல இறைவன்தான் தந்தையோ?

தாயகமில்லா அகதிகளாய் நாம் வாழ்வதோ?
வையம்தான் கைவிட்டாலும்-களத்தில்
நாயகன்தான் வீழ்ந்துபோனாலும
ஆயுதப்போராட்டம் தோல்வியில் முடிந்தாலும்-
புதைத்தாலும் முளைத்தெழுந்து
எரித்தாலும் உயிர்த்தெழுந்து போராடுவோம்
ஆண்ட பரம்பரை அரியணை அமரும்வரை
மீணடும் போராடுவோம்.

***காய்ந்த புந்தரைபோல் செத்துக் கிடக்கின்றோம்***
***காலம் மாறிட முதல் மழை படும் புந்தரையும்***
***தானாய் புத்துயிர் பெறும்***
***எம் விடுதலையும்-மீண்டும் உயிர்பெற்றெழும்.***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-29.3.2023

# கொக்கட்டிச் சோலை

---

இருதலைக் கொள்ளி  எறும்பானோம்
இறக்கையிழந்து எரிதணலில் வீழும் ஈசல்களானோம்
கொலைஞர் கைப்பட்ட
கொக்கட்டிச்சோலை இளைஞர் நாம்

எம்மில் சிலரைச் சுட்டழித்தார்-
தீயும் மனைகளில் பலரைப் போட்டு எரித்தார்,
பகல் முழுவதும் வேலையாள் வருத்தி,
பயத்தால் வாட்டி, நாம் வெட்டிய குழியே
எம் புதை குழியாய் மாறிட- மாலையில்
எம்மைச் சுட்டுச் சாய்த்தார் இரத்த வெறியர்.

கத்தும் பறவைகளே, கானகத்து விருட்சங்களே
எம் மரணத்திற்கு சாட்சிகள் நீங்கள்-
உலாவரும் கடவுளைக் கண்டால்
கதறிச் சொல்லுங்கள் எம் அவலத்தை
காலத்தில் விதி எழுதும்-ஈழத் தமிழன்
கண்ணீர்க் கதையை கடவுளும் அறியட்டும்!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra - 31.3.2023

# கொலைக் களம்

கடும் மழை பொழிந்து ஓய்ந்த மாரிகாலம்
கரும்போர்வைக்குள் கண்ணயர்ந்து கிடந்த பொட்டல் காடு
குட்டைகளில் சோம்பிக் கிடந்த தவளைகள்

ஒளிக்கீற்று பூமியைத் தொட்டுத் தட்டி எழுப்பிட
புள்ளினங்களின் பூபாளம்-பூவினங்கள் கண்விழிக்க
பொட்டல் காடெங்கும் வண்ண மலர்க்கோலம்

பூபாளத்தை குலைத்து, மலர்க்கோலத்தை கலைத்திட
அச்சுறுத்தும் அபஸீரமாய்
இராணுவத்தின் காலடி ஓசைகள்

துப்பாக்கி ஏந்திய வெறிநாய்கள் மத்தியில்
கைகளும், கண்களும் கட்டப்பட்ட யுத்தக் கைதிகளின்
கொலைக்களம் நோக்கிய நிர்வாண ஊர்வலம்
மானுடம் காணாத அவலம்.

கைதிகளின் பெருமூச்சால் ஊதல் காற்றும் சூடானது
காணவிரும்பாத துயரக்காட்சிக்காய் -உதய சூரியனும்
கார் மேகத்தில் முகம் மறைத்தது

உயிரை உறையவைக்கும் மரணபயம்
மூடுபனியாய் காட்டை நிரப்பிட-இராகம் கூட்டி
இசைமீட்ட புள்ளினங்களும்
மௌனம் காத்து மறைவிடத்தில் ஒதுங்கிட
காற்றில் நாட்டியமாடிய பூஞ்செடிகளும்
அச்சத்தில் ஆட்டத்தை நிறுத்தி அசையாது நின்றன.

யுத்தம் பார்த்து-ரத்தம் கண்ட தவளைகள்-
அச்சம் கொண்டு-சேற்றில் தம்மை
ஆழப்புதைத்து மறைத்தன.

வன்முறைக்கு ஆளாகி வல்லாங்கு செய்யப்பட்டவரும்
பொல்லாங்கு செய்தவரிடையே கைதியாய் நின்றார்
கண்ணனைக் கூவியழைத்து களைத்த
புதிய திரௌபதிகளும்
ஆடையின்றி நிர்வாணிகளாய் நின்றார்

வேட்டை நாய்களின் வெறியாட்டத்தில்
கைதிகளின் மேனியெங்கும் இரத்த கறைகள்
விழிகளிலோ மாறாத கண்ணீர்க் கறைகள்

நெஞ்சை நிறைத்த மரணபயத்தால்
பீறிட்ட கண்ணீரும்-பின்னிய கால்களும்
காணாத இறைவனை கூவியழைத்திட
“மண்டியிடுங்கள்”- கட்டளை பிறந்தது

கண்ணீர் வடிந்திடக் -கால்களும் நடுங்கிட
மண்டியிட்ட கைதிகள்-மனதுருகி
இறைவனை கதறியழைத்தார்

மரண மந்திரத்தை இயந்திரத் துப்பாக்கிகள் ஓதிட
மரணதேவனுக்கு மனிதர்களை ஆஹுதியாக்கிய
அசுர வேள்வி-மெல்ல வடிந்த இரத்தம்
மண்ணைச் சிவப்பாக்கி மழைநீரோடு கலந்திட
எல்லாம் முடிந்த நிசப்தம்

மண்டை பிளந்து -மூளை சிதறிடப் பிணமாய் வீழ்ந்தவர் குருதி
குட்டையை சிவப்பாக்கிட புதைந்து கிடந்த தவளையும்
‘காக்க –காக்க’ என்றே இறைவனை உரக்க கூவியழைத்தது
ஒளிந்த கிடந்த பறவைகளும் அச்சக் குரல் எழுப்பி
வானில் எழுந்து உயரப் பறந்தன.

“வெறிக்கோஷங்கள்” வானைப் பிளந்திட
நரியுண்ண பேயுண்ண -வானில்
வட்டமிடும் கழுகுகள் விருந்துண்ண
பொட்டல் வெளியெங்கும் சுட்ட பிணங்களும்
சுடாத பிணங்களும் சிதறிக் கிடந்தன

கா்ா மேகம் கரைந்தே கண்ணீர் சிந்திட
நீதிதேவதையின் குருட்டு விழிகள் உதிர்த்த
சொட்டுக் கண்ணீரில் கரிக்கும் உப்புச் சுவை
கரம் பிடித்த தராசில் அநீதியின் பெருஞ் சுமை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-31.3.2023*

# கோவனம் இழந்த ஆண்டிகள்

---

ஆடைக்காய்ப் போராடி-கோவனத்தை இழந்தோம்,
அரியனைக்காய்ப் போராடி-நாற்காலியை இழந்தோம்,
மணிமுடிக்காய்ப் போராடி-தலையை இழந்தோம்,
தனி நாட்டுக்காய்ப் போராடி-ஊரை இழந்தோம்

பறப்பதற்காய்ப் போராடி-இறக்கைகளை இழந்தோம்
பாடுவதற்காய்ப் போராடி-குரலை இழந்தோம்.
ஆடுவதற்காய்ப் போராடி-கால்களை இழந்தோம்
உரிமைக்காய்ப் போராடி அடிமைகளானோம்

வாழிடமோ இராணுவத்தின் வசம்,
விளைநிலமோ களை மண்டிய நிஜம்
ஆயுதப் போராட்டமோ அசிங்கச் சூதாட்டம்
ஆணிவேரிழந்த மரங்களாய் வாடி-அகதிகளாய்
அண்டை நாடுகளில் வேர் கொள்ள அலையும்
வாழ்வோ கண்ணீர்த் தவம்

அன்னையோ கண்ணீரில் தவமிருக்க
அக்கையோ விதவைக் கோலத்தில் வாடிநிற்க
அநாதைகளோ பெற்றோரைத் தேடிக்களைக்க,
அங்கவீனரோ பசியோடு போர்தொடுக்க,
முறிந்த பனை நிழலில் அமர்ந்து-தந்தி அறுந்த
யாழில் முகாரியை மீட்டுகின்றோம்

வாவிக்ககரையில் அமர்ந்து
பாடும் மீனைக் கேவி அழைக்கின்றோம்
கோவனமும், ஜீவனமும் இழந்த
தமிழ் ஈழ ஆண்டிகள் நாம்.

மாணபிழந்து மண்டியிட்டு வாழக் கோழைகளல்ல
இறைமையுள்ள உரிமைக் குடிமக்கள் நாம்
தமிழ் ஈழக் கனவினைக் காண உரித்துள்ள
பாராண்ட பேராண்மைத் தமிழர் நாம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-05-05-23

# குயில் தோப்பு

பயிர் விளையும் பூமியில்-வதைத்தே உயிர்களை விதைத்தார்
விழிக்குளத்தில்-கண்ணீரைத் தேக்கி உப்பை அறுவடை செய்தார்
வெளிறிய காவிகளுக்கு நிறமூட்ட வீரத்தமிழனின் குருதியைச் சிந்தினார்
தமிழ் நிலங்களில் உரிமை கொண்டாட போதி மரங்களை நட்டு
புத்தர் பெருமான் சிலைகளை வைத்தார்

வந்தாடும் அலைகள் கரையை வாரித் தழுவி முத்தமிட்டு செல்ல
அல்லியை அணைத்து வெண்ணிலவு காதல் சொல்ல-
மதுமலரில் அமுதுண்ட வண்டு போதையில் இசைபாட
கடலும் நதியும் சங்கமத்தில் கவிபாடும் பொழுது

மழையும் மண்ணை செழிப்பாக்கி மகிழ
உள்ளங்கள் கலந்து காதல் பூப்பூத்து மணக்க-
மன்மதனும் ரதியும் காதல் கூத்தாடும் காதல் தேசம்
ஈழத்தமிழர் தாயகப் பிரதேசம்.

விடியலுக்காய் தொடங்கிய போராட்டம்
அஸ்தமனத்தில் முடிந்திட-விடுதலைக்காய்
ஏந்திய ஆயுதம் ஈழத் தமிழனையே வீழ்த்திட
கனவாய் கலைந்த விடுதலைப் போராட்டம்.

செவ்வானம் கண்டு-விடிந்ததென்று செஞ்சேவல் கூவிட-
செங்குருதி பாய்ந்து வாழ்வும் சாக்கடலாய் மாறிட
அராஜகமும், வன்முறையும் வாழ்வை அழித்திட
பிள்ளைகளுக்காய் பற்றி எரியும் பெற்ற வயிறு
பிள்ளைப் போராளிகள் கழுத்திலோ சயனைட் கயிறு

குயில் தோப்பாய் குதூகலித்த இல்லங்கள்
வெளவால் குடியிருப்பாய் மாறிட,
பனந்தோப்பாய் செழித்த கிராமங்கள் பாழ்பட
முறிந்த பனைகளால் இசை துறந்த பாணண்

மீன்பாடும் தேன் நாட்டில் கயலும், வயலும் காய்ந்து
பசு மடிகளும் வற்றிட, பாடல் மறந்த பாடும் மீன்,
பாலையாய் மாறிட்ட பாலும் தேனும் பாய்ந்த பூமி
சிவந்த மண்ணாய் மாறிட்ட எங்கள் சாமி

விடுதலைக்காய் ஏந்திய துப்பாக்கிகள்
எம்மையே வீழ்த்திட-
பார்த்த குறி மாறி எம்மையே அச்சுறுத்திட
இலக்குகள் மாறி, இலட்சியம் தடம் புரள
பாதைமாறிய பயணம்
பயங்கரவாதமாய் அழிந்துபோனது.

தமிழ் ஈழம், பொய்யாய், பழங்கதையாய்
கனவாய் கலைந்து போனது.
ஈழவர் மண்ணோ சிவந்து தீய்ந்துபோனது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29.05.2023*

# குமுறல்

குண்டு மழையால் கொதித்த பூமி
எரிமலைக் குழம்பாய் உருகி ஓடும்
கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கிடும் மனங்களில்
குருதி ஆறு சோகக் கோலம் போடும்

இனவாதம் பொழியும் குண்டு மழையால்
இல்லிடங்கள் தீக்குளிக்கும்
எலி வளையாய் அமைந்த பதுங்கு குழிகளில்
இழிந்த வாழ்கை தொடர்ந்திருக்கும்.

பதுங்கு குழிகளே-குண்டு மழையால்
புதைகுழிகளாகும்-விடுதலையின்
விளைநிலங்களே-இனவாதிகளின்
வெற்றிக் களங்களாகும்

அங்கங்கள் சிதறிய சொந்தங்களை
காக்கைளும் கழுகுகளும் கூடி உண்ணும்
ஆறாய் ஓடிடும் கண்ணீரில் ஈழ மங்கையரின்
கயல் விழிகள் ஓயாது நீந்திச் சிவக்கும்

வாழ்வாங்கு வாழ்ந்தவர்-நாதியற்ற
அநாதை, அகதி, விதவைகளாக
வாழ்வு கல்வாரிப் பாதையாகும்

ஓயாத குண்டு வீச்சால் மண்ணெரியும் விண்ணெரியும்
விரிகடலெரியும்- ஊரும் உள்ளமும் சுடுகாடாய் மாறிட
உறவுகளின் பிரிவால் உள்ளம் சொக்கப் பனையாய் எரியும்.

சாபமான வாழ்வு எரி நரகாய் மாறிட
வரமாய் ஏனும் சாவு வராதோ என மனம் ஏங்கும்
***அமைதியே ஆனந்தச் சுதந்திரம் அறிந்த உள்ளம்***
கண்ணீர் வடிய கரங்குவித்து கடவுளை வேண்டும்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-28.3.2023

# குருதி நிறம் மாறவில்லை

---

பூக்கள் புன்னகைக்க, புள்ளினங்கள் பூபாளம் பாட
மகிழ்ந்து மலர்ந்த காலைப் பொழுதிற்கு
ஊர் விழித்து, உறவு விழித்து வாழ்த்துச் சொல்ல,
தெருவெங்கும் வாகனங்களின் கலகலப்பு,
மனமெங்கும் புது நாளின் குதூகலிப்பு.

ஆனந்த அமைதியைப் பழித்திட வாழிடங்களும்,
வாகனங்களும், கட்டிடங்களும் அதிர்ந்திட,
கண்ணாடி யன்னல்கள் நொருங்கிச் சிதறிட-பாதையில்
பாரிய சத்தத்தோடு -திடீரென ஒரு குண்டு வெடிப்பு.

துப்பாக்கிகள் ஒலித்திட, துர்ப்பாக்கிய மானுடத்தின் கதறல்கள்
கவசவாகனங்களும், இராணுவத் தாங்கிகளும் நகர்ந்திட,
சுட்டு மானுடத்தை வேட்டையாடித் தாழ்வாய்
பறந்த விமானப் படை ஹெலிக்காப்ட்டர்

காக்கை கூட்டம் கரைந்து கலைந்து வானில் அலைந்திட
உரக்க குரைத்த தெருநாய்கள்-சட்டென்று
ஊமையாகி அடங்கிட எங்கும் மயான அமைதி.

துப்பாக்கிகள் உமிழ்ந்த தோட்டாக்கள் இல்லங்களைத்
துளைத்துப் பார்த்துக் களைத்திட-யமதூதராய்
இராணுவம் ஓசையின்றிப் பதுங்கி நகர்ந்திட,
ஊரோ மயானம், மனமெங்கும் மரணபயம்.

தரையோடு தரையாய் ஒட்டிக்கிடந்து, சத்தங்கள் ஓய்ந்தபின் தவழ்ந்து
யன்னல் வழியே எட்டிப் பார்த்தேன்.-மொட்டு விட்டு பூப்பூத்த
அம்மா நட்டு வளர்த்த ரோஜாச் செடி முறிந்து கிடந்தது-
பஞ்சவர்ணக்கிளி கூண்டுக்குள் செத்துக்கிடந்தது.

வாயில் எங்கும் உதிர்ந்த பூஞ்சிறகுகள்,
தரையில் சிந்திச் சிதறிய இரத்த துளிகள்.
நெஞ்சு பாறையாய் கனத்தது.

பாரிய கண்ணிவெடி. இராணுவ வாகனத்தைப் புரட்டி எறிந்திட
இங்கும், அங்குமாய் வீழ்ந்து கிடந்த உடலங்கள்,
நாய்களின் ஊளை மனதை என்னவோ செய்திட
பார்த்து நடுங்கி பயத்தால் வாடிய மனம்

சிந்திக் கிடந்த குருதியை மொய்த்துப் பார்த்த
கொசுக் கூட்டம் துக்கத்தோடு வினாவியது- மனிதர்களை,
மனிதர்கள் கொல்வதுதான் விடுதலைப் போராட்டமா?
சிந்திய குருதியில் நிற, மண, மத, இன பேதங்களில்லை
மனிதர்களை கொல்வதில் ஆனந்தமில்லை

எங்கோ பெற்ற வயிறு பற்றியெரிய,
கட்டியவன் தாலி கழன்று, குலமகள் குங்குமம் கலைய,
சுற்றமும், சொந்தமும் கூடிவந்து கதறியழ,
அநாதையாய், விதவையாய, அங்கவீனராய்
உருக்குலைந்த உறவுகள்

வெற்றியை கொண்டாடும் போர் வெறியரும்-அப்பாவிகளை
கொன்று பழி தீர்த்து சினம் தணித்த இராணுவமும்,
பழிக்குப் பழி, கொலையே வழி அழிவின் பாதையில் சென்றிட
இறைவனைக் கூவி அழைக்கும் ஆபேலின் இரத்தம்.

இரத்தமும், நெருப்பும் நிறம் மாறவில்லை
பகைமையும், வெறுப்பும் மனங்களில் ஓயவில்லை
அலையும் காற்றும், இரையும் கடலும் திசை மாறவில்லை
வானும், நிலவும், வண்ணமலர்களும் குணம் மாறவில்லை.

சுற்றும் புவியும், சூரியனும் திசை மாற்றவில்லை.
சாதி, மத. இன, மொழி, நிற பேதம் கொண்டு
மனிதம் கொன்று, மனிதன் அரக்கனாய் மாறிட
எங்கும் யுத்தம், எங்கும் இரத்தம்.
எங்கும்  அழுகை, எங்கும் அவலம்.

அமைதியே எம்மை ஆள வா-யுத்தமே  ஒழிந்து போ
யுத்தத்தின் கொடூரம் மனிதனுக்கு இன்னும் புரியவில்லை
எல்லோர் குருதியின் நிறமும் சிவப்பு, கண்ணீரோ கசப்பு
இன்னும் இவர்களுக்குப் புரியவில்லை

***மனிதனை மனிதன் கொல்வதில் என்னதான் மகிழ்ச்சியோ***
***மனதிற்குப் புரியவில்லை-அமைதியோ எட்டாத அவல நிலை***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-05-05-23*

# குருதிப் பூக்கள்

---




ஒல்லார் வலியடக்கி-ஒல்லுனர் குடி சேர்த்து
கல்லார் குடி விலக்கி, அஞ்சார் அறநெறியுடையார்
சொல் வன்மையுடையார் சுற்றம் கூட்டி,
நல்லாண்மைப் பொருள் விளங்க வல்லவனே-தமிழா-
நீ இன்னும் வாழாதிருத்தல் தகுமோ?

அரி ஆர்புற்றாற்போல், ஆர்கலி அன்னபடை ஆர்ப்பரிக்க
குருதி புனலாகி புதுவெள்ளமாகி களஞ்சேறாகிட,
புலி கொண்ட பெருவலி கண்டு, கிலி கொண்டு பகைவர்
புறம்காண, நெறியற்றோர் அநீத வெறியடக்கி
நெஞ்சுற்ற சுதந்திர விடாய் தணித்த ஈழத் தமிழன்.



வெற்றியால் மகிழ்ச்சியுற்றான், வீரசுவர்க்கம் எய்திய
தோழர் கண்டு நெகிழ்ச்சியுற்றான், களவயலில் கதிரேந்திச்
சதிராடும் சுதந்திரச் செடி கண்டு எழுச்சியுற்றான்,
நெஞ்சில் குருதிப் பூமாலை சூடிய ஈழத்தமிழன்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra -25-08-2023*

ஒல்லார்- பகைவர்.
ஒல்லுனர்:-நண்பர்
இல்லாண்மை- குடியினை ஆளுந்தன்மை
நல்லாண்மை- நிறைந்த மனித ஆற்றல்
ஆர்கலி: சத்தம் எழுப்பும் கடல்

# குருதியும், கண்ணீரும்

---

வீரமறவர் யாத்த தமிழ் ஈழ விடுதலை வேள்வியை
அரக்கர்கள் அழித்திட-யாக குண்டமாய் எரியும் டயர்களில்
ஆகுதியாய் எரிந்து-நீறு புத்துக் கிடந்த தமிழ் இளைஞர்கள்
சோகத்தில உருக்குலையும் சொந்த பந்தங்கள்.

கால வெள்ளத்தில்- பாதை மாறிய பயணத்தில்
பயங்கரவாதமாய் விகாரமடைந்த
விடுதலைப்போராட்டம்
கடத்தப்பட்ட சிறுவர்களுக்காய்
கண்ணீர்த் தவமியற்றும் தாய்குலம்

சிதையின்றி , சிதைந்து கிடந்த சிறுவர் போராளிகள்
வலம் வந்து விழிநீர் குடமுடைக்கும் சொந்தங்கள்
மார்பறைந்து ஒப்பாரி வைத்து புலம்பியழும் பெற்றோர்கள்

முப்பதாண்டுகால் யுத்தம்-கங்கையாய் சிந்திய இரத்தம்
கண்ணீர்த் தவமியற்றும் சொந்தம்-அரசியல்
கைதிகளாய் வாடும் உறவு-ஆயிரமாயிரமயாய்
காணமல் ஆக்கப்பட்ட நிகழ்வு
மறுக்கப்பட்ட நீதியோ இழைக்கப்பட்ட அநீதி

தமிழர் ஒற்றுமையோ எட்டாத வான் நிலவு
வீறாப்பு அரசியலோ வெறும் கண்துடைப்பு
ஏமாந்த தமிழினம் இன ஒற்றுமைக்காய் ஏங்குது
ஒன்றுபட்டு வாழ நெஞ்சும் ஏங்குது

இன, மத, மொழி  பேதமின்றி நாம் வாழ
எல்லோரும் ஒரு தாய் மக்கள் என
மனம் மகிழ்ந்து பாட-இனியொரு காலம்
வரவேண்டும், அமைதி நல் வரமாகவேண்டும்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29.05.2023*

# மா வீரன்

---

பொய் வளர்க்கும் புல்லர் கதையும் பொய்யாக
நெய் வளர்த்த தீயில்-சீதை நீராடியதோ ஒரு முறை-
பேரினவாதப் பொய்யர் கதையும் பொய்யாக-ஈழ-மறவர்
நெருப்பாற்றில் நீராடியதோ நாளும் பல முறை.

மண்ணுக்காய் வீழ்ந்த மறவர் இறவாப் புகழோடு அமைதியில் உறங்கிட
மாவீரர் துயிலுமிடம் அமைத்த மாவீரனும் மண்டியிட மறுத்தே வீழ்ந்தான்
ஈழ மறவர் வீரத்திற்கு இணையில்லாப் புகழாரமானான்

மாவீரனுக்கு கல்லறை ஈந்தால், மறுபடியும் தமிழ் நெஞ்சங்களில்
உயிர்த்தே போராடுவான், சிங்களத்தை வேரறுத்து ஓர் நாள்
தமிழ் ஈழத்தை நிலை நாட்டுவான் என்றோ, எரித்தோ, புதைத்தோ
மாவீரனை மறைத்த சிங்களம்-மாவீரர் தினத்தை
நினைவு கூர அனுமதி மறுக்கும் அமங்கலம்

மாவீரன் வித்துடலை, எரித்தழித்தாலும்,
புதைத்து மறைத்தாலும் மாவீரனுக்கு மரணமில்லை
கல்லறை இல்லை என்றாலும்-காலமெல்லாம்-தமிழ்
மனங்களில் வாழும் வீரத்திருமகனுக்கு மரணம் இல்லை

இறவாப் புகழோடு மாவீரன் தமிழ் மனங்களில் என்றும் வாழ-
மனங்களில் அமைத்தார்-மறத்தமிழர் மாவீரனுக்கு துயிலுமிடம்,
வீழ்ந்தாலும், மடிந்தாலும்- மறவர் வீரம் வளையாது,
மடியாது, பேரினவாதத்திற்கு அடிபணியாது

மூவினமும் ஒன்று பட்டு புதுச் சரித்திரம் படைக்க
எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்றே
ஒன்றுபட்டு முழங்க
ஈழ மக்களே எழுச்சி கொள்க

உண்மை, நீதி, சமத்துவம், சகோதரத்துவத்திற்கான
அகப்புரட்சியே எழுச்சி-உயிர்ப்பலி கேட்கும்
போரோ, மானுட ஒற்றுமைக்கு வீழ்ச்சி, இகழ்ச்சி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra - 19.06.2023

# சிறுவர் படையணி

---

துள்ளித்திரிந்த செம்மறிகளுக்கு வேங்கையின்
வரிகளையிட்டு போர்க்களம் புகவைத்தார்
பள்ளிசென்ற புள்ளிமான்களுக்கு புலித்தோல்
போர்த்தி, குருதி பருகிடச் சொல்லிக்கொடுத்தார்

பிள்ளைச் செல்வத்தை கொள்ளையிட்டு
பெற்றோரையும், உடன் பிறப்புகளையும்
கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கடித்தார்-பள்ளிப்
படிப்பை பாழாக்கி போராடப் பயிற்றுவித்தார்

புயலில் பறந்த பூஞ்சிட்டுக்கள்
இறகொடிந்து வீழ்ந்திட-பூகம்பத்தில்
நடனமாடிய கன்னி மயில்கள்
முடமாகிக் கிடந்தன

அடை மழையில் காகிதக் கப்பல்கள் விட்டு அகமகிழ்ந்தவர்கள்
ஓயாத குண்டு மழையில் அன்னையைத் தேடி அழுதார்
பூந்தரையில் விளையாடிய கால்கள்-பொறிவெடிக்கும்
நிலகண்ணிக்கும் பலியாக அம்மாவைக் கதறி அழைத்தார்

இடிக்கும், மின்னலுக்கும் தாய்மடியில்-தஞ்சம் புகுந்தவர்
எறிகணைக்கும், குண்டுமழைக்கும் பதுங்கு குழிகளில்
ஏங்கியழுத கொடுமையுமிங்கே, வேலிகளே பயிர்களை
மேய்ந்திட-காவல் தெய்வங்களே, கோயில்
புறாக்களை பலி கேட்ட கொடுமைகளிங்கே.

ஆயுதக் கலாச்சாரத்தின் உச்சத்தில்
குழந்தை இயேசுக்களின்
தோள்களிலோ பாரச்சிலுவைகள்
பயங்கரவாதிகள் கைகளிலோ அதிகாரம்

என்று மடியும்- எம் ஆயுதமோகம்?
என்று தணியும்-எம்மவர் இரத்தத் தாகம்?
சிந்திய குருதியால் சிவந்த மண்-இன்றும்
பெற்ற வயிற்றிலே ஆறாத புண்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax.Ravichandra-3.04.2023

# மலராத சுதந்திரம்

---

வெள்ளி நிலாவும் -விடிகாலைச் சூரியனும்
அள்ளிப் பருகிய அன்னையின் ஆனந்த உறவும்
மெல்லிடையாள் காதலும்
துள்ளிடும் கடலலையும், தூறல் மழையும்
நல்லோர் உறவும் துறந்து-நாட்டுக்காய்
போராடி வீழ்ந்தவருக்கு கண்ணீர் அஞ்சலி-
நெஞ்சிலே சோக நினைவஞ்சலி

துள்ளித் திரிந்த பள்ளிப் பருவும் மறைந்து
துப்பாக்கி சுமந்து-போராடி விழுந்த
வேங்கையின் உருவம் மனதில் நிலைக்க
துணிந்து போரடி விழுந்து மடிந்தோம்

பெற்றவர் மனதில் இமயச் சோகம்
பேரினவாதத்தால் ஒற்றுமைக்கே பங்கம்
பிரிவினை வாதத்தால் ஓயாத யுத்தம்
நாம் சிந்தியதோ நம்மவர் இரத்தம்

கண்ணீர் கலவாத சோகங்களில்லை
கனத்திட இதயம் சுமக்காத வேதனையில்லை-மண்ணே,
உனக்காய் மாளாத உயிர்களில்லை-இருந்தும்
விடுதலையே நீ ஏனோ-இன்னும்
எமக்காய் மலரவில்லை?

மலராத சுதந்திரம் மா வீரன் விழுந்திட
கலைந்த கனவானது-மலரும் நினைவுகளில்
மனதிலே ஆறாத காயம்-
மா வீரர் துயிலிடங்களோ மண்மேடான துயரம்

உயிர் கொன்று, உறவழித்து இனம் வாழ
நடத்திய முப்பதாண்டு கொடிய யுத்தம்,
இனவாதம், மதவாதம் நாட்டை எரிநரகாக்க
வாழ்வில் அமைதிக்கோ பஞ்சம்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax.Ravichandra-3.04.2023

# மல்லிகைச் செடி

"அப்பா, என் மல்லிகைச் செடிக்கு
நீர் ஊற்ற மறக்க வேண்டாம்"
மகள் எழுதிய கடிதம், கண்ணில் நீரை
வரவழைக்க வீடோ-கைமாறி
இராணுவக் காவலரணாய் மாறிட
முட்கம்பி வேலிக்கப்பால் வாடிநிற்கும்
மகளின் மல்லிகைச் செடி, தெருவில் நின்ற
அகதித் தந்தையின் கண்களிலோ கண்ணீர்க் கொடி

மகளே, நீரோடு கண்ணீரையும் கலந்து
ஊற்றுகின்றேன்-நாளும் மழை வேண்டி
கடவுளைப் பிரார்த்திகின்றேன்
நீ வரும்போது மல்லிகை பூத்திருக்கும்
உன் கார்குழல் சூடக் காத்திருக்கும்.

மல்லிகைச் செடியோ பத்திரம்-மகளே
மல்லிகா நீயும் பத்திரம்
நீயும் செடியானால் அச்சமில்லை-
பருவக்கொடியானதால் அஞ்சுகின்றேன்
ஊரோ-இராணுவமயமானதால்
நெஞ்சம் பதறுகின்றேன்.

தாயே பத்திரம்-
இப்படிக்கு உன் அன்புத் தந்தை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra*

# மானம்

---

ஒரு முறைதான் வாழ்க்கை, ஒரு முறைதான் மரணம்
வீழ்ந்து மடிந்தாலும், வித்தாய் முளைத்தெழுவோம்-என்றே
வீர மனத்தோடு மாயும் போர்க்களத்தே
மானம் பெரிதென்று போரிட்டோம்

நாமழிய, நம்மால் பலரழிய-களத்தில் பிணம்குவிய-
வீரனும், கோழையும் வீழ்ந்து மடிந்தபோது
உடைமையாய் கொண்டு சென்றது ஏதுமில்லை

கொன்றழித்து, கொலைகள் பல புரிந்து
வெறி கொண்ட அரியும், வேங்கையுமாய் முன்னேறினோம்
முன் சென்ற மாவீரர் அசோகர் பின்வாங்கிட
பிணம் விழுந்த மண்ணில் வெற்றிக் கொடியேற்றி,
தாய் நாட்டைச் சுடுகாடக்கி- பித்தராய்ப், பேயராய்
வெற்றிக் கோஷமிட்டு இரத்த வெறியோடு முன்சென்றோம்

முன்சென்ற நம்மனதில் கருணையில்லை
பெருமான் புத்தரைக் கற்சிலையாக்கினோம்
கடுகளவும் இரக்கம், மன்னிப்பு இதயத்தில் இல்லை
எதிரிகளையும் மன்னித்த-பெருமான்
இயேசுவைச் சிலுவையில் அறைந்தோம்

பேய்களாய், அழுகும் பிணங்களாய் வாழ்வார்
யுத்த வெறிபிடித்த இரத்த காட்டேறிகள்
சத்தியமில்லா இவர் உலகம் நித்தியத்திற்கும் இருளே

குருதிக் கங்கைகளில் நீராடி-
கண்ணீர் அருவிகளில் விளையாடி
சுடுகாட்டில் வாழ்தல் சுதந்திரமோ?

பேய்களும், பிணங்களும் தமக்கொரு நாடு கேட்டால்
சுடுகாட்டுச் சுதந்திரமும் நிரந்தரமோ?
அன்பே தெய்வம் அனுபூதியில் அறியார் வாழ்வில்
ஆயுதம்தான் சுதந்திரம்?-உயிர் அச்சம்தான் எரிநரகு?

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax.Ravichandra-3.04.2023

# மனிதப் புதைகுழி
## (மன்னார்-திருக்கேதீஸ்வரம்)

---

மண்ணைத் தோண்டியவர்கள்-கண்கள் விக்கித்து நிலைத்திட
மண்ணிலே உருக்குலைந்த பல உடலங்கள், விண் நோக்கிய
விழிகளிலே கண்ணீர் கார்கால மழைகள்

வெள்ளிக் குளத்தில் பூத்த வண்ணத் தாமரைகளை
வெட்டிச் சாயத்தவர் யாரோ?
விலங்கியல் பூங்காவில் துள்ளித் திரிந்த
புள்ளி மான்களை -வேட்டையாடியவர் எவரோ?

கள்ளிருக்கும் வண்ணமலர்கள் காலம் வருமுன்
வாடிக் கருகிட தீய்த்தவர் எவரோ?
கானம் பாடிய பூங்குயில்களை
கழுத்து நெரித்து கொன்றவர் அரக்கரோ?

மண்ணுக்குள் மறையாத உண்மையை
மனதுக்குள் புதைத்தவர்கள்-மனசாட்சியையும்
இனவாதத்தீயில் சுட்டெரித்தனரோ?

யுத்தமெல்லாம் இரத்தகாட்டேரிகளின்
"கொலைக் கலையோ"-சிந்திடும்
தமிழன் இரத்தமெல்லாம்
மழை நீரிலும் மலிந்த விலையோ?

எத்தனை உறவுகள் -இங்கே
சிதைந்து போயின?
எத்தனை வண்ணகனவுகள் -
இங்கே கலைந்து போயின?

வென்று வாகை சூடிடப்-போராடும் வீரம் விளை
நிலம் அடிமையானதோ? கண்ட விடுதலை
கனவும் கலையும் நிலைக்கானதோ? ஒன்றாய் உண்டு
மகிழ்ந்து உறவு கொண்டாடிய சொந்தங்களும்
ஒரு கணப்பொழுதில் உயிரிழந்து பிணமானாரோ?

உருகி ஒப்பாரி வைத்த அப்பாவிகளை
ஒன்றாய்க் கூடிவரச் செய்து ஊனொடுங்க உயிர் ஒடுங்க
ஈவு இரக்கமின்றி கொன்றழித்துப் புதைத்து மறைத்தவர்
தம் மனச்சாட்சியை மறைத்திட எதைக் கொல்வார்?

மானிட எச்சங்களை சேதனக் குப்பையாய்
மண்ணில் புதைத்து இனப்படுகொலையை மறைத்தவர்கள்
கல்லறை சுதந்திரத்தையும் கருமாதி சடங்கையும்
இழிவு படுத்தி, மனிதத்தை பழித்தனரோ?

எலும்பு கூடுகளாய் உறவுகள்-புதைகுழியில்
உறங்கி கிடக்க-மண்ணைத் தோண்டியதுபோல்
மனங்களை தோண்டினால் உண்மை உயிர்த்தெழாதோ?

உயிர் மூச்சை எரிக்கும் பெருமூச்சோ
உள் எரியும் வேதனைத் தீயைச் சொல்ல,
சூனியத்தை வெறிக்கும் பார்வையிலோ-ஊறிவரும்
கண்ணீர் ஊற்று உருகும் இதயத்தை மெல்ல,
நம்பிக்கை நலிந்த வாழ்க்கையால்
நடைப்பிணங்களாய் உருகுலைந்த மானுடம்-
சூனியத்தில் வாழ்ந்திட,***சூனியம்தான் சுதந்திரமோ***?

முன்னொரு நாள் மறைந்த தமிழ் ஊராரோ-இவர்கள்?
முள்ளிவாய்காலில்-தொலைந்த உறவுகளோ இவைகள்?
வெள்ளி முளைக்காத இரவில் இராணுவம் புதைத்த
விடுதலை வித்துக்களோ-இவைகள்?

***என் உறவோ? இல்லை உன் உறவோ?***
***உயிர் உருகிட கரையும் சொந்தங்களே***
***இவை எல்லாம் நம் தமிழ் உறவே***

எண்ணெய் வளங்காண மண்ணை தோண்டியவர்
மன்னாரில் மனித எச்சங்களைக் கண்டார்
உள்ள வளங்காண இதயத்தை தோண்டினால்-மனிதன்
உண்மையைக் காண்பான்? "சுயதரிசனம்" பெறுவான்?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30.03.2023*

# மனிதமும் மானுடமும்

மனிதம் கொன்று-மனிதம் தின்று-மானுடம் வென்று,
தாயகம் மீட்டிட-விடுதலைப் போராட்டங்கள்
புனிதமிழந்து பொய்மை மலிந்திட
அரசியல்வாதிகளின் அசிங்க விபச்சாரங்கள்

வான் மழையாய் தீ பொழியும்
ஊன் பொசுங்கி உதிரம் ஆறாய் ஓடும்
வணங்கா மண்ணே போர்க்களமாய் மாறிட
வாழிடங்களோ சுடுகாடாய் உருமாறும்

வங்கக் கடல் எங்கும் வணங்காத் தமிழனின்
குண்டு துளைத்த உடலங்கள்
குமுரிமுனை தொட்டு குமுறியழும் அலைகளில்
ஈழத்தமிழன் சிந்திய இரத்தங்கள்

பாண்டியர் முத்தெடுத்த நடுக்கடலில்
தத்தளிக்கும் ஈழத்தமிழ் அகதிகள்
அலைகாவும் உடலங்களை இனங்காண
அலைபாயும் நெஞ்சோடு கடலோரம்-கண்ணீரில்
தவமிருக்கும் சொந்தங்கள்

ஊனுடலைத் துளைத்து உள்ளோடும் குருதியில்
“விடுதலையைத்”தேடிடும் துப்பாக்கி ரவைகள்
கர்ப்பிணித் தாயின் சிசுவையும்-புரட்சி
வித்தென கொன்று களிக்கும் சிங்களப் படைகள்

வணங்கா மண் எங்கும் இராட்சதர்களின்
இனச்சுத்திகரிப்பு யாகம்-அசுர வேள்வியில்
***புதிய சுக்கிரசாச்சாரியாய்-இராஜதந்திரி***
***இந்தியாவின் யோகம்*** ?

கள்ளிருக்கும் பனை வளத்தையும்-கவிதைச்
சொல்லிருக்கும் தமிழ் இனத்தையும் அழித்திட
சிங்களத்தின் ஓயாத ஷெல் வீச்சுக்கள்
முல்லையும், நெய்தலும், மருதமும் வாடிட
ஓயாத குண்டுத் தாக்குதல்கள்

யுத்தத்தை வென்றிட பிரித் ஓதி ஆசி வேண்டி
பிக்குகளின் இனவாத உபநியாசங்கள்
அயுதங்கள் வேண்டி அண்டை நாடுகளில்
சிங்களத்தின் யாசங்கள்

கொட்டும் மழையில் நனைந்து கொல்லும் வெயிலில் தீய்ந்து
திக்கெட்டும் பொழியும் தீமழையில் ஓடித் தப்பிக்க
பதுங்கு குழியுள்ளே குழி நண்டுகளாய் ஒளியும் மனிதமோ சிவம்
புதுங்கு குழிகளே புதை குழிகளாய் மாறிட சிதையுண்ட சவம்

மலை நடுங்க, குலை நடுங்க விழும் குண்டுகளால்
உடல் சிதறிட வானை முட்டும் ஒப்பாரி
சிங்கமும், புலியும் -சீறிச் சமர்புரியும் போர்க்களத்தில்
மனிதக் கேடயங்களான மானுடமோ அப்பாவி

கூடிக்களித்த கொஞ்சும் புறாக்களும்-பாடித்திரிந்த
வானம்பாடிகளும் இராணுவத்தின் காமத் தீயில் கருகிடும்
பழகிக்களித்த தோழர்களும், படித்துச் சுவைத்த நூல்களும்
அசுர யாகத்தின் வேள்வித் தீயில் ஆகுதியாகிடும்

கோரயுத்தத்தின் கொடிய விகாரத்தில்
மானுடத்தின் மாண்பினை துகிலுரிந்த துச்சாதனன்
மனிதத்ததை சிலுவையிலறைந்த கொடிய யூதன்
சொந்தங்களை பணயம் வைத்து சூதாடும்-அண்ணன்
வாழ்விடங்களை சுடுகாடாய் மாற்றி
பிணமேடுகளில் வெற்றி கொடி நட்ட புதிய அசோகன்

அங்கங்கள் கொய்து -மனித அழகினைச் சிதைத்தார்
சொந்தங்களை கொன்று சுற்றத்தை அநாதையாக்கினார்
சொத்தினை அழித்து சுகத்தைப் பறித்து ஏழையாக்கினார்
நம்பிக்கையை அழித்து நாளையக் கனவைச் சிதைத்து
நெஞ்சில் எற்றிய சுதந்திர நெருப்பை வேள்வியாக்கினார்?

சுதந்திர வெறிகொண்ட புலியும்-சொந்தங்களின்
இரத்தத்தை சிந்திச் சுவைத்த கொடுமையிங்கே-
தமிழகக் காவல் தெய்வங்களும்-ஈழத்தமிழர்
அவலத்தை அரசியலாக்கிய சிறுமையுமங்கே

உண்டு குடித்து நிம்மதியாய் உறங்கிய நாட்கள் கனவானது
சொந்த பந்தமிழந்து அநாதையாய், சொத்திழந்த ஏழையாய்
கந்தைக்கும் கூழிற்கும் கையேந்தி-மனிதக் கேடயமாய் சிறையுண்டு
கண்ணீர்ப் பூக்களோடு தவமிருக்கும் நேரம் நிஜமானது

உயிர் பிழைக்க குண்டு மழையில் நந்திக் கடலை
கடக்கின்ற நாதியற்ற தமிழர் -சிந்திய
குருதியால் நந்திக்கடலே செங்கடலாக-அந்திச்
சிவப்பணிந்து வானம் சிந்தை நொந்திட்ட துயரம்.

இரட்சகர்களே இராட்சதர்களாய்-சொந்தங்களைச்
சிறையெடுத்த அவலமிங்கே-இராட்சதர்களே
இரட்சகர்களாய் உருமாறிய புதுமையுமிங்கே.

சிப்பிகளும் சங்குகளும் சிதறிக்கிடந்த கடற்கரையில்
மனித குப்பைகளாய் நாறிக்கிடக்கும் உடலங்கள்
வங்கக்கடலில் மிதக்கும் சொந்தங்களுக்கு
தண்ணீரில் ‘‘காரியம்’ பண்ணும் மீன்கள்

அங்கவீனருக்குச் சொந்தங்கள்
ஊன்றுகோலாகும்-குண்டடிபட்டவருக்கு
மருந்து எட்டாத வான் நிலவாகும்

பசி மூட்டிய தீ அடிவயிற்றிலே,
பயம் மூட்டிடும் தீ இளநெஞ்சிலே-நாதியற்று
எங்கும் நாறிக்கிடக்கும் உடலங்களுக்கு
யார் மூட்டுவார் தீ?

அச்சம் நெஞ்சை ஆட்கொள்ள, ஆழ்பசி வயிற்றில் போர் தொடுக்க
பிச்சைக்கும் எச்சிலிலைக்கும் கையேந்தாத கௌரவம்
இடைத்தங்கல் முகாம்களில் கஞ்சிற்கும் கந்தைக்கும்
தவமிருக்கும் கொடுமை -கண் காணா அகௌரவம்

முறிந்த பனைகள் சிதைகளாகும்
அறுந்த தாலிகள் விதவைகளாகும்
பிரிந்த உறவுகள் ஆறாத ரணங்களாகும்
அனாதைகளுக்கோ- தமிழ் ஈழம்
சொந்தங்களின் சுடுகாடாகும்

கட்டிய மனைகளை விமானங்கள் சாய்த்திட
கைத்தலம் பற்றியவனை குண்டுகள் மாய்த்திட
கொஞ்சி மகிழ்ந்த செல்வங்களை ஷெல்கள் பறித்திட
கர்ப்பத்தை பேய்கள் கற்பழித்துச் சிதைத்திட
மங்கை மனதிலோ யுத்த நெருப்பின் தகிப்பு
மண்ணிலோ மாறாத குருதிச் சிவப்பு

வெறுமையை விழிக்கும் அம்மை விழிகளிலோ சோகம்
நொருங்குண்ட இதயத்திலோ "இருப்பின்" இயலாமையை
"அண்ணகணாய்க்" கண்ட அவலம்-
கிச கௌதமிக்கு பெருமான் புத்தர் காட்டிய ஞானம்
மனப்பாரம் போக்கும் சஞ்சீவினியான ஔடதம்

பௌத்த பீடமே-அதர்ம யுத்தத்திற்கு ஆசிவழங்கிய
கொடுமையிங்கே-மகிந்த சிந்தனையால்
மகிந்த தேரரும் "யுத்த மதம்" தழுவிய சிறுமையிங்கே.

புத்தம் சரணம் கச்சாமி
யுத்தம் சரணம் கச்சாமி ஆனதோ?
தம்மம் சரணம் கச்சாமி
அதர்மம் சரணம் கச்சாமி ஆனதோ?

கன்றோடு தாயையும் குண்டுகள் மாய்த்திட்டபோதும்
பூண்டோடு வம்சத்தை எறிகணைகள் வீழ்த்திட்டபோதும்
ஆண்டபரம்பரை மீண்டும்அடிமையானபோதும்-நெஞ்சில்
மூண்ட சுதந்திர நெருப்புத்தான் அணையுமோ?-
தமிழ் ஈழக் கனவுதான் கலையுமோ?
தமிழா சொல்?

யுத்தத்தின் கோரத்தை தரிசித்து
யுத்தம் துறந்து, புதிய அசோகனாவோம்,
அகிம்சையை வாழ்வாக்கி, எதிரியையும்
அன்பு செய்து மகான்களாவோம்

அரியும், புலியுமாய் போராடிய இழி நிலை மறந்து,
விலங்கு இதயம் துறந்து மனிதர்களாவோம்,
புத்த நிலை, இயேசு நிலை நம்முள்ளே நண்பா,
சிங்களம், தமிழ் என்பதெல்லாம் இனவாதம்
***ஒரு தாய் மக்கள் நாம் என்பதே மெய்யான கீதம்***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க, எல்லோரும் நலம் வாழ்க***
*Pax Ravichandra-28.3.2023*

# மாங்கல்யம்

---

யுத்தம் சாய்த்த உறவுகள் இரத்தத்தில் வீழ்ந்து கிடக்க
அழுது புலம்பும் அன்னையர் கண்ணீரில் மூழ்கிக் கிடக்க
உதிர்த்த மலரும், கலைந்த மையும், அறுத்த மாங்கலயமும்
மங்கலம் கலைத்த கதை சொல்ல
மலரில்லா வனமாய், வாடிக்கிடந்த மங்கையர் குலம்

புகை மூடி வான் கறுக்க, புதைகுழி பார்த்து-
சோகம் நெஞ்சை சூர்வாளாய் அறுக்க,
ஓலிப்தா?, ஓய்வதா எனப் புரியமால் அழுகையும்-
பொழிவாதா,வேண்டாமா என கண்ணீரும் திண்டாட
கனவாய் கலைந்த சொந்தங்கள்.

பூ உதிர்ந்த சோலையாய்ப் பூவையர் கூந்தல் வாடிக் கிடக்க
நிலவிழந்த அமாவாசை வானாய் மஞ்சளும், குங்குமமுமின்றி
மதிமுகம் கறுத்துக் கிடக்க, வளையலும், கொலுசுமின்றி
வாழ்வும் ஊமையாக, வண்ணமின்றிச் சேலையும் வெண்மையாக
மங்கலமிழந்த விதவைகளின் அலங்கோலம் ?

நீர் பாய்ந்த நெற்கதிர்கள் நிமிர்ந்து செழிக்க-விழிநீர்
பாய்ந்த கயல்கள் சிவந்து களைக்க, ஊரறியச் சூடிய
மங்கலத் தாலியும் சில நாளைக்குள் அறுந்திட
தாலியில்லாத் தாய்கள் வேலியில்லாப் பயிர்கள்?

மழையின்றி மண்ணும் வெடித்துக் கிடக்க-துணையிழந்த
மணவாழ்வும் கைமைக்கோலத்தில் நாறி மணக்க
ஈழ விடுதலையும் கனவானது, இல்வாழ்வும்
அலங்கோலமானது, மனம் சோகத்தில் நாறுது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-22-06-2023

# மண்ணில் வீழ்ந்த மாவீரன்

---

யாழும் பண் மறக்க, நல்லூர்க் கந்தன் வேலும் முனை மழுங்கக்
குண்டு பட்டுப் பனையும் முறிந்தே குலை இழக்க
கொத்துக் கொத்தாய்ப் புலிகளும்-அப்பாவித் தமிழரும்
உயிரிழக்க தொடரும் அராஜக இறுதி யுத்தம்

நந்திக்கடலும் நாறிச் சிவக்க, குண்டு மழையில்
மண்ணும் கடலும் தீப்பிடிக்க, வானும் கறுத்து முகம் மறைக்க
தமிழ் ஈழக்கனவும் கலைந்தே பொய்க,
தமிழ் ஈழ வீரமறவனும் மண்ணில் வீழ்ந்தே மடிந்தாரோ?

பாடும் மீன்கள் முகாரி பாடக், கானக்குயில்கள் கரைந்தே கூவ
எங்கள் கனவும் கலைந்து போனது- வாள் ஏந்திய
சிங்கமும் அஞ்சிடச் சினந்து குமுறிய
தமிழ் ஈழ விடுதலைப் புலிகளின் குரலும் ஓய்ந்து போனது?

சிங்களத்தோடு கைகோர்த்த அயல் நாடுகளும்,
கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய
மூத்த குடியின் வீரத்தை, பேராண்மைத் தமிழனின் வாரிசை
வஞ்சகமாய் வீழ்த்திய கொடுமைதான் என்ன?

கண்ணீரோடு செய்த வேண்டுதல் எல்லாம் வீணானதே
வீரமகுடமும் மண்ணில் சாய-ஈழக் கனவும்
பொய்யாய் கனவாய் கலைந்து போக
தமிழ் நெஞ்சங்கள் வாடிய சருகானதே

காடும்,  கடலும் கண்டு மகிழ உலாவிய வீரபுருஷனை
கடலும் அலைந்தே தேட, காடும் காணாது வாடிச் சோர
கதிரும், காயும் நிலவும் அவனைத் தேடி வாட
ஒற்றைக் குயிலாய் கரையும் மனசு

கடலும் அரைமோதிக் கரையக், கரும்புலியும், கடற்புலியும்
வான் புலியும் சினந்து போராடி மடிய, நிமிர்ந்த நடையும்
நேரிய பார்வையும், கம்பீர நடையும் கொண்ட
வீரத்திருமகனும் மண்ணில் வீழ்ந்தாரோ?

தமிழ ஈழமும் கலைந்த கனவாக,-தன்மானமும்,
மறத்தமிழனன் என்ற மாறாக் கர்வமும் -வரலாற்றில்
நிலைத்து நிற்க, மண்டியிடாத மாவீரன் மறத்தமிழன்.

நெருப்பாற்றில் நீராடி?, நெய் வளர்த்த தீயில் குளிர் காய்ந்து
பேரினவாதப் பேய் ஒழியப் போராடி, உயிரோடு எரியும்
டயர்களில் நீறாகித், தமிழ் மனங்களில் நிலைத்த
வீரப் புலிகளின் தானைத் தலைவனும் வீழ்ந்தாரோ?
வீரத்தின் விளை நிலமும் காடானதோ?
தமிழ் ஈழத்தின் சுதந்திரச் சுடரும் அணைந்துபோனதோ?

ஆண்ட பரம்பரை, மீண்டும் ஒரு முறை-தம்மையாள
கனவு கண்ட வீரப்பரம்பரை வீழ்ந்ததோ?
ஈழ வரலாற்றில் வித்தாய் மாறி மீண்டும் முளைத்திட-
தமிழ் மனங்களில் ஆழப்புதைந்ததோ? ஆளப்புதைந்ததோ?

மடிந்தாலும் வீரனுக்கு மரணமில்லை
வாழ்ந்தாலும் கோழைகளுக்கு-நாளும்
பன்முறை மரணம் என்பதில் ஐயமில்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-22-06-2023*

# மண்ணும் மைந்தரும்

---

முப்பதாண்டு கால விடுதலைப் போராட்டத்தில்
உடல் மண்ணிற்கும், உயிர் தமிழிற்கும் எனப்
போரடி மாண்ட பாராண்ட வீரத்தமிழர்கள்
உலகெங்கும் புகலிடம் தேடிய அகதிகள்

நெருப்பாற்றில் மைந்தர் நீராடக், கண்ணீர் ஆற்றில்
அன்னையர் அல்லாடப், புரிந்த தியாகங்கள்தான் எத்தனை?
இனப்படுகொலைகளாய், இயக்மோதல்களாய்- மாறி
இனமழிந்த கதைதான் வரலாற்று உண்மை

ஒற்றுமையின்றி நாமழிந்த வரலாறு-இன்றும்
ஒன்றுபடாத தமிழனின் அவல நிலைப்பாடு
அன்று தம்முள் போரடி அழிந்த
மூவேந்தர் வரலாறு மாறாத குறைபாடு

இனியொரு யுத்தம் இம்மண்ணில் வேண்டாம்-சிந்திய
இரத்தமும்-உலகெங்கும், அகதிகளாய்ச சிதறிய இனமும்
அமைதி காண, ஒன்றுபட்டு உரிமையை வென்றெடுக்க,
பிரிவினையை ஆகுதியாக்கி அகிம்சையின் வேள்வி யாப்போம்

வீறுகொண்டெழுந்தவரும், போராடி வீழ்ந்தவரும்,
அகதியும், அங்கவீனமானவரும் நம் சகோதரரே
நாம் அனைவரும் ஓரினத்தாரே.

இது நினைவேந்தல்ல -சத்திய சோதனை
நடந்து வந்த குருதிப் பாதையை
திரும்பிப் பார்க்கும் தியானம் இது

காயங்கள் ஆறவில்லை, காணாமல் ஆக்கப்பட்ட உறவுகளின்
நிலை தெரியவில்லை, கண்ணி வெடிகள் அகற்றப்படவில்லை
அகதிகள், விதவைகள், அங்கவீனருக்கு வாழ்வாதாரமில்லை-
அரசியல் கைதிகளுக்கு விடுதலையில்லை.

நீதிக்கும், ஒற்றுமைக்கும் குரலில்லை, பிரிவினையை
மாய்க இன்றும் வழியில்லை, இனவாதம்
மறையவில்லை, இழிந்த அரசியலில் சர்வாதிகாரம்,
பேரினவாதம் இன்றும் நிலைக்கும் நிலை

எங்கே போகின்றோம் நாம்
வேரும் விழுதும் விட்ட மண்ணை விட்டு
வேறு தேசம் ஓடினும் -நம் தாயகம்
ஈழ மண் அன்றோ?

நம் முன்னோரும், மூத்த தலைமுறையும் ஆடிக்களித்து
பாடிக் கொண்டாடிய பூமியிது? மறத்தமிழன் என மார்பறைந்த
வீரம் விளைந்த மண்ணுமிது? மண்டியிடோம், தலை வணங்கோம்
உயிர் மண்ணுக்கும், உடல் தமிழுக்கும் எனப் போராடிய எங்கள் பூமியிது

வீழ்ந்தவரும் சரணாகதியடையவில்லை
***வெற்றி முரசு கொட்டியவரும்-வெற்றி எனச் சொல்ல***
***தமிழ் மனங்களை வெல்லவில்லை-***பாண்டவர் நாம் படிக்க
இது ஓர் புதிய குருஷேத்திரம், காலம் சொல்லிய கீதா உபதேசம்

வன்முறை ஒழித்து, சமத்துவமே நீதி என உரைக்க
சிங்களமும். செந்தமிழும் ஒன்றுபட்ட வாழ
ஓர் நாடு ! ஓர் தேசம் என முழங்க சகோதரத்துவம்
மலர எழுவோம், கைகோர்த்து புதுயுகம் படைப்போம்.

உலகே வியந்து நோக்க-சினந்து எழுந்த
ஈழத் தமிழினம் நடத்தியது இனவாதப் போரல்ல
ஈழத் தமிழனின் உரிமைப்போர்.

இனவாத, மதவாதப் பிரிவினை ஒழிய
ஒரு தாய் மக்கள் நாம் என்று ஒன்றுபட்டு வாழ்வோம்
உழைப்பால் நாம் உயர்வோம், இது கனவா? நிஜமா? நாளைய
நம் தலைமுறை சொல்லட்டும்?வீழ்ந்தது நாமாயினும் எழுவது
அவர்களாகட்டும், எல்லாம் நலமாகட்டும்

பௌத்தம் கடந்து புத்தனாய், கிறிஸ்தவம் கடந்து கிறிஸ்துவாய்
இஸ்லாம் கடந்து சகோதரனாய், ஈழம் நம் தாயகம் என்றே
எல்லோரும் கொண்டாடுவோம், வாழ்வோம்
எல்லோரையும் வாழவைப்போம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-9-8-2023*

# மண் வாசனை

---

ஈழ மண்வாசனையில் கண்ணீரும், செந்நீரும் கலந்து மணக்கும்
கரை தொட்டு மகிழும் கடலலைகளும் பிணம் சுமந்து மனம் கலங்கும்.
நிலம் துளைக்கும் மரவேர்களும் அறியாப் புதைகுழிகளில்
அப்பாவிகளின் உடலங்களைத் தழுவிக் கண்ணீர் வடிக்கும்.

இங்கு
இதழ்விரிக்கும் மலர்களிலும் கண்ணீரின் ஈரம்
பயிர் விளையும் பூமியிலும் குருதியின் சாரம்
பாடும் குயில்களிலும் முகாரியின் ராகம்
பருவம் தப்பிய மழையிலும் கண்ணீரின் சோகம்

இளம் விதவைகளின்-இறங்கிய தாலிகள்
அடகுக் கடைகளில் ஏலம் போயிட
அன்பு இல்லங்களில் அநாதைக் குழந்தைகள்
கல்லான சிலைகளின் முன்-கைகூப்பி
அம்மாவும் நீயே அப்பாவும் நீயே
அன்புடன் ஆதரிக்கும் தெய்வமும் நீயே
பாடலை மனமுருகிப் பாடும்

கல்லறைத் தோப்பில் புதிய சிலுவைகள் முளைத்திட
சுடுகாடு காட்டில் அணையாமல் தீ எரிந்திட
அழுகையும் , அகால மரணமும்
நாளும் தொடர்கதையாகும்

ஈழச் சுதந்திரமோ எட்டாத வானத்தில்
கிட்டாத நட்சத்திரமாய் ஜொலிக்க
துப்பாக்கிகளின் அக்கினி எச்சில் தொடர்ந்தும்
அப்பாவி உயிர்களை துரத்திக் கொன்றிட
கண்ணீர்ப் பூக்கள் பூப்பதா, உதிர்வதா
என எண்ணித் தவித்திட
புன்னகை மறந்த ரோஜா முகங்களில்
சோகமுட்களின் அழியாத கோலங்கள்.
மனதை வருத்தும்

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***

Pax.Ravichandra-3-04-2023

# மறைக்கப்பட்ட மயானங்கள்

ஆயுததாரிகள் கொடிய அரக்கராய் மாறிட கைகட்டி, வாய்பொத்தி,
தொழுது பணிந்து கப்பம் செலுத்தி, அடிமையான மானுடம்,
துரோகி- தியாகி என்ற மாயவலையில் சிக்கவைத்து
மக்களை ஏமாற்றிடும் விடுதலைப் போராட்டம்

முறிந்த பனைகளும், சாய்ந்த தென்னைகளும், சிவந்த மண்ணும்,
இருண்ட வானும், சீரழிந்த ஊரழகைச் சொல்லியழ-தெருவில்
விழிகள் திறந்திருக்க, விழுந்து கிடந்தார், கொடிது, கொடிது
ஆயுதப் போராட்டம் கொடிது என்ற அப்பாவி அகிம்சாவாதி

சீவர ஆடையைச் சிவப்பாக்கிடத் தமிழன் குருதியை
தவிர சிறப்பானது ஏதுமில்லை-எரியும் டயர்களைத்
தவிர எளிதான மயானம்-ஈழத்தமிழர்க்கு
வேறேதுமில்லை என்ற இருண்ட காலம்.

இலையுதிர்த்த மரங்களும் மீண்டும் துளிர்ப்பதற்கு,
நம்பிக்கையோடு காத்திருக்க-வேரறுந்த ஈழத்தமிழினம்
வாழ வழியின்றிப் புலம் பெயர் அகதிகளாய்
அயல் நாடுகளில் வேருண்ட ஓடிய இடம் பெயர் காலம்.

**பௌர்ணமி இரவு- நடுக்காடு**

மண்ணில் புதைந்து மறைந்த மயானத்தில்
ஓநாய் கூட்டம் கூடி ஊளையிட்டு, ஒப்பாரி வைத்து
அகாலமாய் மறைந்துபோன மானுடத்திற்கு
அஞ்சலி செலுத்தி ஆறுதல் சொல்கின்றன

மறைக்கப்பட்ட மயானத்தில் சங்கினில் ஒலிக்கும்
சந்தம்போல-இன்றும் மனதை நெகிழவைக்கும்
அழுகைச் சத்தம் மண்ணில் காது வைத்திடக் கேட்கும்
மாதுயரின் கொடிய அவலம்

முட்டிகளில் சுடப்பட்டு- உயிரோடு புதையுண்டவர்களின்
விம்மல் ஒலிகள், குழந்தைகளின் அழுகை ஒலிகள்,
தாய், தந்தையரின் கண்ணீர்க் கதறல்கள்,
மன்றாட்டு, கூப்பாடு, பெருமூச்சுக்கள் என
சோகத்தின் பல்லவிகள், அச்சத்தின் அநுபல்லவிகள்.

ஆயுதவாதிகளின் அக்கிரமங்களை மூடிமறைத்த மண்ணும்,
எதற்காய் இந்த யுத்தம் எனக்காகவா இத்தனை இரத்தம்
எனக்கேட்டு திகைத்து, ஊமையாய்ப் போனது.
தமிழ் ஈழம் கலையும் கனவாய்போயிட
புதைபொருள் சின்னமாய் சடலங்கள் மாறின.

இயக்கப் படுகொலைகளாலும், இனப் படுகொலைகளாலும்
திசைமாறி ஈழ விடுதலைபோராட்டம் பயங்கரவாதமாய் மாறிட
மறைக்கப்பட்ட மயானங்களில் -மறக்கப்பட்ட தமிழ், சிங்கள, முஸ்லீம்
அப்பாவி மானுடத்தின் ஆயிரமாயிரம் சடலங்கள்.

சத்துரு கொன்றழித்த ஊர்களில்-சத்துருகொண்டான் ஒன்றானது
மாயமாய் மறைந்த மக்கள் கூட்டத்தில்
1990 இல்-கிழக்கு பல்கலைக்கழகத்தில் தஞ்சமடைந்த
அப்பாவித் தமிழர்களும் ஒன்றானார்.

நடுகற்களின்றி, சிலுவைகளின்றி நடுக்காட்டில்
மானுடம், அநாமதேயப் பிணங்களாய் புதைந்துபோனது,
மாலைகளின்றி, கண்ணீர் அஞ்சலியின்றி-இனக்குப்பைகளாய்
ஒரு குழிக்குள் மூடி மறைந்துபோனது.

நள்ளிரவில் உறவுகளைக் கொள்ளையிட்ட இராணுவம்
நடுக்காட்டில் உயிர்களை அழித்து
விடுதலைப் போராட்டத்தின் வித்துக்களை
புதைத்து இனவெறி தணித்தது.

மனுநீதிச் சோழனின் மணிக்கயிறும் அறுந்திட
குருட்டு நீதி தேவதையும் செவிடும் ஊமையுமானது
அகிம்சை துறந்து சிங்கள பௌத்தமும்
ஆறாய் இரத்தம் சிந்தித் தேசியம் பேசியது.

காய்ந்த மண்ணும்- அப்பாவிகளின் குருதியால்
விடாய் தணித்துச் சிவந்திட, காட்டிடை ஒலித்து
மௌனித்த அவலக்குரல்களும், ஆள்காட்டிக்கும்,
ஓநாய் கூட்டத்திற்கும் கண்ணீரை வரவழைத்தன.

மறைக்கப்பட்ட மயானங்கள் திறக்கப்படுமோ?
புதைக்கப்பட்டவர்கள் பெயர்கள் சரித்திரத்தில் எழுதப்படுமோ?
குருதிக்கறைபடிந்த தலைவர்களின் கொலைக்கரங்கள்
விலங்கிடப்படுமோ? நீதியும், சமாதானமும் தேசத்தை ஆண்டிட
ஈழத்தில் இன ஒற்றுமை வருமோ?

குற்றுயிரோடு புதையுண்ட உறவுகளின்
மறைக்கப்பட்ட மயானம், மறுக்கப்பட்ட நீதியானது.
சொல்லப் படாத உண்மை ஊமையாகி,
பகிரப்படாத சோகம் கவிதையானது.

ஆண்டுகள் பல போனபின், மண் ஊர்ந்த
காட்டு மரங்களின் வேர்கள் மறைக்கப்பட்ட
உடலங்களைக் கண்டு அழுதன,
ஈரவேர்களினால் உறவுகளை அணைத்து,
கிளை பரப்பி நிழல் கொடுத்து உறக்கம் பேணுகின்றன.

வானுயர்ந்த மரங்களும் நிழல் கொடுத்திட,
மண்ணில் புதையுண்டு மறைந்த சடலங்களும்
மரங்களுக்கு உரம் கொடுத்திட- நாளும்
பூத் தூவி அஞ்சலி செலுத்தும் காட்டுச் செடிகள்
புலம்பி முகாரி பாடும் புள்ளிக்குயில்கள்.

மறைக்கப்பட்ட மயானத்தில்-ஆறாத் துயருற்ற
அப்பாவி மானுடம் அமைதியில் உறங்குகிறது.
மண்ணைத் தோண்டி, மானுடத்தை எழுப்பி
துயில் கலையாதீர்
மானுடரே உஷ் மௌனம் காப்பீர்!

உறங்கும் உறவுகளை மனம் நினைந்திட
நினைவுச் சின்னங்கள் வேண்டாம்.
உண்மையை தரிசித்வர்களே இனி ஒரு யுத்தமும் வேண்டாம்!-
ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு, ஒற்றுமை நீங்கில்
அனைவருக்கும் தாழ்வு- கற்ற பாடம் மனதில்
கல்லில் பொறித்த எழுத்தாய் நிலைக்க
அமைதியே நாம் வேண்டும் வரம்
இன ஒற்றுமையே எம் வாழ்வின் தவம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-05-05-23*

# மரகத வீணை

---

கட்டளைத் தளபதிக்கு காவலாய்க் கவசவாகனங்கள் செல்ல
இராணுவ வாகனத் தொடரணி நகரைத் தாண்டி ஊர்ந்து நகர
ஊரை அதிரவைத்து-காதைச் செவிடாக்கியது
ஒரு பாரிய நிலக்கண்ணி

வாகனங்கள் சிதறித் தீப்பிடிக்க
துப்பாக்கிகள் சீறிக் குண்டு மழை பொழிய
தீயும், புகையும் கோரத்தாண்டவமாடிட
ஊரழிய, உறவழிய பேரழிவின் தாண்டவம்

குத்து விளக்கேற்றி, சாமி கும்பிட்டு கணவன் வரும் வழி பார்த்த ராதை
குண்டுச் சத்தத்தால் குடிசை அதிர்ந்து குப்பி விளக்கு விழுந்து கவிழ
அண்மித்து வரும் துப்பாக்கி ஓசைக்கு அஞ்சிக் குடிலைத் தாழிட்டு
கூப்பிய கரங்களோடு ஆண்டவனை வேண்டி நின்ற கோதை

நாய்களின் குரைப்பு நடுங்கி நலிய
பூட்ஸ்காலடிகளின் ஓசை-
பலமாய்க் குடிலை நெருங்கி ஒலிக்க
அஞ்சி நடுங்கியஅழகிய சீதை

கதவை தட்டியவர், பின் காலாள் உதைத்திட
தாள் பிளந்து கதவும் தள்ளாடி வீழ்ந்திட
குத்துவிளக்கொளியில் ஜொலித்திடும்
குலமகளின் சுந்தர அழகோ மனதை மயக்கிட
போதையில் வந்த இராணுவம் காமப்போதையில் தள்ளாடிது

காமமும், போதையும் கண்களை மறைத்திட
தம்மபதமும்-இராணுவ நெறியும் காற்றில் பறந்திட,
கோதையை கூட்டாய் வல்லாங்கு செய்து
குலமகள் வாழ்வை சீரழித்த கொடுமை

அஞ்சண விழிகளும் அஞ்சிச் சோர்ந்து கண்ணீர் சிந்திட
கெஞ்சிடும் இதழ்களில் கோவையும் நாணிட
அஞ்சிடும் வஞ்சியின் உடலோ- அழகிற்கு புது இலக்கணம் காட்டிட
விரிந்த கார்குழலும் விம்மித் தணியும் மார்பகங்களும்
மதிவதனமும், மான்விழிகளும் கூப்பிய செங்காந்தள் விரல்களும்
குடிபோதையில் வந்தவர்க்கு பெரும் போதையூட்ட
கெஞ்சிட்ட கோதையை கொஞ்சமும் இரக்கமின்றி-கூட்டமாய்
வல்லாங்கு செய்த கொடிய ஓநாய்கள்

வல்லூறாய் பாய்ந்த கூட்டம் வல்லாங்கு செய்தே
பச்சை கிளியிடம் இச்சை தணித்தது
ஒன்றா இரண்டா என்றறியுமுன் நினைவு தப்பிட
கொடியிடையாள் துடிக்கும் இதயமும் துவண்டு நின்றது.

மஞ்சள் பூசிய மலர் முகமும், மையிட்ட விழிகளும்
மருதாணி போட்ட கரங்களும்
செஞ்சந்தண மேனியும் குருதிச்சேற்றில் நீராட
மண்ணில் கிடந்தது தந்தியறுந்த மரகதவீணை
புழுதியில் சிதறி கசங்கி, அறுந்து கிடந்தது
புத்தம் புதிய வண்ணப்பூமாலை

கலைந்த குங்குமமும்-அறுந்த புதுத்தாலியும்
வல்லூறவால் வாடி விறைத்திட்ட பொன்னுடலும்
குருதி படிந்து மண்ணில் கிடக்க-வளர்த்த நாய்
முக்கி முனகி வாலையாட்டி அழுதது-பின்
வானை நோக்கி ஊளயிட்டது.

காமம் தீர்த்து போதை தெளிந்த அரக்கர்,
புரிந்த பாவம் மறைத்திட குடிலுக்கு தீவைத்து
பூவை எரிந்திடக் குதூகலித்து
தடயம் ஏதுமின்றி தம் வழிபோனார்

தர்மநெறி மாறாது என்ற தம்மபதமும்
சத்தியம் வெல்லும் என்ற நீதியும்
சாட்சியாய் நின்றதை மறந்தார்?
சூனியமாய் நின்ற தர்மம் மறந்தார்

எரியும் குடில் பார்த்து-ஏங்கிப் பதறி ஓடிவந்த பதியும்-பாதிவழியில்
எரியும் டயர்க்கு தீக்கிரையாக, ஏங்கி ஊளையிட்ட நாயும்
வானைப்பாாத்து அழுதது-பின் வாலைச்சுருட்டி மண்ணில் படுத்தது.

*மயானமாய் மாறிய ஊரில்* இழவோலங்கள்
அகதி, விதவை, அநாதை, கற்பிழந்த கோதை என உறவுகள்

யுத்த தீயில் தீக்குளித்து கண்ணீர்த் தவமிருக்கும் தாய்குலம்
கன்னியரும், மனைவியரும் சீரழியத், தாய்குலமோ மாரடித்துப் புலம்ப
அண்ணகனாய்போன கடவுள்- அராஜகமாய்த் தொடரும் யுத்தம்
***ஓ என் நாடே என் தாய் திருநாடே***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-18-05-2023*

# மரணம்

---

சிங்களக் குடி நடு நடுங்க, ஸ்ரீலங்காப் படை நடுங்க,
இந்திய அமைதி காக்கும் படை நடுங்க,
தமிழ்ப் போராளி குழுக்கள் நடுங்க,
கரும்புலியாய், கடற்புலியாய் போராடிய மாவீரர்

அன்னையர், தங்கையர் தாலிகள் அறுந்திட
கண்ணீர், செந்நீர் ஆறுகள் கரையுடைக்க,
இனப்படுகொலைகளால் தமிழினம் வெட்கித் தலைகுனிய
பயங்கரவாதமாய் மாறிய இனவாதிகள்

கப்பமும், கட்டாய ஆட்ச் சேர்ப்புமாய்
அராஜகம் செழிக்க ஆட்சி நடத்தியவர்,
தடைக்கல் எல்லாம் படிக்கட்டாய் மாற்றி
நெருப்பாற்றில் நீந்தி விளையாடியவர்

மக்கள் மனங்களை வென்ற மாவீரர்-இறுதியில்
மனங்கசந்து மானுடம் சபிக்கப் பழிக்காளானார்
திசை மாறிய பாதையில்-உயிர்களை விதைத்து
வசை பாடி மனம் சலிக்க நெறியும், நீதி பிறழ்ந்தார்

தூங்கும்போதும் விழிகள் திறந்திருக்கத் தூங்கியவர்,
துஞ்சிட்டபோதும் -விழிகள் திறந்திருக்க வீழ்ந்து கிடந்தார்.
அஞ்சிட்ட யமனும் அழைத்திட
போராளியும், பயங்கரவாதியாய் மாறிய கொடுமை

சத்தியம் தோற்பதில்லை-தொன்றுதொட்டு
நிலவிவரும் தர்மநெறி மாறவில்லை
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை- பூவுலகில்
நன்மனத்தவருக்கே அமைதி

*Nothing last forever that is the destiny.*
மாறிடும் உலகில், எதுவும் நிலையில்லை
மாறாத விதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-05-05-23*

# மாதரசி ஒரு மனித வெடி குண்டு

---

பாரிய நிலக்கண்ணி அமைதிப் படையைப் பழிவாங்கிட
இல்லிடம் விட்டு, இடம் பெயர்ந்து ஓடிய கன்னி
அமைதிப்படையின் வல்லுறவுக்கு ஆளான மங்கை
அழுது புலம்பி அகதியும், அநாதையுமான நங்கை

பகை கொண்ட நெஞ்சம்-வெறி கொண்டு விடமாலை சூடி-
நடமாடும் மனித வெடிகுண்டாய் மாறிட
வல்லுறவுக்காளான மங்கையோ, இன்று வீர வேங்கை

காலதேவனை மாலை சூடும் மங்கல நாளிற்காய்,
தவமிருந்த வீரமங்கை-வீழ்ந்தாலும் எழுவோம்-
மடிந்தாலும் மக்கள் நினைவில் வாழ்வோம்-மரணம்
எமக்கல்ல -கோழைகளுக்கே! கொதித்த பூவை

பாலியல் வல்லுறவுக்கு பலியான மனம்
பழிவாங்கத் துடிக்க,-பழிக்குப் பழி!-
நாளும் நெஞ்சை நஞ்சாக்கி அறிவை மயக்க,
கொதித்துக் கனலாகி எரிந்த பூவை நெஞ்சம்

எதிரியைக் கொன்று பழிதீர்த்து,
மரணதேவனைச் சரணடைந்திட
மனித வெடிகுண்டாய் வெடித்துச் சிதறிய மங்கை
காலதேவனுக்கு மாலையிட்ட வீர நங்கை

பதிவிரதைகளின் தர்மம் கற்பு என்பது
மனுதர்ம ஆணாதிக்க வேதம்
பாலியல் வல்லுறவோ யுத்தகாலத்தில் சகஜம்
அமைதிப் படை இழைத்த கொடிய அராஜகம்

சோகவனச் சிறையிருக்கும் ஈழச் சீதைகளுக்கு-
அவதார புருஷனும் கற்பனையாக-
பலி கொடுத்து பழி தீர்க்க, மானம் பெரிதென்று
வெறி கொண்ட விடுதலைப் புலி நெஞ்சம்

மறம் அழித்து-அறம் நிறுவ மதுரையை எரிப்போம்
அறைகூவி -நீதியைக் கையிலெடுத்த
கண்ணகி வழிவந்த பெண்மையின் புதுப்புரட்சி
எதிரியை அழிக்க தன்னையே அழித்த தியாகத்தின் எழுச்சி

சிலம்பு நொருங்கிட மாணிக்கப் பரல்கள் சிதறிட
பொட்டழித்து, பூங்குழல் கலைத்து தலைவிரித்து, விழி வெறித்து
மொழி கொதித்து கனல் பறக்க, அரச நெறி பழித்து-
முலையறுத்து, அன்று மதுரையை எரித்தாள் ஒருத்தி

போர் தொடுத்து விடுதலையின் வேரறுத்து
கற்பழித்துக் காம வெறி தணித்து
அமைதி குலைத்த கயவர் அழிந்திட-குண்டு பொருத்திய
உடலை வெடிக்க வைத்தால் வீரத் தமிழச்சி

விட மாலை சூடிக் கரும்புலியாய் உருமாறி
விரித்த கூந்தலில் புதுமலர் சூடி
விழிகளுக்கு மையிட்டு, நுதலில் பொட்டிட்டு-
புன்னகை தவழ, புனிதப் போர் தொடுத்த மங்கை

மனம் கொதிக்க, இதழ் துடிக்க மாலையிட்டு
மனித வெடிகுண்டாய் வெடித்துச் சிதறிட
பகையும் வீழ்ந்து- நெஞ்சத் தணலாறிட-தீயாய்,
சதையாய் கனலாய் சிதைந்த பெண் புலி

முண்டம் அறுந்திட, உடல் துண்டங்களாய்ச் சிதறிட
சிந்திய குருதியும், பரவிய தீயும் மண்ணைச் சிவப்பாக்கிட
பகையறுத்து பழி தீர்த்த பெண்மை-தீக்குளித்து
கற்பின் மேன்மையை பறைசாற்றிய உண்மை

மண்ணும் கொதித்தழ, விண்ணும் குமுறியழ
கடலும் கரைமோதி அழ, வீசு தென்றலும் சூடேறி அழ
சிதறித் தீயாய் உருமாறி பகைவரை அழித்த பெண்மை
ஈழப்போராட்ட வரலாற்று உண்மை

உயிர் உண்டு, ஊன் வளர்த்து உயிர் கொன்று பகைமை அறுத்து
கற்பழித்து காமவெறி தணித்து அடக்கியாண்ட பகைமை
வேரறுந்து மண்ணில் வீழ்ந்திட-வெறிகொண்டு, நெஞ்சில்
சுதந்திர விடாய் கொண்டு பகையறுத்து பழி தீர்த்த பெண்மை

வல்லுறவுக்காளான பெண்மை, கன்னிமையும்,
கனவும் கருகிட வாடிப்போன உண்மை-
வெஞ்சினத்தால் வெறிகொண்ட நெஞ்சம்-
மனித வெடிகுண்டாய்
வீர உருக்கொண்டு காமுகரைப் பழிதீர்க்க
காலனிடம் கோரியதோ தஞ்சம்-தீக்குளித்தும்
சாகாத பெண்மை-கற்பின் மேன்மை

கண்ணகி மதுரையை எரித்தது கற்பனையோ?
காவியமோ? காளி அவதாரம் எடுத்து-தமிழச்சி
கயவர்களை வதம் செய்தது வரலாறே

பெண்மை காத்து, தாய்மை போற்றி
மானம் காத்து, மாண்பு போற்றி
மாதரைக் காத்தல் மானுடர் கடனே
தாய்மை மாண்புற-பெண்மை மகிழ்வுற
உலகம் இன்புறுமே!
எல்லாம் நலம் பெறுமே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-31.05.2023*

# மாவிலாறு

---

மாவிலாறு அணைதிறக்க மாபெரும் யுத்தமிங்கே!
குண்டு மழைபொழிய, குருதிக் கங்கை பெருக்கெடுக்க
ஒப்பாரியும் அழுகையும் ஊரெங்கும் எதிரொலிக்க
உறவும் உடமையுமிழந்து அகதியானது-மூதூர்.

மாவிலாறு அணைதிறக்க-மண்ணில்
பாய்தோடியது நீரல்ல-அப்பாவிகளின் செந்நீர்
நீரால் பயிர் செழிக்க-நீத்தோர்
நினைவுகளால் சொந்தங்கள் சிதைய
வெற்றியை கொண்டாடிய வீர வாளேந்திய சிங்கம்.

நாயுண்ண நரியுண்ண நாற்புறமும் தேடுவாரற்று
நாறிக் கிடந்த உடல்கள்-நீரின்றிச் சோறின்றி
நிலையான இடமின்றி புகலிடம் தேடி
ஓடிக்களைத்த இடம்பெயர்ந்த அகதிகள்.

புறாக்களுக்கு கோயில் மாடங்களும்
புள்ளிக் குயில்களுக்கு தோப்புக்களும்-பறவைகளுக்கு
கூடுகளும், நரிகளுக்கும் வளைகளுமிருக்க
மானுடமோ-பள்ளி, கோயில், மரநிழல்களில்
தஞ்சமடைந்த அவலங்களிங்கே.

## பருவான் கரை

இரவு முழுவதும்
எறிகணைகளின் கோரத்தாண்டவம்
இடிந்து தகர்ந்தவை
குடியிருப்புகளும்  கோவில்களும்
சிதைந்து மடிந்ததோ கர்ப்பிணித் தாய்களும்,
கறவைப் பசுக்களும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-4-4-2023

# போராளிகளின் மேதினம்

---

நஞ்சு கொண்டோம் அஞ்சிட நச்சரவமல்ல-நெஞ்சினில்
கனலை ஏந்தினோம் உறங்கிடும் எரிமலையல்ல
நமனை விருந்துக்கழைத்தே-நடமாடும் வெடிகுண்டுகளான
கரும்புலிகள் நாம்

அடிமை விலங்கை அறுத்தெறிந்திட ஆயுதம் ஏந்தினோம்
சுதந்திரக்காற்றை நீங்கள் சுவாசித்திட, எம் உயிர்மூச்சை
நிறுத்தினோம், நம் மண்ணை வளமாக்கிட-உயிரோடு
எம் உடலையும் உரமாக்கினோம்-

கடமை முடித்தே கர்ம வீரராய்-உறங்குகின்ற மாவீரர் நாம்,
எம் தாயக கனவு நனவானபின், உலாவி வருவோம்
உயிர்க்காற்றாய் நீங்கள் சுவாசிக்க-உருமாறி வருவோம்-
தமிழ் ஈழத் தேசியகீதமாய் நீங்கள் மகிழ்ந்து பாடிட

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
Pax Ravichandra-26.3.2023

# மாயை

---

கொலைகள் எல்லாம் நாளேடுகளில் வெற்றுச்
செய்திகளான அவலங்களிங்கே
நிலக்கண்ணிகளின் உயிர்ப்புக்களால்
நாளும் பெரும் நிலநடுக்கங்களும் இங்கே

நள்ளிரவில் இராணுவம் கதவைத் தட்டும்
வளர்ப்பு நாய்களோ வாய்மூடி மௌனம் காக்கும்
களவாடிய உயிர்கள்-விடியலில் சடலங்களாய் காட்சியளிக்க
நாய்களின் சோக ஊளை வானை முட்டும்

தலையில்லாத முண்டங்கள்-நெஞ்சை நெகிழவைக்க
தமிழ்புலிகளின் கொடுந்தாக்குதல்கள்
சிங்களத்தை அதிரவைக்கும்.

சொர்க்கம் போன உறவுக்காய் -சொந்தங்கள
சோகக் கண்ணீர் வடிக்க-எரியும்
டயர்களில் -இறைவனைத் தேடிடும் புதிய
மோயீசன்களின் கோலாய் துப்பாக்கி மாறும்.

வாடும் ஈழத்தமிழினம் இன்னமும்
பார்வோனின் கொடிய அடிமைத்தனத்தில்
பாக்கு நீரினையோ அகதிகளின் குருதியால்
செங்கடலாகிடும் அவலத்தில்

புன்னகைப் பூக்களோ அதிசயங்கள்
கல்வாரிப் பலியான வாழ்கையில்
குருதிப் பூக்களோ தரிசனங்கள்-நாளும்
கண்ணீர் பூக்களே நிதரிசனங்கள்.

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***

Pax.Ravichandra-2-04-2023

# மனிதன் பாதி மிருகம் பாதி

---

மனிதன் பாதி, மிருகம் பாதி கலந்து செய்த
கொடிய கலவை, இனவெறியொடு, கொலைவெறி கொண்டு
உயிர்ப்பலி எடுத்து, ஊர் பல கொழுத்தி
ருத்திர தாண்டவமாடி வெற்றி முரசம் கொட்ட
கங்கையாய்ப் பாயும் குருதி, ஒப்பாரியோ சுருதி

தீராத இரத்தவெறியோடு சுடலையில் ஆடும் பேய்கள்
ஊளையிட்டு ஊக்குவிக்கும் குள்ள நரிகள்.
கொன்றழித்த உயிர்களும்-குருதி சிந்திப் பலிகொடுத்த
சிறுவர் போராளிகளும் ஆவிகளாய் அலைய,
விதவை, அகதி, அநாதைகளாய்ப் பாதை மாறிய பயணம்
“ இரத்தவெறி பிடித்த மிருகங்களுக்கு”
“***வீரவணக்கமும்***” “***வெற்றிப்பதக்கமும்***” பரிசு

இனவாதத் தீயில் குளிர்காய்ந்த “வாலாட்டிகளுக்கும்”
நிறம்மாறி உயிர் பிழைத்த “ஓணாண்களுக்கும்”
பரிசாய் அரசியல் நாற்காலிகள்.
கோழைத்தனத்தின் சாட்சியமாய்-குப்பைகளில்
சயனைட் மாலைகள்-சரணாகதிக்கு
சாட்சியமாய் வெள்ளைக்கொடிகள்.

செந்தீ எரித்திடும் புலிக்கொடியினும்,
உயரப் பறந்திடும் சிங்கக்கொடியினும்,
ஈரம் காயாத குருதிக்கறை.-இறந்து கிடந்த
மிருகங்களிலும் மன்னிக்க முடியாத பாவக்கறை

முறிந்த பனைகளும் எரிந்து புகைந்திட
பாடும் மீன்களும் நடுங்கி ஓடி ஒளிந்திட
ஓயுமோ இந்த கொடிய யுத்தம்
எல்லோரும் கொண்டாட- மலருமோ
அமைதி யுகம்?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-18-04-2023*

# முகாம்

---

முட்கொடியாய் காவலரண்மேல் படர்ந்த முள்வேலியுள்
உயிர் பறிக்கும் மாயவியாய் உலாவிடும் மின்சாரம்.
காப்பரணாய் நின்ற மண்ணரணுக்குள்
உறங்காமல் விழித்திருக்கும் உயிர்கொல்லிகளாய்
நிலக்கண்ணிகளும் பொறிவெடிகளும்.

மரணமே அரணாகி, மரணமே வாழ்வாகி
மரணமே வழியாகி, மரணித்த மனித்தின் குடியிருப்பாய்
இராணுவமுகாம்-இது காலதேவனின் மயான பூமி
கொலையும் காமமும் கொஞ்சி விளையாடும்
இரத்தக்காட்டேறிகளின் சுடுகாடு

இங்கே கைதிகளாய் வந்தவர்களுக்கு
என்றுமே விடுதலையில்லை
உயிரோடு போனவர்-உருத்தெரியாத
உடலங்களாய் உருமாறுவதே நீதியான நிலை

கொடுமையின் உச்சத்தில்-சூடிய மலர்கள் வாடுமுன்
மலர் சூடியவளே வாடிப்போனாள்
பாடிய குயில்களின் காதல் பண் ஓயுமுன்
பாடிய இணையே தனியாய் போனது பாடையில்

இங்கு புகையாகிப் போகும் உடன் பிறப்பு
கரியாகிப் போகும் இன்னொன்றின் காதல் பிணைப்பு
கட்டிய தாலியும் சூடிய மலர்களும் புழுதியில் வீழ்ந்திட
கவிதை உறவும் இங்கே காணாமல் போகும்

பள்ளிச் சீருடையையும், பட்டுத் தாவணியையும்
கூறைச் சேலைகளையும் துகிலுரியும்
துச்சாதனன்களுமிங்கே-அகலிகைகளை
ஆயுதமுனையில், பாழாக்கும் இந்திரன்களுமிங்கே.

இங்கு செம்மறியாடுகளை வேட்டையாடுதல்
சிங்கங்களுக்கு வீர விளையாட்டானது
புள்ளிமான்களை வல்லாங்கு செய்தல்
காமப்பேய்களுக்கு களியாட்டமானது.

தேசியக் கொடியிலும, வாளேந்திய சிங்கத்துக்கு
சாமரை வீசும் போதி இலைகள்-சீவர ஆடையிலும்
தமிழனின் இரத்தக் கறைகள்.

இறங்கிடும் கண்ணீர் கொடிகளிலும்
அன்பு மகனுக்காய் ஏங்கித் தவிக்கும்
அன்னை மரியாளின் துன்ப நிலைகள்

எரியும் டயர்களோடு கரியாகி புகையாகிப் போகும்
கைதிகளின் முகவரிகள். உருகும்
மெழுகுவர்த்திகளோடு ஒன்றாகிப்போகும்
உறவுகளிகன் துயர நிலைகள்.

முகாம்களே கபால மலைகளாகும்
பிலாத்துக்களின்அநியாயத் தீர்ப்புகளோ
அப்பாவிகளின் வாழ்வுக்கு முடிவுரையாகும்

போதிமர நிழலில் ஞானம் கண்ட
புத்த நெஞ்சுக்குள்ளும் வேதனையால்
புகையும் எரிமலை, அப்பாவிகளின் நெஞ்சுக்குள்
சிலுவை மரத்தில் சிந்தாத எஞ்சிய குருதியையும்
சிந்தி மடியும் இயேசுவின் துன்ப நிலை

கைதாகி காணமற்போனோரின்
மறுவருகை-கானல் நீராகும்
உறவுகளின் துயர நினைவுகளோ நெஞ்சில்
அழியாத கோலங்களாகும்.

புத்தரும் இயேசுவும் இங்கு பௌர்ணமி நத்தார்
பண்டிகை காலத்தே கொண்டாட
வெற்று அவதார புருஷர்களாவர்

தம்மபதத்தாலும் அகக்குருடு நீங்காத
அவலம், மலைப் பொழிவையும்
வாழ்வாக்கி கொள்ளாத துயரம்

கரியாகிப்போன உறவுகளால் பகையாகிப் போகும் இனங்கள்
கசங்கிப்போன மலர்களுக்காய் -முள்ளாய் மலரும் மொட்டுக்கள்
கண்ணுக்கு கண் பல்லுக்கு பல் வன்முறையின் நீதியாகிட
உருவழிந்த மானுடத்தின் கபாலங்கள் கண்காட்சியாகும் அவலங்கள்

சிதைந்த சிற்பங்களாய் சிறைக்குள்
உருவழிந்த உறவுகள்
வதையால் சிதைந்த உடல்கள்
சிறையில் வரையும் குருதிச் சித்திரங்கள்

விடியல் இல்லாத இரவுகளாய் வாழ்கை
ஏழ் சுரத்திலும் அடங்காத இராகங்களாய்ச் சோகம்
விழியோரம் பூக்கும் கண்ணீர்த் துளிகளிலும்
இதழோரம் வடியும் இரத்ததுளிகளிலும்
கரிப்புச் சுவை-விடுதலையோ
எட்டாத வான் நிலவு உலவும் திருச்சபை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra*

# முள்ளி வாய்க்கால் யுத்தம்

முள்ளிவாய்கால் எங்கும் புள்ளி வைக்காது
குண்டுகள் போடும் பிணக்கோலங்கள், உயிர்களும்,
உடமைகளும் தீக்குளிக்க, கண்ணீரும், ஒப்பாரியும் கதறிக்.
கடவுளை அழைக்கும் ஊழிக்கால அவலங்கள்

அங்கம் சிதறிப் பிணமான அப்பாவிகளைக் கண்டு
வங்கக்கடலும் கரைமோதி அழுதது
காக்கையும். கழுகும் கடும் பசியிலும் கூட்டமாய்
உண்ணா நோன்பிருந்து துயரம் பகிர்ந்தன

எறிகணைகளால் பனைகளும் முறிந்து கருகிட
இடிந்த வாழிடங்கள் புகைந்திட, சிதறிக் கிடந்த
உடலங்களை, எரித்தும், புதைத்தும்
மனிதப்படுகொலையை மறைத்த பேரினவாதம்

மூண்ட பெரு யுத்தத்தில் மனைவி, பிள்ளைகளை இழந்து
பூண்ட தவம் கலையாமல் போராடி நின்ற வேங்கை- உடல்
மண்ணிற்கும், உயிர் தமிழ் அன்னைக்கும் என்றே
வீழ்ந்த மாவீரன், சங்கத் தமிழன்னை காணாத வீரமறவன்

கடல் அலைகள்போல் சோகம் பொங்கி எழுந்தாலும்
அணையாத வீரக்கனல் நெஞ்சில் எரிமலையாய்ப் பொங்க, மண்டியிடேன்,
தலை வணங்கேன், சரணாகதியடையேன் என்றே, புண்பட்ட நிலையிலும்,
புன்னகையோடு, தமிழன்னை கண் கலங்கப் போராடி வீழ்ந்த மாவீரன்

ஆயிரமாயிரமாய் வீழ்ந்தவர் உடலங்கள், ஆகுதியாய்
எரிந்தும், மண்ணில் புதைந்தும் சாட்சியமின்றி மறைந்திட,
இன்றும் தணல் ஆறாத முள்ளிவாய்க்கால் பூமி
அப்பாவிகளும், போராளிகளும் ஆகுதியான அசுர வேள்வி

நினைவேந்தலின்றி, ஈமக்கிரியைகள் இன்றி
மண்ணிற்கு உரமான உறவுகள்
சோகத்தால் நொந்து பாசத்தால் வெந்து
காணாமல் ஆக்கப்பட்ட கனவுகள்

எழுப்பிய நினைவேந்தல் தூபியும் இடிபட்டு சிதைந்திட
நடுகல்லும் நள்ளிரவில் களவாய் மறைந்திட
தமிழன் உணர்வும். தாயக் கனவும்-.இன்றும்
மாவீரரால் பேரினவாதிகளுக்கு சவாலானது

அன்னையர் பெற்ற அருமைச் செல்வங்கள்
காதல் அரும்பும் காளைப்பருவத்தில்-காயம்பட்ட
தாயகத்திற்காய்-ஆயுதம் ஏந்திய போராளிகள்
விழுப்புண் தரித்து வீழ்ந்த வீரத் தமிழ் மறவர்கள்

கண்ணீரில் சொந்தங்கள் நீராட,
நெருப்பாற்றில் நாளும் எதிர்நீச்சல் போட்ட
வீர மறவர்க்ள், வீழ்ந்தே மண்ணிற்கு உரமானார்
தமிழ் மனங்களில் வாழும் நினைவானார்

எண்ணி அழ ஓர் நாள் போதாது, கண்ணீர் சிந்திட வாழ்நாள் போதாது
மடிந்தவர்சோகம் அணையாத் தீயாய் நெஞ்சில் எரிந்திட
மனமே முள்ளிவாய்க்காலாய் மாறிய கொடுமை-ஈகைச் சுடரேற்றி
புலம்பியழ, ஈழத் தமிழனுக்குச் சுதந்திரமில்லாத அவலநிலைமை

**தணியாது தமிழர் சுதந்திரதாகம்**
**மடியாது தமிழ் ஈழம் எம் தாயகம் என்ற யாகம்**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-8-2023

# முள்ளி வாய்க்கால் முற்றம்

---

சிங்கக்கொடியிலும் , சீவர ஆடையிலும் தமிழனின் இரத்தக்கறை
முள்ளிவாய்க்கால் முற்றத்திலோ-எம் கொடுந்துயரங்களை
காட்சிப்படுத்தும், காலத்தால் அழியாத சிற்பக்கலை



முள்ளி வாய்க்கால் எங்கும் புள்ளி வைத்துப்
பேரினவாதம் போட்ட குருதிக்கோலங்கள்
சாட்சியங்கள் இல்லாத இனப்படுகொலையை
காணொளி காட்சிப்படுத்திட, வெடித்த பூகம்பம்

காலம் பல போனபின்பும், களம் விழுந்த உறவுகளுக்காய்
நினைவேந்தல் நினைவுகளை முன்னெடுத்து
சோகத் தவமிருக்கும் சொந்தங்கள்.

வானும், மண்ணும், கடலும் தீப்பிடிக்க-எறிகணைகளும்,
பீரங்கிகளும், விமானங்களும், கப்பல்களும்
யுத்தத் தாங்கிகளும் தீ மழை பொழியத் தீக்குளித்த சொந்தங்கள்
சாட்சியமின்றி சாம்பலான அவலங்கள்.-தீமேயும் பூமியிலே-
தீய்ந்து மணந்த பிணங்கள்-அலைமோதும்
கரையில் மிதந்து ஒதுங்கிய உடலங்கள்



வாழ்ந்த மண்ணே திறந்த சிறைக் கூடமாகிட-மண்ணின்
மைந்தரைச் சிறை வைத்து மனங்களைச் சிதைத்தார்
கண்களைப் பிடுங்கி, கைகளைக் கட்டி-நிர்வாணிகளான
நிராயுதபாணிகளை சுட்டுக் கொன்று இரத்த வெறி தணித்தார்-



இனப்படுகொலையை இன்றும் மறுக்கும் சிங்களம்
அழுதும் தீராத சோகத்தால் வாடும் ஈழம்-வாழ்ந்த
மண்ணைச் சுடுகாடாக்கி, வீழ்ந்த சொந்தங்களைச் சாம்பலாக்கி
சிங்களம் புரிந்த யுத்தக் குற்றங்களதான்! எத்தனை ? எத்தனை?

சிந்திய குருதி முள்ளி வாய்காலைச் சிவப்பாக்க
விண்ணேகும் ஆவி கண்களைக் குளமாக்க
காணாமல் ஆக்கப்பட்டோருக்காய்
இன்றும் தவமிருக்கும் சொந்தங்கள்.

கற்பூரமாய் உயிர்கள் எரிந்திட, கற்சிலையான தெய்வங்கள்
வன்முறை ஊக்கிகளாய் காவிகளும் மாறிட
இனவாதம் வளர்க்கும் அரசியல் சித்தாந்தங்கள்

தம்மபதத்தின் காவலர்கள் மத்தியில்
புத்த தர்மத்தை காணோம்
இம்சையும், இனவாதமும் ஓங்கும் தேசத்தில்
புத்தர், இயேசு, அல்லாவைக் காணோம்



இனமழிய, ஈழ விடுதலையின் மணி மகுடமும் மண்ணில் சரிய
பனையழிய, பாடும் மீன் அழிய, பண் ஒலித்த மண்ணில்-
இழவும் ஒப்பாரியும் பத்தாண்டு போனபின்பும் தொடர்ந்து ஒலிக்க
முள்ளிவாய்க்காலில் தொடரும் முடியாத நினைவேந்தல்கள்




முள்ளிவாய்கால்-இது முடிந்துபோன
ஒரு நிகழ்வின் முற்றுப்பெறாத அத்தியாயம்
மடியாத விடுதலைப் போரின் புதிய தொடக்கம்.
மரிப்பதற்காய் வாழ்பவர்கள் மத்தியில்-வாழ்வதற்காய்
உயிரை அர்பணித்தவர்களின் புதிய குருஷேத்திரம்.

அங்கம் சிதறிட மாண்டவரும்-மான பங்கம் செய்திட
மடிந்த தாய்க்குலமும், மருந்தின்றி, உணவின்றிச் சாய்ந்தவரும்
ஓயாத குண்டு மழையால் அழிந்த ஊர்களும், உறவுகளும்
எண்ணிலடங்குமோ? எண்ணிடப் புலம்பும் நெஞ்சம்?

முள்ளி வாய்க்காலில் நடந்தேறிய இனப்படுகொலைக்கு
சாட்சியமாய்- காலமுள்ளவரைக்கும்
காண்போர் மனங்களை நெகிழவைக்கும் கற்சிற்பங்கள்
வரலாறான ஈழத் தமிழ் இனத்தின் உரிமைப் போரட்டங்கள்





முள்ளிவாய்கால் முற்றம்-இது
அழுவதற்காய் கட்டப்பட்ட கல்லறையல்ல
அடிமைத் தளையுடைக்க ஈழமறவர்
ஏற்ற விழுப்புண்களின் அடையாளச் சின்னம்.

இது வீழ்ச்சியின் வரலாறு அல்ல நாளைய மாட்சிக்காய்,
புதிய எழுச்சிக்காய் விதைக்கப்பட்டவர்களின் நினைவாலயம்.
ஈழவர் எழுச்சியின் புதிய குருஷேத்திரம்.
இது யுத்த பூமியல்ல-மந்தைகளாய்-ஈழத் தமிழினம்
கொல்லப்பட்டதற்கு சாட்சியான பலிப் பீடம்.

வாழ்வதற்காய் வீழ்ந்தவர் வீரவரலாற்றைத் தொடர
பேச்சிலும், உயிர் மூச்சிலும், சுதந்திரம் ஆர்ப்பரிக்க எழுவோம்
ஏழ் ஏழ் பிறப்பிலும் தமிழ் ஈழக் கனவை நனவாக்க- வீழ்ந்தாலும்
எழுந்தே -நம் இலட்சியப்பயணத்தை தொடர்வோம்
எங்கள் தாகம்- தமிழ் ஈழத் தாயகம் என முழங்குவோம்

மூளியான முள்ளிவாய்கால் முற்றத்தின் துயர் துடைக்க
இமயவரம்பன் சந்ததி நாம் என உலகம் அறியப்
இமயத்தில் ஒரு பகுதியை பெயர்த்து வா தமிழா,
நாளைய தமிழ் ஈழ வெற்றியை
இன்று நாம் பொறித்தே-நம் சந்ததிக்கு
எம் சரித்திரத்தைச் சொல்வோம்.





இது வேண்டுதல் அல்ல, எம் இனம் விழிக்க
ஈழ விடுதலைக்காய் விடுக்கும் அறை கூவல்!

முடியாதது ஏதுமல்ல முயற்சிகள் ஓயும் வரை
தோல்விகள் நமக்கில்லை- வானமே எம் எல்லை!
தமிழ் ஈழத் தாயே , மறவர் நாமோ உம் பிள்ளை

இன அழிப்பை நடத்திய பேரினவாதம்-
புது விதைப்பாய் மாறிட்ட ஈழவர் போராட்டம்
ஊலகெங்கும் புலம் பெயர்ந்த ஈழத் தமிழினம்
"தமிழ் ஈழம் எங்கள் தாயகம்" மாறாத முழக்கம்




**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-23-06-2023*

# முள்ளிவாய்கால் யுத்தம்

---

முள்ளிவாய்க்கால் எங்கும் கொள்ளிவாய்ப் பேய்களின்
கோரத் தாண்டவம்-சிங்கள இனவாத யாகத்தில்
சீன, இந்திய, பாகிஸ்தானிய ஆயுதங்களின் ஆணவம்

அமெரிக்க, ரஷ்ய மந்திர ஆலோசனைகள்
எட்டப்பனாய்க் காட்டிக் கொடுத்த
கருணா, பிள்ளையான் ஒட்டுக்குழுக்கள்
ஆகுதியாய் தமிழனின் உறவுச்சங்கிலிகள்

குண்டு மழையிலும், கோரத்தீயிலும் சிதைந்த உறவுகள்
மாமிசக் குப்பைகளாய்க் குவிந்து கிடக்க-நந்திக் கடலைச்
செங்கடலாக்கிட நதியாய் பாயும் குருதி வெள்ளம்

வீசு தென்றலும் நாறி மணக்க, விண்மீன்களும், நிலவும்
கரும்புகையால் முகம் மறைக்க
உதயம் காண இருளாய் எங்கும் புகையும், தீயும்

முல்லைக் கடலோரம் அலை ஒதுக்கும் முண்டங்கள்
நந்திக் கடலில் நாறி மிதக்கும் குண்டு துளைத்த உடலங்கள்
காற்றும், மண்ணும், மழையும், அலையும் கடலும்
மாண்டவருக்காய் அழுது புலம்ப, மாளாத்துயரத்தில்
உயிர் பிழைக்க புகலிடம் தேடும் உறவுகள்

நூலாம் படைகளாய் அறுப்புண்ட பொப்பிள்- தாலி கொடிகள்
மண்ணில் விதைப்புண்டு, கடலில் சாம்பலாய்க் கரையுண்டு
தீயில் எரியுண்டு, அமிலத்தில் கரையுண்டு
காணாமற்போன சொந்தங்களோ இலட்சங்கள்,
மண் விடுதலைக்காய் மடியாத ஈழத்தமிழன் இலட்சியங்கள்

இனவாத யாகத்தின் இனவழிப்பு, ஈழத் தமிழர்க்கோ
விடுதலையின் புது விதைப்பு
மண் வாசனையிலும்-மறவர்களின் குருதிக்கலப்பு
வீசு தென்றலிலும் வீழ்ந்த தமிழனின் சுவாச நெருப்பு

மண்ணும், விண்ணும், காற்றும், கடலும். தீயும் டயரும்
எம்மவர் துயரம் சொல்ல, வானும் மழையாய் அழுதிட,
காற்றும் பெருமூச்சாய் வீசிட, எரிந்த எம்மவர் ஆஸ்தியை
ஏந்திக் கடலில் கரைத்திடும் அலைக்கரங்கள்
ஆழச்சென்று புதையுண்டவருக்கு ஆறுதல் மொழிந்திடும்
முறிந்த பனையின் வேர்கள்

மண்ணும் கடலும் வீழ்ந்தவரை மறைத்திட
மனங்களோ, மறைந்தவரை தினம் நினைத்தழ
நினைவாய்போன சொந்தங்கள்
கனவாய் கலைந்த  விடுதலைப் போரட்டங்கள்.

வானும், மண்ணும், கடலும் அலையும் வாழும்வரை-
வீழ்ந்தாலும் எழுவோம்-
வெட்டிச் சாய்தாலும் திரும்ப முளைப்போம்
தோல்வி இலட்சியங்களுக்கில்லை
தோற்றவர் இலட்சியவாதிகளுமில்லை
நாளை நமதே
இம் மண்ணும் ஒரு நாள் எமதே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-05-2023

# முறிந்த பனை

---

***பகைமையைப் பகைமையினால் தணிக்க முடியாது***
***பகைமையை அன்பினாலேயே தணிக்கமுடியும்.***
***இதுதான் தொன்றுதொட்டு வருகிற தர்மமாகும்***

முறிந்த பனைகளும் சிதைந்த மனைகளும் யுத்தத்தின் கோரம் சொல்ல
எரியும் சிதைகளும், எழுப்பிடும் புதைகுழிகளும் பிரிவைச் சொல்ல
மழை போட்ட வெள்ளக்கோலம் இயற்கையின் துயரைச் சொல்ல
விழி பூத்த கண்ணீரும் மொழி பூத்த சோகமும் மனத்துயரைச் சொல்ல
வாடி நின்றார்-வாழ்ந்த மண்ணில் அகதிகளான வன்னி மக்கள்.

மனதிலோ சரணாகதியின் அபஸ்வரமில்லை
மா துயரின் அழுகையொலி இல்லை-வாழ்விலும்
சாவிலும் ஈழச் சுதந்திரமே தேசிய கீதமானது

எறிகணைகளின் கோரத்தாண்டவத்தில் குடிமனைகள் சாயும்
பல்குழல் பீரங்கிகளின் தீ மழையில் விளை நிலங்கள் தீப்பாயும்
குண்டு விச்சு விமானங்களின் கொலை வெறியில்
புள்ளிமான்களும் வெள்ளைப்புறாக்களும் ஒன்றாய் மாயும்.

யுத்தமிடும் இரத்தக்கோலம்
வன்னி மண்ணின் வாழ்வை கொன்றழிக்கும்
பேரினவாதிகளின் வெற்றிக்கோஷம்
சர்வதேச சமூகத்தின் நீதியைப் பழிக்கும்

இரணகளமான குருஷேத்திர பூமியில்
வேங்கைகளின் புதிய போர் வடிவங்கள்
ஏழ்கடலையும் மூழ்கடிக்கும்-சோகவெள்ளத்தில்
எதிர் நீச்சல்போடும் தமிழ் அகதிகள்.

எறிகணைத் தீயில் வெந்து வீழ்ந்திட்ட தேகமும்
குண்டு துளைத்து வித்துடலாய் சிதையுண்ட காயமும்
கந்தையாய் கிழிந்து மனித வெடி குண்டாய் சிதறிடும்
தியாகமும், விதியை முந்திய விடுதலைப் பயணத்தில்
தமிழ் ஈழ சிந்து பாடியே-மண்ணில் வீழும்.

எல்லாமிழந்து ஏழைகளானோம்
இதயத்தில் சோகத்தை சுமந்து வேதாந்திகளானோம்
கஞ்சிக்கும் , கூழுக்கும் கையேந்தி
கடல் கடந்து புகலிடம் தேடும் அகதிகளானோம்

சோகச் சிறையிருக்கும் அசோகவனச் சீதைகளும்
காலனோடு போராடும் சாவித்திரிகளும்
ஆயுத மாதவியிடம் மோகித்த கோவலனுக்காய் தவமிருக்கும்
அபலை கண்ணகிகளும்-கானகத்தே கைவிடப்பட்ட
தமயந்திகளும் ஒன்றாய்த் கண்ணீர்த் தவமிருக்க-யுத்தமோ
கலைமான்களை வேட்டையாடி-அன்னையர்
கன்னியரில் காமம் தணித்த கொடுமை

குடியிருப்பும் கோயிலும் -படையெடுப்பால் பாழ்பட
அடைமழையும் வெள்ளமும்-ஆழ்கவலையில் ஆழ்த்திட
விடையின்றி வீதிக்கு வந்தவர்-குடையாய் பனையோலையும்
குந்தியிருக்க முறிந்த பனையையும் தேடியலைந்தார்.

பசியும் பிணியும் நிழலாய்த் தொடர
பச்சிலம் குழந்தையும் பசியால் கதறிட
தாயின் முலையும் வற்றிய கொடுமை-தமிழன்
சுதந்திர உணர்வோ வற்றாத மேன்மை

எறிகணைகளும் பீரங்கிகளும் எழுப்பிடும் ஒலியை
இசையாய் இரசித்து-வன்னி விடுதலைக்காய்
கண்ணீரும் செந்நீரும் கலந்தோடும் கோர யுத்தத்தை
கலிங்கப்போரென நினைத்து மகிந்தாவின் யுத்தம்
மகா அசோகரின் யுத்த ஞானம் கிட்டாத அவலம்

கத்தும் கடலிலும் கடும் புயல் பூத்திட
கார்மேகமும் கடும் மழையாய் கரைந்து கண்ணீர் சிந்திட
கருவான் நிலவும் முகம் மறைத்து அமவாசை என்றிட
வித்துடல் தாங்கிய வீரமண்ணும் கருத்தரித்தது
ஒழிக ஆயுத வன்முறை என்ற அகிம்சையின் இசை
நலலோர் மனங்களில் ஒலித்தது

யுத்த நெருப்பில் குளிர் காய்ந்து-
ஈரமண்ணில் தலைசாய்த்து
இறப்பும் இழப்பும் நிழலாய்த் தொடர
எட்டுத் திக்கும் எமனோடு போராடும்
ஈழத்தமிழன் துயர் என்று தீருமோ-இறைவா?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***

*Pax Ravichandra-29.3.2023*

# முறிந்த பேனா

உயிரைத் துச்சமாய் மதித்து- யுத்த முனையிலும்
உண்மைக்குச் சான்று பகிர்ந்த ஊடகவியலாலர்களின்
பங்களிப்போ சத்திய யாத்திரை
நாளும் தீ மிதிப்பான வாழ்வோ தீர்த்த யாத்திரை

ஆயதவாதிகளின் அராஜகங்களுக்கு
மண்டியிட்டு தலை வணங்காத
"**வணங்கா முடிகளே**"-
சத்தியத்திற்கு சான்று பகிர்ந்து
உண்மைக்கே உரமான உத்தமர்களே
உங்களுக்கு எனது **கீதாஞ்சலி**

உங்கள் குரல் உண்மையை எதிரொலித்து
பொய்மையின் முகமூடிகளை கிழித்தபோதுதெல்லாம்-
ஆயுதவாதிகளின் அசுர வேள்விக்கு
நீங்கள் ஆகுதிகளான கொடுமை.

உண்மைக்கு உங்களை உரமாக்கிய வீரமும்
பொய்மையின் மாயக் குரூரங்களிலிருந்து-மானுடத்தை
சுத்திகரிக்கச் சிந்திய புனித இரத்தமும்
வானும் மண்ணும் உள்ளவரை வரலாற்றில் வாழும்

உண்மையின் புரட்சித் தீயை -உள்ளோடும்
உயிர்ச் சிவப்பை சிந்தி அணைத்திட்ட கோரம்
பாசிசப் பயங்கரவாதம்
ஈழ வரலாற்றறை மாசுபடுத்திய சர்வாதிகாரம்

உண்மையை மறுதலித்த ஆயுதவாதிகளோ கோழைகள்
உண்மைக்குச் சான்று பகிர்ந்த நீங்களோ
வீர மறவர்கள், தூசு படியாத கண்ணாடியாய்-
நிஜத்தை பிரதிபலித்த உங்கள் செய்தி

அராஜகத்தை, ஆயுத துஷ்பிரயோகத்தை
ஆயுதவாதிகளும்-ஆட்சியாளர்களும்
நியாயப்படுத்தியபோதெல்லாம்-
துப்பாக்கி நெஞ்சைக் குறி பார்க்க
நிமிர்ந்த நெஞ்சும் நேரிய பார்வையுமாய்
நெற்றிக் கண் காட்டினும்
குற்றம் குற்றமே என்ற நக்கீரன் பரம்பரை

சத்தியத்தின் குரல் வளையை நெரித்து-தம் மனச்சாட்சியை
கொலை செய்த ஆயுதவாதிகளுக்கு புரட்சியாளர் விருதுகள்
ஒத்தூதும் தலையாட்டி பொம்மைகளோ அண்ணகர்கள்-
முதுகெலும்பிலாத கோழைகள்

முறிந்த பேனாக்கள் சிந்தும் மையும்
மாண்ட ஊடகவியலாளனின் உயிர்குருதியோடு
உண்மைக்குச் சாட்சியம் பகிரும்
வெற்றுப் பக்கங்களோடு வெளியாகும் பத்திரிகைகளும்
ஊடகத் துறையை தணிக்கை செய்யும்
அரசின் அடக்குமுறையை பழித்தே எடுத்துரைக்கும்

உயிர் பறிக்கும் ஆயுதத்திலும்-உண்மைக்குச்
சான்று பகிரும் எழுதுகோல் புனிதமானது
ஆயுதவாதியிலும் -சத்தியத்திற்கு சாட்சியமான
ஊடகவியலாளன் பணி புரட்சியானது

முறிந்த பனை யுத்தத்தின் கோரம் சொல்ல
மூடிய பேனா அராஜகத்திற்கு சாட்சியம் பகிர
படை, குடை, கோல் கொண்டு மண்ணாண்ட
மா மன்னரெல்லாம் முடிவில் மண்ணாகிட-
அன்பு, உண்மை, கருணையோடு
மனங்களை வென்ற மாமனிதர்கள்
இன்றும் வாழும் தெய்வங்கள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-28.3.2023*

# நாடு–வீடு–காடு

---

பயணத்தின் முடிவு ஒன்றாயினும், பாதைகள் வேறு எனக்காட்டி நிற்கும்
மதங்கள் பிரிவினையின் சின்னமாக, சட்டமும், நீதியும் ஏட்டில் உறங்க
இன, மத, மொழி வெறி மனங்களை தீய்க்க, நடந்து முடிந்த
முப்பதாண்டுகால யுத்தம் கங்கையாய் ஓடிய மனித இரத்தம்.

இன மத, மொழி பேதமின்றி, குண்டுகள் உயிர்களைக் கொல்ல
தாய்குலம் கண்ணீர்த் தவமிருக்க, கடல் சூழ்ந்த தீவில்
கண்ணீர் சூழ வாழும் மானுடம், சுடுகாட்டுத் தீயை
எரியும் டயர்களில் ஊருக்குள் கொண்டு வந்த இராணுவம்.

மனிதப் புதைகுழிகளும், மாவீரர் துயிலுமிடங்களும் பாழ்பட
வீழ்ந்த இராணுவத்திற்கு அஞ்சலி செய்ய மணிமண்டபம் கட்டி
வெற்றித் திரு விழா எடுக்கும் தேசியம், "***நினைவேந்தல்***" நடத்த
தமிழருக்குத் தடைவிதிக்கும் ஆளும் பேரினவாதம்

கண்ணீர் தவமியற்றும் தாய்க்குலம், வறுமையோடு போராடும்
விதவையினம், விடியல் தேடும் அங்கவீனப் போராளிகளும்
புலம் பெயர்ந்த அகதிகளும்
நாதியற்ற அநாதைகளும் ஈழத் தமிழினம்

காடு மண்டிய ஊர்களும், கண்ணி வெடிக்காடாய் மாறிய கழனிகளும்
ஊனமுற்ற கால்நடைகளும், முறிந்த பனைகளும், சாய்ந்த தென்னைகளும்
மௌனராகம் பாடும் மீன்களும் ஓயாத சோகம் சொல்ல
விடுதலையின்றி சிறைகளில் வாடும் தமிழ் அரசியல் கைதிகள்

கண்களின் ஈரம் காயவில்லை, இதயத்தின் காயங்கள் ஆறவில்லை
உள்ளத்து அழுகுரல் ஒயவில்லை, இனவாதம் ஒயவில்லை
அழுவதற்கும், விளக்கேற்றுவதற்கும், நினைவேந்தலை
நடத்துவதற்கும், தமிழருக்கோ உரிமையில்லை

யாழில் பண்ணில்லை, பாடும் மீன்களும்
மௌனித்த நிலை, தாளம் மறந்த மேளங்கள்
சுருதி குலைந்த நாதஸ்வரங்கள்
அபஸ்ஸீரமான அவலங்கள்

மண்ணுக்குள் புதைந்து, கண்ணுக்குள் கசிந்து
நெஞ்சுக்குள் வாழும் சொந்தங்கள்
கனவாய் பழங்கதையாய் ஆனதே
நிம்மதி பொய்யாய், பழங்கதையாய் போனதே.

கனவுகள் மலருமுன் கருகிய மொட்டுக்கள்-
அந்தி சாயமுன் முந்தி உதிர்ந்த மலர்கள்-மண்ணிற்கு
உரமான சொந்தங்கள், மனதில் ஆறாத காயங்கள்
உதயம் காணாத வானம், இதய வீணையில் ஓயாத முகாரி ராகம்

எங்கள் கண்ணீரில் ஏழ் கடலின் உப்பு, எம் செந்நீரால்
இம் மண்ணும் சிவப்பு-ஆலா வட்டமிட்ட வானில
கழுகுகளின் ஆரவாரம்-அலைமோதும் கடலோரம்
அலை ஒதுங்கும் பிணங்களின் துர் நாற்றம்

உதிர்ந்து, புதைந்து மறைந்தவைக்காய்
அழுது நாளும் இதயம் சோகத்தை அடைகாக்க
தமிழ் ஈழம் கலைந்த கனவானது
வாழ்வோ, சோக அலைமோதும் கடலானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-8-2023

# நாளை நமதே

---

யார் சொன்னார்? தமிழ் ஈழம் எட்டாத இலட்சியமாய்
கைக்கு கிட்டாத நட்சத்திரமாய் மாறிட
முள்ளி வாய்காலில்-சிங்களம் நீர்குடமுடைத்து
தமிழ் ஈழத்துக்கு கொள்ளிவைத்ததென்று?

ஆயுதப்போராட்டம் தோற்றிட
உயிர்களும், உடமைகளும் அழிய,-அகதிகளாய்
ஈழத் தமிழினம் உலகலைய, உறவுச் சங்கிலி சிதைய-நண்பா
தமிழ் ஈழக் கனவு கலைந்தது உண்மை-ஆயினும் எம்
தமிழ் உணர்வுகள் அழியவில்லை-உள்ளத்தே
ஈழ விடுதலையின் கனல் அணையவில்லை

சிந்திய குருதியால் சிவந்த மண்ணும்
புதிய விதைப்பிற்கு இன்னமும் தயாரில்லை,
அறுப்புண்ட தாலிகளுக்கும்
அங்கவீன உறவுகளுக்கும், அநாதைகளுக்கும்
விடிவுகாலம் பிறக்கவில்லை

முறிந்த பனைகளும் முளைக்கவில்லை-அச்சுறுத்தும்
நிலக்கண்ணிகளும் ஆழ்துயில் கலைக்கவில்லை-
கிழக்கே பாடும் மீன்களுக்கோ உணவில்லை

ஓடும் கண்ணீரும்-அழிந்த உறவைச்
சுமக்கும் நெஞ்சங்களும்-மீண்டும் தழைக்க
காலம் இன்னும் கனியவில்லை-எம்
கண்ணீர் மழைக்காலம் ஓயவில்லை

காணமற்போனவர்களும் கண்படவில்லை
அரசியல் கைதிகளின் கைவிலங்குகளும் கழரவில்லை-
கண்ணீர் தவங்களுக்கு கடவுளும் இரங்கவில்லை
பாதை மாறிய பயணம் வீடு சேரவில்லை

நடந்து வந்த பாதையிலோ குருதிக்கறைகள் காயவில்லை
கண்ணீர் வெள்ளம் வடியவில்லை
திசைமாறிய போராட்டம் பயங்கரவாதம்-
அவப் பெயர் நீங்கவில்லை- புரிந்த கொடும்
பாவங்களுக்கு மன்னிப்பு கிட்டவில்லை

இதயத்திலோ-இமயச்சோகம்
இறக்கி வைக்கச் சுமைதாங்கியில்லை
தலை வைத்து உறங்க தாய்மடி இல்லை

தாய் மண்ணைச் சுற்றி கடலாய் இராணுவம்
கவலை சூழ்ந்த முகங்களிலோ கண்ணீர் பிரவாகம்.
திறந்த சிறையில் எம் வாழ்வு.

சிந்திய குருதியும் புரிந்த தியாகங்களும்-பலனின்றி
பொய்யாய் போனதே- ஐயகோ விழலுக்கு இறைத்த நீரானதோ?
விடியல் வெகு தொலைவிலில்லை
நம்பிக்கைதான் நம் சுதந்திரத்தின் எல்லை

நண்பா காத்திருப்போம்
ஈழக்கனவை நெஞ்சில் காத்து-விடுதலை
கனலை அணையாது வளர்த்து
நாளைக்காய் காத்திருப்போம்
நம் விடுதலைக்காய் விழித்திருப்போம்.

இரத்தம் சிந்தும் யுத்தம் வேண்டாம்
சமத்துவ சமதர்மச் சமுதாயம் மலர
ஒன்றே குலம்- அன்பே தெய்வம் தழைக்க
சத்தியமே பாதை-அகிம்சையே நம் தர்மம்

எல்லோரும் நலம் வாழ
இன மதம் கடந்த இன்ப உலகம் எம் நாடு
நாளை நமதே
ஒரு தாய் மக்கள் நாம் என்பதோ தேசிய கீதம்
இன, மத, மொழி கடந்த ஒற்றுமையே நம் வேதம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-23-05-2023*

# நாளை உனதே

---

முகில் கிழித்து, வான் உழுது குண்டு மழை பொழியும்
விமானங்கள், நீர் கிழித்துக், கடல் எரித்து, நிலம் நடுங்கத்
தீ மழை பொழியும் யுத்தக் கப்பல்கள்
உடல் துளைத்து, உயிர் அழித்துக் கொலைப் பசியாற்றும்
குண்டுகள் மண் அதிர, உடல் சிதற, இடியென விழுந்து
மரணக்குழி பறிக்கும் எறிகணைகள்

எரியும் மண்ணில் எங்கும் அங்கம் சிதறிய
உடலங்கள், ஒழுகும் குருதியோடு
எதிர் நீச்சல் போடும் போராளிகள்

யுத்த பூமியில் பிண வாடை நாறி வீசிட
செத்த உடலங்களை நாய்களும், நரிகளும் கூட
காக்கைகளும், கழுகுகளும் உண்டு களைத்திட
பசு மேய்ந்த பூமி தீ மேயக் கரியானதே

செம் மண்ணும் கொதித்துத் தணல் பூக்க
நீலவானும் புகையால் முகம் கறுக்க
காலனின் கோரத் தாண்டவத்தால்
எங்கள் தாயகம் எரியும் சுடலையானது

எங்கள் காலம் போராடிக் கழிய-தமிழ்
ஈழக் கனவு கொடுந் துயரரோடு முடிய
உலகெங்கும் அகதியாய் எம் இனம் அலைய
என் மகனே நான் மடிகின்றேன்

வீழ்ந்த தாயகம் வீறுகொண்டெழ-நாளைய விடியலில்
நம்மவர் புதிய சுதந்திரம் கொண்டாடிட
மறவாதே மகனே உன் கடமையை

முயற்சிகள் ஓயும்வரை தோல்விகள் நமக்கில்லை
விழுவதெல்லாம் எழுவதற்கே-மடிவதெல்லாம் முளைப்பதற்கே
நம்பிக்கையைத் தளரவிடாதே என் மகனே
நாளை உனதே! நம் தாயகம் என்றும் நமதே!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-1-6.2023*

# நம் நாடு

---

இனத் தீயில் வெந்த தேசம், மதம், இனம் கடந்து
மண்ணைச் சிவப்பாக்கி-நெஞ்சை கனலாக்கி
சோகம் யாவருக்கும் சொந்தமாக
மூவினமும் ஆறாய்ச் சிந்திய இரத்தம்

அநாதை, விதவை, அங்கவீனராய் மானுடம் சிதைய
வீடும், ஊரும் தீப்பிடிக்க வெற்றி தேல்வி ஊசலாட
ஓசையின்றி அலைபாயும் கண்ணீர்
இசையின்றித் தொடரும் அழுகை

சக்கர நாற்காலிகளில், வெள்ளைப் பிரம்புகளில்
ஊன்று கோல்களில், ஜெயப்பூர் கால்களில்
ஊனமுற்ற இளைஞர் வாழ்வு ஒடுங்கிட-கடவுளிடம்
தஞ்சம் கோரும் கைமை.

வறுமை, இருண்ட யுகத்தின் புதிய உறவாக
வாழ்வு கல்வாரிப் பாதையாக
நிகழ்காலம் நரகாகும்-நடைப்பிணமாய்
மானுடம் உருவழியும்.

நிலவில்ல வானாய், மலரில்லா வனமாய், நீரில்லாச்
சுனையாய், வாழ்வு நாறிட
இனவாதம் பேசி நாடாளுமன்றம் கூடும்.
ஈழத்தமிழன் ஒற்றுமை பகல் கனவாகும்.

அன்பு துறந்து, ஆயுதம் தாங்கிய துறவு-
அழிவுக்கு வழிவகுத்த கொடு நிகழ்வு
நீதி, சமத்துவம் பகல் கனவு
இனவாத அரசியலோ நிஜமான நிகழ்வு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-10-8-2023

# நம் தேசம்

விண்ணில் பறந்த யுத்த விமானங்களின் குண்டு மழையால்
மனைகளும் மாடங்களும் இடிந்து வீழ்ந்திட-நெஞ்சிலே காங்கை
மாண்ட உடலங்களில் பொங்கிடும் குருதிக் கங்கை

நாய் ஒன்று வாலை நிமிர்த்தி காலை உயர்த்தி
சிறுநீர் கழித்தபின்-வாசைன முகரக் காற்றைக் கசக்கிட
தென்றலில் வந்தது கருகும் தேகத்தின் வாசம்
தேமதுரத் தமிழன் தீக்குளிக்கும் கொடூரம்

தீய்ந்து கனிந்த டயர்களில் தீயாகிப், புகையாகி
தமிழ் கன்னியரும் காளையரும் வானேகிட
கண்ணீரில் மூழ்கி சோகத்தில் கரையும்
பிள்ளைச் செல்வத்தை இழந்த பெற்றோர்

நீல வானிற்கு புதுவண்ணம் பூசிட வான் எழுந்த கோரக் கரும்புகை
காய்ந்த மண்ணை ஈரமாக்கிட குருதி சிந்தி மகிழ்ந்தது கொடும்பகை
வானுயர்ந்த கோபுரங்களை-குண்டுகள் வாட்டி வீழ்த்திடக்-யுத்தக்
கப்பலைப் புரட்டி சுனாமியை வியக்க வைத்த கடற்கண்ணி

வடகிழக்கின் சுதந்திர நெருப்பு தென்னிலங்கையைத்
தீய்த்திட-கண்ணீரில் உருவழியும் தாய்கள்
காட்டிலே உலாவரும் விடுதலைப் புலிகளாய்ச் சேய்கள்

ஓயாத அசுரர் தொல்லையிலும்- தம்மை ஆகுதியாக்கி
சுதந்திர யாகம் செய்திடும் தமிழ் முனிகள்
சோகப் புயலிலும் கண்ணீர்க் கங்கைகளால்
கடவுளைப் பூஜித்திடும் தமிழ் சிங்களத் தாய்கள்

நெல் மணியும், முத்தும் இரத்தினமும் விளையும் பூமியில்
முகமில்லா முண்டங்களும், தீயுண்ட சடலங்களும்
தேசமோ யுத்தவாடையால் நாறிட-வீசு தென்றலும்
தீய்ந்து மணந்தது தேசம் எரிந்ததனால்-தெள்ளிய
நீரோடைகளும் நாறின-வெந்து மிதந்த பிணங்களினால்

வாங்கும், பிரித்தும், பஜனைகளும், பூஜைகளும்
ஒலித்திடும் பூமி.-குண்டு சப்தங்களினால்
யுத்த பூமியானதென்ன? ஒப்பாரிகளினால்
நாளும் இழவு வீடாவதென்ன?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**

*Pax Ravichandra-2-4-2023*

# நான்காம் வர்ணம்

---

பூகம்பத்தின் வித்துக்களாய் கண்ணி வெடிகளை விதைத்து
கடற்கண்ணிகளால் -கத்தும் கடலுக்கும் தீ மூட்டி
நடமாடும் வெடிகுண்டுகளாய்- குமுறும் எரிமலைகளாய்
சிங்களத்தை நடுநடுங்க வைத்த கரும்புலிகள்

விட மாலை சூடி-களமாடி, வான் படை கொண்டு போராடி
கத்தும் கடலேழும்-கண்டம் ஐந்தும் கேட்டிட
**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**
கர்ச்சித்த தமிழ் ஈழ விடுதலைப்புலிகள்

வல்லரசுக்கும் வணங்காமுடியாய்
வளர்த்த தேசத்துக்கும் அடங்காத் தமிழனாய்
வாழ்ந்த வேங்கைகள் வரலாறு- காலத்தால் அழியாது

கொட்டும் தீ மழையில் விளையாடி
கொல்லும் எரிமலைக் குழம்பில் நீராடி
தீய்ந்த வித்துடல் சாம்பலை நீறாக்கி
யுத்த பூமியில் ருத்திர தாண்டவமாடிய சிவசக்தி

புலிகளை வீழ்த்திட -செங்கோட்டையில்
சகுனியின் புதிய சூதாட்டங்கள்.
சாணக்கியனின் இராஜதந்திரங்கள்
ஈழ எட்டப்பர்களின் காட்டிக்கொடுப்புகள்

மூழ்கடித்த ஆயுதகப்பல்களின் -பின்னால்
மூவர்ணகொடியின் பளபளப்பு
பல்குழல் பீரங்கிகள் மூட்டிடும் கொடுந்தீக்கு
பாகிஸ்தானின் ஓயாத பங்களிப்பு

சிங்களச் சிங்கம் வாளைத் தீட்டிட-அசோகச் சக்கரம்,
சீவர ஆடை பேரினவாதத்தை மூட்டிட தம்மச் சக்கரம்
காட்டிக் கொடுத்த கருணாவோ எட்டப்பன்-
வணங்கா முடியாய் களத்தில் வீழ்ந்த கட்டப்பொம்மன்

வாலியை வதைத்த இராம நீதி-வீர அபிமன்யுவைக்
கொன்ற துஷ்டரோ கௌரவ ஜாதி-துரோணரை வீழ்த்த
தருமன் சொன்ன வார்த்தையோ அநீதி

தமிழர் தாயகம் தீப்பற்றி எரிந்திட
புதிய தீபாவளிக் கொண்டாட்டங்கள்
அசோகச் சக்கரத்திலோ குருதிக் கறை
தமிழ் அன்னை முகத்திலோ கண்ணீர்க் கறை

பிரித்தின் பல்லவிக்குள் அனுபல்லவியாய்
காவிகளின் யுத்த கோஷங்கள்
அகிம்சைப் புரட்சியின் அஸ்தமனச் சிவப்பாய்-
அப்பாவித்த தமிழரின் இரத்தங்கள்

பேரினவாத அரசுக்குச்-சாமரம் வீசும் காந்திய வாரிசு-
தமிழீழ விடுதலைப் புலிகளோ-கட்டபொம்மன்
பகத்சிங்-சுகதேவ்- ராஜகுரு வரிசையின் புதிய வாரிசு

குருதிச் சேற்றில் புதைந்த அசோகசக்கரம்
மூவர்ணகொடியிலும் நான்காம் வர்ணமாய்
ஈழ மறவர் சிந்திடும் இரத்தம்-
இந்திய இராஜதந்திரம் வழிநடத்திய யுத்தம்

ஈழ அன்னையை அம்மணமாக்கும் கௌரவ,
செங்கோட்டை மன்னர் உறவோ அரசியல் விபச்சாரம்
தமிழக அரசியலோ வெற்று வியாபாரம்

பழுதானதோ காந்தியின் இராட்டினம் -இல்லை
அம்மை சோனியா காந்தியிடம் அடைமானப் பொருளானதோ?
பாஞ்சாலிக்குச் சேலை கொடுத்த புராண அவதாரம்
கதர் சேலைதானும் கொடுக்க மனமிரங்காத இந்திய அரசாங்கம்

கர்ணனை வீழ்த்த குந்திக்கும், பார்த்தனுக்கும்,
இந்திரனுக்கும் இந்திய நாராயணனின் கீதை
நம்பிய தமிழன் நெஞ்சில் பாய்ந்த கணையில்
இந்தியாவின் சாணக்கியமோ இழிந்த பாதை

அன்னையர் சூடிய விழுப்புண்ணோ ஆறாத காயம்
அழகு மங்கையர் சூடிய விழுப்புண்ணோ மறையாத ஆகாயம்
அறுந்த தாலிகளும், கலைந்த திலகமும் கைமைக்கோலம்
இந்திய சாணக்கியத்தில் சத்தியத்தின் ஏழ்மைக்கோலம்
***ஹே ராம்-யா அல்லா-புத்த சரணாய்***

***சப்வே தத்தா பவங்க துதி தத்தா***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra - 28.3.2023

# எரி நரகம்

---

குடும்பிமலைக் காட்டில்-அஞ்சி நடுங்கி,
ஒடுங்கி வாழும் உயிரினங்கள்-கதவும்
காவலருமில்லாக் கோட்டையை கண்ணுறங்காது
காவல் காத்திடும் நிலக்கண்ணி, பொறி வெடிகள்.

உலவும் பேய்களும், ஊரும் மலைப்பாம்புகளும்
ஊனொடுங்க, உயிரொடுங்க விலகி நடந்திட,
மறந்து உள் நுழைந்த உயிர்களை-மாலையிட்டு
மரணம் வரவேற்றிடும் மயான பூமியிது.

சூரியனும் பயந்தே மெல்லத் தலை நீட்டும்
பாயும் குரங்கும் குரல் எழுப்ப அஞ்சும்-காயும்
நிலவும் காணும் “காட்சியால்” மெலிந்து வாடும்
ஊளையிட்டு நரிகள் சோகம் சொல்லும்

கோட்டானும், கூகைகளும் குடி புகுந்திட
பாம்புகளும், விஷ ஜந்துக்களும் பல்கிப்பெருகிட
ஆவியை உறையச் செய்யும் அச்சத்தின் ஆட்சி

அச்சம் ஆளும் அடவியில்
அஞ்சாத வேங்கைகளின் படைவீடு
பார்க்கப் பயங்கரமாய்க் காட்சியளிக்கும்
சிறைக் கூடம்- ஒரு எரி நரகம்.

மலசல வாடை வயிற்றைக் குமட்டிட-சுவர்கள்
சொல்லும் குருதிக் கதைகள் கண்ணீரை வரவழைத்திட
நிமிர்ந்து நிற்கவும், முடங்கித் தூங்கவுமானஅறைக்குள்
அடங்கிப்போன ஆயிரமாயிரம் உயிர்கள்.

கூண்டுக்கு வெளியே, சிமெந்துத் தரையில்
இரும்பு வளையங்கள்-அதில் பிணையுண்ட
விலங்குகளாய் புலம்பிக் கிடக்கும் கைதிகள்

வதையால் எழுந்திடும் ஓலம் வானைத் தொட்டிட
கிளையில் குந்திக் கிடந்த மந்திகள் அஞ்சி நடுங்கிக்
கொப்பிழக்க பாயும்-இரைதேடி அலையும் மலைப்பாம்பும்
உடல் ஒடுக்கி குழிகளில் பயந்து பதுங்கும்.
குளிர் காய்ந்த முதலையும், கரை துறந்து
குளத்தில் தலை மறைக்கும்

பூட்டிய இரும்புத் தளைகள் "அசைவை" நிறுத்திட,
வதையால் சிந்திய குருதியும், சிறுநீரும், தரையிலும்,
சுவரிலும் கோலங்கள் போட்டிட-பிண வாடைவீசும்
அறைகளுக்குள் நடைப்பிணங்களாய்க் கைதிகள்.

இன்றோ, நாளையோ பேயுண்ண, நரியுண்ண
முதலைகள், காட்டுப்பன்றிகள் உண்டிட
விருந்தாய் இவர் பிணங்கள்.

முட்கம்பிச் சிறையில் முடங்கிட்ட கைதி,
நின்று வாழ்ந்து, நின்று தூங்கி, நின்று கழித்து,
நின்று மாண்டார் நினைவில் வஞ்சம் பெருக
நின்று போகும் மூச்சிலும் சாபம் நிலைக்க

கண்கள் பிடுங்கி ஒளியிழக்க, கைகால்களும்
நகமிழந்து களையிழக்க-கனலிடை வாட்டி,
நீரில் மூழ்கடித்து நினைவிழக்க வதைகள்.

மனித உரிமைகளை மறுதலித்த
போராளிகளும்-பயங்கரவாதிகளே!,
விடுதலைப் போராட்டத்தில் சிறைப்பட்டு.
சிறுமையுற்றதும் தமிழினமே

இரத்தம் கேட்கும் யுத்தத்தில்-ஓயாத
அன்னை விதைவைகளின் அழுகைச் சத்தம்
கண்ணீரிலும், குருதியிலும் கழிகின்ற வாழ்வில்
கையளவு மனதுக்குள் கடலளவு சோகம்
என்னே கொடுமை ! விடுதலையின் இயக்கமோ
பயங்கரவாதத்தின் இலக்கணமான சிறுமை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-05-05-23*

# ருத்திர தரிசனம்

| எண் | பொருளடக்கம் | |
|---|---|---|
| 62 | காடும் கழனியும் | |
| 63 | காலடிச் சுவடுகள் | |
| 64 | காலனும், கடவுளும் | |
| 65 | கல்லறை | |
| 66 | கல்வாரி | |
| 67 | கண் மறைந்த சொந்தங்கள் | |
| 68 | கானகத்துக் கரும் குயில்கள் | |
| 69 | கானகத்தில் புதைந்த பூச்சரங்கள் | |
| 70 | கானல் நீர் | |
| 71 | காணாமற்போன கனவுகள் | |
| 72 | கனவாய்ப்போன தமிழ் ஈழம் | |
| 73 | கனவும் நனவும் | |
| 74 | கண்ணீர் கங்கைகளும் குருதியாறுகளும் | |
| 75 | காணி நிலம் வேண்டும் | |
| 76 | கண்ணி வெடி | |
| 77 | கன்னியோ? கரும்புலியோ? | |
| 78 | கண்தூவும் மழை | |
| 79 | கபாலம் | |
| 80 | கறைகள் | |
| 81 | காரிருள் | |
| 82 | கறுப்புச் சிவப்பு உண்மை | |
| 83 | கருவானம் | |
| 84 | கவிஞனும் போராளியும் | |
| 85 | காய்ந்த புல் | |
| 86 | கொக்கட்டிச்சோலை | |
| 87 | கொலைக்களம் | |
| 88 | கோவனம் இழந்த ஆண்டிகள் | |
| 89 | குயில் தோப்பு | |
| 90 | குமுறல் | |
| 91 | குருதி நிறம் மாறவில்லை | |
| 92 | குருதிப் பூக்கள் | |
| 93 | குருதியும், கண்ணீரும் | |
| 94 | மா வீரன் | |
| 95 | சிறுவர் படையணி | |
| 96 | மலராத சுதந்திரம் | |
| 97 | மல்லிகைச் செடி | |